# கல்கி



KALKI
18.5.2003
ரூ .6.00

கதை கேளு
கதை கேளு!
–இலவச இணைப்பு

## சாக்லேட் கனவுகள்!

உ

# சதாபிஷேகம்

# ஸ்ரீ N.V. கிருஷ்ணன்
# ஸ்ரீமதி ஜானகி கிருஷ்ணன்

16.5.2003



வாழ்த்த வயதில்லை
வணங்குகிறோம்!

வெங்கடேஸ்வரன்
(எ) சுகுமார்
ரேவதி
நந்தா
அர்ச்சனா

சித்ரா
சாயிரமணி
வித்யா
வைத்தியநாதன்
அனுஷா
அபர்ணா
வர்ஷிணி

விஜயலக்ஷ்மி
முத்து வெங்கட்ராமன்
ரம்யா
நிரஞ்சன்

உள்ளே...

கவர் ஸ்டோரி 88

பாரதிராஜாவின் புது சிஷ்யை! 24

நட்சத்திரச் சந்திப்பு 52



பிட்ஸ் பஜார்! 20



கல்கி

18.5.2003

# வீரப்பன் இதுக்காகவா பிடிபடலை!

• விவேக்



இங்கிலாந்து கால் பந்து அணியின் கேப்டன் பதவியிலிருந்து தூக்கப்பட்டாலும் டேவிட் பெக்கம் தொடர்ந்து செய்திகளில் இருந்து வருகிறார். அவர் ஸ்பெயின் அணிக்காக விளையாடுவாரா என்ற பரபரப்பான வதந்தி பரவிக் கொண்டிருக்கிறது. இல்லை என்று அவர் கூறியும் வதந்தியின் வேகம் குறைவதாகத் தெரியவில்லை. டேவிட் பெக்கம் குறித்த இன்னொரு சுவாரஸ்யமான தகவலை ஈ.எஸ்.பி.என்.னில் கூறினார்கள். உலகக் கால்பந்து வீரர்களிலேயே பெரும் கோடீஸ்வரர் இவர்தானாம்!

காதல் சடுகுடு படத்தில் விவேக்கின் ஒரு குறிப்பிட்ட நகைச்சுவை காட்சியைத்தான் சானல்கள் தோறும் ஒளிபரப்புகிறார்கள். நவீன மனுநீதி சோழனாக விவேக். பலாத்காரம் செய்த ஒருவன் இரக்கம் காட்டுமாறு கெஞ்ச, நெற்றியிலிருந்து கழுத்து மார்பு என்று மேலும் மேலும் துப்பாக்கியை இறக்கிக் காண்பித்துக் கீழே சுடுகிறார் விவேக். சிரிக்க வைப்பதற்காக, எந்த நாகரிக அளவீடுகளையுமே பார்க்க வேண்டாம் என்றால் எப்படி?

எஸ்.வி.வி. இல்லாத குறையைத் தீர்க்க 'சென்னை' என்ற சானலை ஹாத்வே ஒளிபரப்புகிறது. கொஞ்சம் திரைப்படப் பாடல்களும் படங்களும் (ஹாலிவுட் படங்கள் உட்பட) என்று அவியலாக இடம் பெறும் நிகழ்ச்சிகள் சுவாரசியமாகவே உள்ளன. ஆனால் விஜய்யில் இடம் பெற்ற நிகழ்ச்சிகளையே பெரும்பாலும் ஒளிபரப்புகிறார்கள். 'இன்று மகாத்மா பிறந்த நாள். அவர் அகிம்சாவழியைக் கொண்டாடுவோம்' என்றும் 'தீபாவளித் திருநாளாகிய இன்று' என்றும் ஜேம்ஸ் வசந்தனும் மமதி சாரியும் ஏப்ரல் மே மாதங்களில் சொல்லும் போது பகீரென்கிறது. கொஞ்சம் எடிட் செய்யும் சிரமத்தை மேற்கொள்ளலாமே!

ஜெயா டீவியின் "காலச் சுவடுகளில்" பெரம்பலூரில் உள்ள ரஞ்சன்கோட்டை

யைக் காட்டினார்கள். அழிவின் சின்னமாக அது இருந்தது. ஒரு காலத்தில் இந்த இடத்தில்தான் ராஜாங்கம் நடந்தது. இந்த இடத்தில்தான் பொதுமக்களின் குறைகளைக் கேட்டார்கள். இதுதான் ராணி கோலோச்சிய இடம் என்று விளக்கினார்கள். நமக்கு ஏனோ ராணி மேரிக் கல்லூரியின் நினைவு வந்தது.

ராஜ் டிஜிட்டல் ப்ளஸ் சானலில் தொலைபேசியில் நீங்கள் கேட்கும் பாடலை ஒளிபரப்புகிறார்கள். ஒரே நிபந்தனை அது பழைய திரைப் படப்பாடலாக இருக்கக் கூடாது. தொலைபேசியை எடுத்தவுடனேயே என்ன பாடல் வேண்டும் என்று கேட்டுவிட்டு பிறகு கொஞ்ச நேரம் "நீங்கள் படிக்கிறீர்களா? வேலை செய்கிறீர்களா? பொழுது போக்கு என்ன?" என்பதுபோல் கேட்கிறார்கள். அதாவது இப்படிக் கேட்டுக் கொண்டிருக்கும்போதே, அவர்கள் கேட்ட திரைப்பட பாடல் அடங்கிய வீடியோவை அல்லது சிடியை தேடி எடுத்து வைத்துக் கொள்ள இந்த ஏற்பாடு. ஆனால் ஒருவர் "பார்த்தாலே பரவசம் படத்திலேயிருந்து ஒரு பாட்டைப் போடுங்க" என்று கேட்டவுடன், "இதோ போடறோம்" என்று கூறிவிட்டு பிற வழக்கமான கேள்விகளைக் கேட்டார் தொகுப்பாளப் பெண்மணி. ரொம்ப நேரத்துக்கு சிடி அகப்படவில்லை போலிருக்கிறது. தொலைபேசியில் தொடர்பு கொண்டவரின் முழு ஜாதகத்தையும் கேட்டுவிட்டு அடுத்த ரவுண்ட் அதே கேள்விகளைக் கேட்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுவிட்டது.



* டேவிட் பெக்கம்

வீரப்பனை ஏன் இன்னும் பிடிக்கவில்லை என்று ஒருவர் ராஜ் டி.வி.யின் "அகட விகடத்தில்' கேள்வி எழுப்ப, சோ இயக்கிய 'உண்மையே உன் விலை என்ன?' திரைப்படத்தில் இடம் பெறும் ஒரு காட்சி குறிப்பிடப்பட்டது. விபச்சார வழக்கில் சிக்கி நீதிமன்றக் கூண்டில் ஏறும் கதாநாயகி "என் வீட்டுக்கு வந்து போனவர்களின் பட்டியலை நான் குறிப்பிடவா?" என்று கேட்க, அன்று ஐந்து மணி ஆகிவிட்டதால் நீதிமன்றம் கலைகிறது. அடுத்த நாள் போலீஸ் இன்ஸ்பெக்டர் முதல் நீதிபதிவரை பலரும் ஆப்ஸெண்ட்! "இதுபோல வீரப்பன் சிக்கினால் தாங்களும் மாட்டிக் கொள்வோம் என்ற நிலை பலருக்கும் இருப்பதால்தான் அவன் இன்னமும் பிடிபடாமலே இருக்கிறான்" என்றார் பாஸ்கரராவ்.

- சேனல் பாய்

ரிமோட்




கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர் :
கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
செ. ஏக்நாத் ராஜ்
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkiweekly.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

# "ஒரு துளி சர்ச்சை அவசியம்!"

இந்திரா நூயி

சட்டென்று பார்த்தால் கிரண் பேடியின் இளைய சகோதரி போல் தோன்றுகிறார். சென்னைத் தமிழ் காட்டிக் கொடுக்கிறது. சாம்பல் வண்ணத்தில் நட்சத்திரப் பொட்டுகள் தெறித்த காஞ்சிப் பட்டுச் சேலை, உயர் ரசனையை வெளிப்படுத்துகிறது. நம் கேள்விகளுக்குப் பளிச் பளிச்சென்று வெளிப்படும் பதில்கள் ஜெயித்துக் காட்டும் உறுதியைப் பறைசாற்றுகின்றன. சர்வதேச வெற்றி நிறுவனமான பெப்ஸியின் தலைவர் (பிரெஸிடண்ட்), தலைமை நிதி அதிகாரி தமிழ்ப் பெண் இந்திரா நூயி. க்ளீவ்லேண்ட் தியாகராஜ ஆராதனையைத் துவக்கி வைக்க வந்த இவரிடம் சில நிமிடங்கள் உரையாட வாய்ப்புக் கிடைத்தது.

*இன்று இந்த உயர்பதவியில் நீங்கள் இருப்பதற்கு முக்கியமான காரணம் என்னவென்று சொல்வீர்கள்?*

கணக்குப் பார்க்காத உழைப்பு, குடும்பத்தின் ஆதரவு, ஏகப்பட்ட அதிர்ஷ்டம். என்னைவிட புத்திசாலிகள் நிறையவே இருக்கிறார்கள். இவர்கள் என்னைக் காட்டிலும் அதிகம் உழைக்கவும் செய்கிறார்கள். ஆனால் அதிர்ஷ்டம் என்னை ஆதரிக்கிறது. என் அம்மா செய்யும் நித்திய பூஜையின் பலன் இது என்பேன்.

*அதிர்ஷ்டத்தில் நிறைய நம்பிக்கை வைத்துள்ளீர்கள் போலிருக்கிறது. நீங்கள் படித்த ஐஐஎம். கல்லூரி மாணவர்களைச் சமீபத்தில் சந்தித்தபோதுகூட சிறந்த தலைமைப் பண்புகள் பெற அதிர்ஷ்டமும் ஓரளவு அமானுஷ்ய வலிமையும் வேண்டும் என்று கூறியிருக்கிறீர்களே...!*

அதைக் கொஞ்சம் விளக்க வேண்டும். நேர்ப்பாதையில் நடந்து எல்லாவற்றையும் சரியாகச் செய்ய வேண்டியது அவசியம் தான். ஆனால் ஒரு சிறந்த தலைவராக விரும்புபவர் தன்னை ஞாபகம் வைத்துக் கொள்ளும் வகையில், எதையாவது அசத்தலாகச் செய்தாக வேண்டும். ஒரு துளி சர்ச்சை இருந்தாலும் ரொம்ப நல்லது. இப்படி அசத்தக் கூடிய


• அம்மாவுடன்



தலைவர்களைப் பாருங்கள். அவர்களைப் பார்த்துக் கற்றுக் கொள்ளுங்கள் என்றுதான் கொல்கத்தா மாணவர்களிடம் சொன்னேன்.

உங்கள் பெப்ஸி நிறுவனம் இந்தியாவில் அதிரடியாகப் புகுந்திருக்கிறது. உலக மயமாதலால் இந்தியப் பொருளாதாரம் அச்சுறுத்தப்பட்டிருக்கிற இன்றைய சூழ்நிலையில், பெப்ஸி இந்த நாட்டுக்கு என்ன செய்திருக்கிறது என்று நினைக்கிறீர்கள்?

இந்தியாவிலிருந்து நிறைய ஏற்றுமதி செய்ய வேண்டும் என்ற நிபந்தனையின் பேரில்தான் எங்களை உள்ளே நுழைய அனுமதித்தார்கள் - பெப்ஸி வருகைக்குப் பிறகு தக்காளி, மிளகாய்ப் பயிரிடும் முறைகள் புரட்சிகரமாக மாறியிருக்கின்றன. உலகத் தரத்தில் தக்காளி விளைகிறது. இந்தியாவிலிருந்து மிக அதிகமான உணவுப் பண்டம் ஏற்றுமதி செய்யும் நிறுவனமாக இப்போது பெப்ஸி விளங்குகிறது. இங்கே நாங்கள் இறக்குமதி செய்வதைக் காட்டிலும் ஏற்றுமதி செய்வது அதிகம். பல்லாயிரக் கணக்கான ஊழியர்களுக்கு நல்ல சம்பளத்தில் வேலை கிடைத்திருக்கிறது. இப்போது இந்தியாவில் எல்லா இடங்களிலும் பெப்ஸி கிடைப்பதால், தூய்மையான குடிநீர் கிடைக்காத பிரச்னைகூட பெருமளவு தீர்ந்திருக்கிறது என்பேன்.

குடிநீர் கிடைக்கா

**சீதா ரவி**



• ஷில்பா

# கல்கி வழங்கிய பரிசு!

க்ளீவ்லேண்ட் இசைப் போட்டிகளில் பங்கேற்ற நூற்றியெண்பது குழந்தைகளுள் இருவருக்கு (ஒரு பெண், ஒரு ஆண்) பாவத்துக்கான சிறப்புப் பரிசு வழங்கியது கல்கி.

பரிசுகளைப் பெற்றவர்கள் - ராம கிருஷ்ணன் (கலிபோர்னியா) ஷில்பா கிருஷ்ணன் (ஒஹையோ)

மூன்று பாடல்கள் பாடத் தயாராய் வரவேண்டும். அவற்றுள் நடுவர்கள் ஒன்றைத் தேர்வு செய்து பாடச் சொல்வார்கள். ஐந்து நிமிடம்தான் அவகாசம். பரிசு: அழகான சுருதிப் பெட்டி.

ராமகிருஷ்ணன் பாடியது 'அர்த்தநாரீஸ்வரம்' என்ற தீக்ஷிதர் கீர்த்தனை - குமுதக்ரியா ராகம்.

ஆறேழு ஆண்டுகளாகப் பாட்டு கற்று வரும் ராமகிருஷ்ணனுக்கு வயது பதிமூன்று. இந்தப் போட்டிக்காக இரண்டு வாரம் கடுமையான பயிற்சி செய்திருக்கிறார். பாவத்துக்கான பரிசு தவிர, வேறு மூன்று பிரிவுகளிலும் பரிசுகள் பெற்றுள்ளார். அப்பா சுப்ரமண்யமூர்த்தி என்டெக்ஸால்வ் என்ற சாஃப்ட்வேர் நிறுவனம் நடத்துகிறார். அம்மா இந்துமதி எஸ்.ராமநாதனின் சிஷ்யை மைதிலி ஸ்ரீநிவாஸனிடம் இசை பயின்றவர். பத்மா குட்டி என்பவரிடம் லாஸ் ஏஞ்சலஸில் கற்று வரும் ராமகிருஷ்ணன், வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் டெல்லி சுந்தரராஜன், வைரமங்கலம் லக்ஷ்மி நாராயணன், வைகம் ஜெயச்சந்திரன் போன்றோரிடம் சிறப்புப் பயிற்சி பெறுவதுண்டு.

''சனி - ஞாயிறு மட்டும்தான் பயிற்சிக்கான நேரம் கிடைக்கும்'' என்று கூறும் இந்தச் சிறுவன் பெரிய வித்வான்களைப் பின்பற்றிப் பாடுவதைக் கேட்க களிப்பாக இருக்கிறது. செம்மங்குடிதான் இவன் அபிமான பாடகராம்.



ராம கிருஷ்ணன்

ஷில்பா கிருஷ்ணன் இன்னமும் விளையாட்டுச் சிறுமிதான். கொலம்பஸ் நகரில் வகுப்பெடுக்கும் ஞானம் சுப்ரமணியனிடம் பயின்று வருகிறார். தியாகராஜரின் பண்டுரீதிகொலு (ஹம்ச நாதம்) இவருக்குப் பரிசு பெற்றுத் தந்தது.

''ராமாயணம் கதை கேட்கவும் கண்ணாடி முன் நின்று நாடகம் நடிக்கவும் ரொம்பப் பிடிக்கும்'' என்று சொல்லும் ஷில்பாவுக்கு வயது எட்டு. அப்பா அம்மாவுடன், தாத்தா பாட்டியும் சேர்ந்து ஷில்பாவைக் கவனித்துக் கொள்கிறார்கள். ஷில்பாவின் குருவோ,'எல்லாம் டி.ஆர்.எஸ்ஸின் ஆசியால் நிகழ்கிறது' என்று தமது குரு டி.ஆர்.சுப்ரமண்யமுக்கு வந்தனம் சொல்கிறார்!



• க்ளீவ்லேண்ட் சுந்தரம்

விட்டால் பெப்ஸிதான் குடிக்கவேண்டும் என்பதில்லையே... இளநீர் குடிக்கலாம் அல்லவா – இயற்கையான அதன் தூய்மைக்கு எது ஈடாக முடியும்?

தேர்வு செய்யும் உரிமை என்பது தானே ஜனநாயகம்...

*அதனால்தான் பெப்ஸி பானத்தை 'புதிய தலைமுறையின் தேர்வு' (choice of a new generation) என்று விளம்பரப்படுத்தியிருக்கிறீர்களா...?*

அது எங்கள் விற்பனைப் பிரிவு உருவாக்கிய விளம்பர வாசகம்.

*பெப்ஸியின் அடுத்த தலைமைச் செயல் அதிகாரி நீங்கள்தான் என்று சொல்கிறார்களே...*

சொல்லுகிற எல்லாம் நடந்து விடுவதில்லை....

*சரி, நடந்தால் – நீங்கள் சி.ஈ.ஓ. ஆனால் – செய்கிற முதல் காரியம் என்னவாக இருக்கும்.*

அம்மாவை அழைத்துக் கொண்டு திருப்பதி கோயிலுக்குப் போவேன்!

*உங்கள் குடும்பத்தைப் பற்றிச் சொல்லுங்கள்...*

அப்பா இப்போது இல்லை. அம்மா என்னோடு வந்திருக்கிறார். ஒரு அக்காவும் தம்பியும் இருக்கிறார்கள். தம்பிதான் படிப்பில் ரொம்ப கெட்டிக்காரன். மாநிலத்தில் முதலாக வந்தான். நான் கொல்கத்தா ஐ.ஐ.எம். செல்லும் முன் ஹோலி ஏஞ்ஜல்ஸ் பள்ளியிலும், பிறகு சென்னை கிறித்துவக் கல்லூரியிலும் படித்தேன். உயர்படிப்பு அமெரிக்காவில்...

*இந்தியாவுக்கு நீங்கள் என்ன திரும்பச் செய்திருக்கிறீர்கள்... பெப்ஸி தலைவர் என்ற முறையிலும்... தனிப்பட்ட முறையிலும்...?*

பெப்ஸி நிறுவனத்தின் கவனம் இந்தியாவிலிருந்து விலகாது. பல உயர் பதவிகளில் இந்தியர்கள் சுழற்சி முறையில் இடம்பெறும்படி செய்து வருகிறோம். தனிப்பட்ட முறையில் என் நாட்டின் வரலாற்று, பண்பாட்டுச் சிறப்பு குறித்து எனக்கு மிகுந்த பெருமிதம் உண்டு. என்னை வளர்த்த நிறுவனங்களுக்கு என்னால் இயன்ற உதவிகள் செய்து வருகிறேன். எங்களுக்கு இரண்டு பெண் குழந்தைகள் – பள்ளிக்கும் கல்லூரிக்கும் செல்லும் வயதில் இருக்கிறார்கள். செலவுகள் எங்களுக்கும் உண்டு. என் கணவரும் நானும் எங்களால் இயன்ற வரை, இந்திய நிறுவனங்களுக்குப் பண உதவி செய்கிறோம். ஹோலி ஏஞ்ஜல்ஸ் பள்ளிக்கு அளித்த தொகையைக் கொண்டு, பள்ளி நூலகக் கட்டடத்தைச் சீரமைத்தார்கள்.

## தூவான பேட்டிகள்!

***க்ளீவ்லேண்டில் தியாகராஜ ஆராதனை முற்றுப் பெறும் சமயம்...***

"க்ளீவ்லேண்ட் ஆராதனைக் குழுவில் மூன்று தம்பதியர் முக்கியமாகச் செயல்படுகிறோம். ஆனால் எங்களை இயக்கி வைப்பது ஓர் அரிய சக்தி" என்கிறார் க்ளீவ்லேண்ட் பாலு. அமைப்பு ரீதியாக பெரிய பலம் கிடையாது – வாலன்டியர்கள் பலர் முன் வருவதால் வேலை நடக்கிறது; ஒரு நிகழ்ச்சிக்குத்தான் நுழைவுக் கட்டணம்; மற்றவை இலவசம். கலைஞர்களுக்குப் பெரிய சன்மானமும் தருவதில்லை – அன்பும் விருந்தோம்பலும் ஈடுகட்டி விடுகின்றன. இந்த ஆண்டு ஆராதனைக்கு வந்த வித்வான் ஆர்.கே. ஸ்ரீகண்டன் இங்கே சிரார்த்தம் செய்ய வேண்டும் என்றார். ஒரு குறையும் இல்லாமல் அதைச் செய்து முடிக்க, அனைத்து ஏற்பாடுகளும் செய்து கொடுத்தோம். இதைப் போன்ற நல்லுறவு பேணும் முயற்சிகளால்தான், எங்கள் இசைவிழா செழித்து வளர்ந்திருக்கிறது. நன்கொடைகளை நம்பித்தான் நடக்கிறது."



• பாலு

"சவால்கள் இல்லாமலில்லை" என்கிறார் டொரொண்டோ வெங்கட்ராமன். இவர் கனடாவில் டொரொண்டோ நகரில் தியாகராஜ ஆராதனை நடத்தியவர். அதேபோல் க்ளீவ்லேண்டில் செய்ய வேண்டும் என்று சுந்தரம் முதலானோர் விரும்பவும், அவர்களுடன் கை கோத்துக்

கொண்டார்.

"இந்த ஆண்டு நிறைய கலைஞர்கள் கடைசி நிமிடத்தில் பயணத்தை ரத்து செய்ததுதான் பிரச்னையாகி விட்டது. நிகழ்ச்சிகளை மாற்றியமைத்து, தொய்வில்லாமல், எப்படியோ விழாவை நிறைவு செய்து விட்டோம்'' என்கிறார் வெங்கட்ராமன்.

அறிவிக்கப்பட்ட கலைஞர்களுள் டி.கே. மூர்த்தி, திருச்சி சங்கரன், சௌம்யா, பாம்பே ஜெய்ஸ்ரீ, எம்.எஸ்.ஷீலா ஆகியோர் பல்வேறு காரணங்களால் பங்கேற்கவில்லை.

கலைஞர்களின் பயண ஏற்பாடுகளைக் கவனிக்கும் பொறுப்பு வெங்கட்ராமனுக்கு. விஸா - பாஸ் - போர்ட் - டிக்கெட் தேதி என்று தலையைப் பிய்த்துக் கொள்ளும் வேலை. யாருக்கு எது தேவையென்றாலும் அவரைத்தான் போய்க் கேட்க வேண்டியிருக்கிறது.

"கொஞ்சம் சர்க்கஸ் வித்தைதான்... ஆனால் பழகிவிட்டது'' என்கிறார் டொராண்டோவில் பாரதி கலை மன்றச் செயலராகவும் விளங்கும் வெங்கட்ராமன். இவ்வாண்டு ஏர் – இந்தியா சலுகை விலையில் கலைஞர்களுக்கு விமான டிக்கெட் வழங்கியிருப்பதைக் குறிப்பிடுகிறார்.

மூத்த கலைஞர் என். ரமணி அனைத்து ஏற்பாடுகளையும் மனதாரப் பாராட்டுகிறார். ஆண்டுதோறும் வந்து அனேகமாக ஆராதனையின் அனைத்து தினங்களும் தங்கிச் செல்கிறார். குழந்தைகளுக்கான பாட்டுப் போட்டி நடுவராகவும் செயல்படும் இவர், இங்கே பெற்றோர் காட்டும் ஆர்வத்தால் குழந்தைகள் மிகச் சிறப்பாகப் பாடுவதாகக் கூறுகிறார்.

இளைய தலைமுறையைச் சேர்ந்த சஞ்சய் சுப்ரமண்யன், "அமெரிக்கா முழுவதுமிருந்து வரும் ரசிகர்களுக்கு நாம் பாட முடிகிறது; அது மட்டுமல்ல, பிற கலைஞர்களுடன் பேசிப் பழக வாய்ப்பு கிடைப்பதும் நல்ல விஷயம். இன்று காலை ரமணி மாமாவோடு (புல்லாங்குழல் ரமணி) அரை மணி நேரம் பேசிக் கொண்டிருந்தேன். சென்னையிலிருந்தால் இது சாத்தியமாகுமா...!'' என்று மற்றொரு கோணத்தில் திருப்தி காண்கிறார்.

கச்சேரிக்குக் கச்சேரி, கலைஞர்களை அறிமுகம் செய்து சிற்றுரை நிகழ்த்தும் க்ளீவ்லேண்ட் சுந்தரத்திடம், இந்த இசை விழா மிகப் பெரியதாக வளர்ந்து விட்டதைச் சுட்டிக் காட்டிக் கேட்கிறோம். "எதிர்வரும் ஆண்டுகளில் நிர்வாகப் பொறுப்பை விரிவுபடுத்தி பகிர்ந்தளிக்க வேண்டாமா...?''

"ஒரு கமிட்டி நிறுவலாம் என்றுதான் திட்டமிட்டிருக்கிறோம். தன்னார்வத் தொண்டர்களைக் கொண்டு பல்வேறு பொறுப்புகளைப் பிரித்துத் தரும் யோசனை இருக்கிறது. ஒரு சந்தா தொகை (ஐம்பது டாலர்?) வசூலித்து உறுப்பினர் சேர்க்கும் எண்ணமும் இருக்கிறது. ஆனால் இதனாலெல்லாம் கலைஞர்களுக்கும் எங்களுக்கும் நிலவி வருகிற நேரடி நல்லுறவு குறைந்து விடக் கூடாது என்பதில் கவனமாக இருப்போம்.



• கலகலப்பான கூட்டம்

அனேகக் கலைஞர்கள், தனிப்பட்ட முறையில் நண்பர்கள். எங்கள் பேரில் அவர்கள் கொண்டுள்ள நம்பிக்கை தான் அவர்களை இங்கே திரும்பத் திரும்ப ஈர்க்கிறது. அந்த நம்பிக்கைக்குப் பாத்திரமாகத் தொடர்ந்து இருப்போம்.

''இப்படிப்பட்ட விழாவில், சில மிகச் சாதாரணக் கலைஞர்கள் பங்கேற்க ஏன் இடம் கொடுக்க வேண்டும்...? எந்த அடிப்படையில் தேர்வு நடக்கிறது?'' என்று சுந்தரத்திடம் கேட்டோம்.

''மூத்த கலைஞர்கள், பிரபல கலைஞர்கள், மிகச் சிறந்த மேடைப் பாடகரல்லாது போனாலும் விஷய மறிந்த சங்கீத ஆசார்யர்கள்; முன்னேறி வரும் இடைநிலைக் கலைஞர்கள் என்று பலதரப்பட்டவர்களுக்கும் வாய்ப்புத் தர முயன்று வருகிறோம். சில சமயங்களில் எங்கள் தேர்வு தவறாகிப் போவதும் உண்டு..'' என்றார் சுந்தரம்.

தமிழ்ப்பட உலகம் மட்டுமல்ல, ஒட்டு மொத்தத் தமிழகமும் அதிர்ச்சியிலிருக்கிறது. நடிகையரின் தற்கொலைகளைக் கேள்விப் பட்டுப் பழகிப் போன தமிழர் மனநிலைக்கு ஒரு படத் தயாரிப்பாளரின் தற்கொலை, முற்றிலும் முதல்முறை என்பதால் இந்த அதிர்ச்சி!

ஜீ.வி.யின் தற்கொலைக்கு கந்து வட்டிக் காரர்கள் காரணமா? என்ற கோணத்திலும், காவல் துறை விசாரித்து வருகிறது. உண்மை அவ்வாறு இருக்கும் பட்சத்தில், வட்டிக் காரர்கள் தங்கள் பணப் பெட்டியின் பலம் கொண்டு தப்பித்துவிட அனுமதிக்கவே கூடாது என்று கோடம் பாக்கமே பொங்குகிறது.

# மிரட்டும் கந்துவட்டி



ஜீவி. போன்ற பெரிய தயாரிப்பாளரையே தற் கொலைக்குத் தூண்டும் அளவுக்கு நிர்ப்பந்தம் என் றால், அங்கேயிங்கே பிடுங்கி, ஒரு கோடிக்குப் படமெடுக்கிற சின்னத் தயாரிப்பாளர்களுக்கு ஒவ்வொரு படமும், நித்ய கண்டம்தான் என்கிறார் வட்டிக்குப் பணம் வாங்கி, பாதி பட மெடுத்துவிட்டு, மீதிப் படத்தை முடிக்க வட்டி பிரமுகருக்கே பட உரிமையை எழுதிக் கொடுத்திருக்கும் தயாரிப்பாளர் ஒருவர். (பெயரோ, படமோ வேண்டாமே).

"முன்பெல்லாம் சினிமாவுக்கு நிதி உதவி செய்கிறவர்கள், முறையான ஒப்பந்தம் போட்டு, வட்டிப் பணத்தை எடுத்துக் கொள்ளாமல் கடன் கொடுப்பார்கள். கடந்த ஐந்து ஆண்டுகளாக கந்து வட்டிக்காரர் களும் சினிமாவுக்குள் புகுந்து விட்டதால், விநியோகஸ்தர்கள், தயாரிப்பாளர்கள் என்ற பாகுபாடு இல்லாமல் எல்லாருமே இவர் களின் கட்டுப்பாட்டில் வந்துவிட்டார்கள். விரல் விட்டு எண்ணக் கூடிய பெரிய தயா ரிப்பாளர்களைத் தவிர, ஒரு கோடி முதல் மூன்று கோடி வரையிலான பட் ஜெட்டில் படமெடுக்கிற தயாரிப்பாளர்கள், மொத்த பட்ஜெட்டிற்கான முழுப் பணத்தைத் திரட்டிக் கொண்டு படமெடுக்க வருவ தில்லை. அதற்கு அவர்களிடம் சக்தியும் கிடையாது. பூஜை போட்டு முதல்கட்டப் படப்பிடிப்பு முடித்து, ஆடியோ கேசட் ரிலீஸ் செய்தால் தான், இப்போதெல்லாம் விநியோகஸ்தர்கள் ஓரளவாவது முன் பணம் தருகிறார்கள். அதை வைத்து இரண்டாம் கட்டப் படப் பிடிப்பை முடித்தால் இறுதிக் கட்டத்திற்கு வட்டிக்காரர்களிடம் தான் சரணாகதி ஆக வேண்டியிருக்கிறது. படம் முடிந்து வெளி யாகி வசூல் ஆகாவிட்டால், வட்டிக்காரர் கள் நாம் கொடுத்த 'பிளாங்க் செக்'கை வைத்து மிரட்டுவார்கள். இருக்கிற சொத் துக்கு 'பவர் ஆஃப் அட்டார்னி' எழுதி வாங்குவார்கள். மனசாட்சி இல்லாமல், "குடும்பத்தோடு தற்கொலை பண்ணிக்கிட்டு சாக வேண்டியது தானே" என்று நாக் கூசாமல் கேட்பார்கள். இப்படி கடனுக்குச்

• சிந்தாமணி முருகேசன்

சொத்தை இழந்து வாடகை வீட்டிற்குப் போனவர்களை, பெரிய பட்டியலே போடலாம் என்கிறார் இவர். 'ஒரு இனிய உதயம்', 'வைதேகி வந்தாச்சு' ஆகிய இரண்டு படங்களை எடுத்த பாண்டு என்ற தயாரிப்பாளர், சென்னை சென்ட்ரல் ரயில் நிலையத்தில் பிச்சை எடுத்துக் கொண்டிருந்ததையும், அவரது மறுவாழ்வுக்குத் தமிழ்த் திரைப்பட தயாரிப்பாளர்கள் சங்கம் நிதி உதவு அளித்திருப்பதையும் சுட்டிக் காட்டுகிறார்.





• ஜீ.வி.



• ரத்னம்



# தவிப்பில் தயாரிப்பாளர்கள்!

படத்தின் பட்ஜெட் உயர்ந்து, தயாரிப்பாளர் பட்ட தயாரிப்பாளர் மட்டும் சம்பளத்தைக் குறைக்க வேண்டும் என்று குரல் கொடுக்க முடியாது. முதலில் தைரியமும் தன்னம்பிக்கையும் வேண்டும். மார்க்கெட் உள்ள நடிகரைப் போட்டு படமெடுத்தால், நல்லவிலைக்கு விற்று விடலாம் என்று முடிவு செய்து விடுகிறார்கள். மார்க்கெட் உள்ள நடிகர் என்றாலும் படத்தை எங்களிடம் போட்டுக் காண்பிக்கும்போதே, இது தேறும்; தேறாது என்று முடிவு செய்து விட முடியும். இன்னொரு பக்கம் கோடிகளில் எடுக்கப்படும் படங்கள் திருட்டு விசிடியால்தான் நஷ்டத்தை சந்திக்கின்றன என்று சொல்கிறார்கள். என்னைப் பொருத்தவரை முக்கியப் பிரச்னை விசிடி இல்லை. கோடிகளாகிவிட்ட ஹீரோக்களின் சம்பளம்தான். ஹீரோக்களைப் பின் பற்றி இப்போது இயக்குனர்களும் கோடிகளில் சம்பளம் கேட்கிறார்கள். இதற்கும் தொடக்கத்திலேயே முடிவு கட்ட வேண்டும்" என்கிறார். (ஹீரோக்களின் நம்பப்படும் சம்பளப் பட்டியலைப் பெட்டியில் காண்க)

வட்டிக்காரர்களிடம் கை நீட்ட வேண்டிய அவசியத்தை உருவாக்குவது ஹீரோக்கள் தான் என்கிறார், சென்னை, காஞ்சிபுரம், திருவள்ளூர் மாவட்ட திரைப் பட விநியோகஸ்தர்கள் சங்கத் தலைவரான சிந்தாமணி முருகேசன்.

"பத்து வருடங்களுக்கு முன்பே நான் குரல் கொடுத்தேன். தயாரிப்புச் செலவு அதிகரிப்பதற்கு ஹீரோ சம்பளம்தான் காரணம் என்றேன். அன்று விட்டு விட்டார்கள், இன்று கதறுகிறார்கள். ஒரு புதிய ஹீரோவின் படம் சுமாராக ஓடினால்கூட, தயாரிப்பாளர்களே ஓடிப்போய் போட்டி போட்டு அவரை ஒப்பந்தம் செய்து சம்பளத்தை உயர்த்தி விடுகிறார்கள். ஒரு தனிப்

நாடாளுமன்ற உறுப்பினரும், நடிகர் சங்கச் செயலாளருமான சரத்குமார்,



ரஜினி (சொந்த தயாரிப்பு என்பதால் விற்பனையைப் பொறுத்து லாபம் 15 கோடி வரை)
கமல் 7.5 கோடி
விஜயகாந்த் 3.5 கோடி
அஜித் 3 கோடி
விஜய் 3 கோடி
விக்ரம் 2 கோடி
சரத் 1.5 கோடி
மாதவன் 1 கோடி
சூர்யா, ஸ்ரீகாந்த், சிம்பு தலா 50 லட்சம்.

"தயாரிப்பாளர்கள் ஒற்றுமையுடன் முன் வந்தால், இந்தப் பிரச்னையைப் பற்றி இருதரப்பும் பேசி ஒரு முடிவுக்கு வரலாம்" என்கிறார். "அதே நேரம் இந்தக் கதை வெற்றி பெறாது என்று தெரிந்தால், அதை ஆரம்பத்திலேயே தவிர்த்துவிட்டால் நஷ்டத்திலிருந்து தப்பிக்கலாம். ஒரு தரமான தயாரிப்பாளர் நிச்சயம் இதை அனுமானித்துவிட முடியும்" என்கிறார்.

இதை ஏற்றுக் கொள்ள மறுக்கிறார் தயாரிப்பாளர் ஏ.எம். ரத்னம். "சமீபத்தில் எனது தயாரிப்பில் வெளிவந்த 'ரன்', 'தூள்' படங்கள் வெற்றி பெற்றன. ஆனால் சிறு நகரங்களில், படம் வெளியாவதற்கு முன்பே திருட்டு விசிடி வெளியானதில் வசூல் குறைந்துவிட்டது. முதலீடு செய்த பணத்தை எடுப்பதற்குள்ளேயே போதும் போதும் என்றாகிவிட்டது. ஒரு போலீஸ் ரெய்டில் 'நியூ' படத்தின் திருட்டு விசிடிக்கான வண்ண அட்டைகளை ஆயிரக்கணக்கில் பறிமுதல் செய்திருக்கிறார்கள். ஆனால் படம் இரண்டாம் கட்டப் பிடிப்பில்தான் இருக் கிறது. சினிமாத் துறையினரைவிட திருட்டு விசிடிகாரர்கள் வேகமாய் இருக்கிறார்கள். தியேட்டரில் டிக்கெட் விலை முப்பது ரூபாய் என்றால் திருட்டு விசிடியின் விலையும் முப்பது ரூபாய்தான். திருட்டு விசிடியை ஒழிக்க குண்டர் தடுப்புச் சட்டம்போல ஒன்றைக் கொண்டு வந்தால் மட்டுமே, தயாரிப்பாளர்களைத் தற் கொலையிலிருந்து காப்பாற்ற முடியும்" என்று கொதிக்கிறார்.

"வட்டிக் கொள்ளையர்கள், ஹீரோ சம்பளம், இயக்குனர் சம்பளம், திருட்டு விசிடி, இவை பெரிய பிரச்னைகள்தான். அதேபோல பராமரிப்பு சரியில்லை என்று ரசிகர்கள் தியேட்டர் பக்கம் வர மறுப் பதையும் நாம் கவனத்தில் எடுத்துக் கொள்ள வேண்டும். சென்னை சத்தியம் திரைப்பட வளாகத்தில் உள்ள எல்லா தியேட்டர்களும் தினசரி, ஹவுஸ்ஃபுல்லாகி வருகிறது. இத்தனைக்கும் அதிகபட்சமாய் அங்கே எழுபத்தைந்து ரூபாய்க்கு டிக்கட் விற் கிறார்கள். ஆனால் பல தியேட்டர்களில் இருட்டில் எடுக்கப்பட்ட படம் மாதிரி தெரி கிறது. இப்படித் தெரிந்தால் படம் பார்க்க ரசிகன் எப்படி வருவான்?" என்பது எஸ்.வி. சேகரின் கேள்வி. இதுவும் முக்கியமான காரணம்தான் என்று ரசிகர்கள் ஒப்புக் கொண்டாலும், தியேட்டர் பக்கம் தலை காட்ட முடியாதபடிக்கு, எடுத்த கதையையே திரும்பத் திரும்ப எடுத்துக் கொண்டிருந்தால், எப்படிப் பார்க்கிறது என்கிறார்கள்.

உதாரணமாக சுரேஷ் கிருஷ்ணா பத்து வருடங்களுக்கு முன்பு பாட்ஷா பட மெடுத்தார். அதில், ரஜினி ஆட்டோ டிரை வர். அவர் மும்பையில் பெரிய தாதாவாக இருந்தார் என்பது பிளாஷ் பேக்கில்தான் தெரியும். இந்தக் கதையை, கிட்டத்தட்ட எல்லா ஹீரோக்களுக்கும் மாற்றி மாற்றிப் போட்டு எங்களை மண்டை காய வைத்து விட்டார்கள் என்று அலறுகிறார்கள். எல்லா தரப்பிலும் வெவ்வேறு உருவத்தில் பிரச்னை கள் இருந்தாலும், பாதிக்கப்படுவது தயாரிப்பாளர் என்பதால், நடிகர்கள், இயக்குனர்கள், விநியோகஸ்தர்கள், அர சாங்கம் இணைந்து ஒத்துழைக்காவிட்டால், கோடிக்கணக்கில் நஷ்டம் தொடர்வதையும், வட்டிக்காரர்கள் கைக்கு சினிமா மாறு வதையும் தடுக்க முடியாது என்பதை ஜீ.வி.யின் மரணம் உணர்த்துகிறது.

- ஸ்ரீ சக்கரம்

ராணி கிருஷ்ணன்

சியாமளா

# மீண்டும் 33%!

மீண்டும் மூட்டை கட்டி வைக்கப்பட்டிருக்கிறது முப்பத்து மூன்று சதவிகித இட ஒதுக்கீடு.

இந்தச் சட்டமுன் வடிவில் பிற்படுத்தப்பட்ட மக்களுக்கும் ஒதுக்கீடு வேண்டுமென்கிறார் லல்லு. முலாயம் சிங்கோ ஒரு படி மேலே போய், "இது போன்ற சட்டமே வேண்டாம்" என்கிறார்.

இதை ஒரு நொண்டிச் சாக்காக வைத்துக் கொண்டு, மெஜாரிட்டி இருந்தும் சட்டத்தை நிறைவேற்றாமல் பல்டி அடித்துவிட்டது தே.ஜ.கூ. அரசு.

வெறும் கோட்டாவை மட்டும் கொடுத்து பாராளுமன்றம் மற்றும் சட்டமன்றங்களில் அவர்களை நிறைத்துவிட்டால், பெண்களுக்கான பங்களிப்பு முழுமை பெற்று விடுமா? தகுதியாலும் திறமையாலும் தாமாகவே அரசியலில் முன்னுக்கு வந்து ஜனநாயக அமைப்புகளில் இடம் பெறுவதுதானே ஆரோக்கியமான வளர்ச்சி? இட ஒதுக்கீடு வழங்கினால், குறைந்தபட்ச விழிப்புணர்வு கூட இல்லாத பெண்கள் தேர்ந்தெடுக்கப்படும் வாய்ப்பு இருக்கிறதே! நாட்டின் தலையெழுத்தை நிர்ணயிக்கும் பாராளுமன்றத்தில் இப்படிப்பட்டவர்கள் இடம் பெற்றால், என்னாவது? இந்தச் சந்தேகங்களை அரசியலில் ஈடுபட்டுள்ள நான்கு பெண்களிடம் கேட்டோம். பாய்ந்துவிட்டார்கள்.

"தகுதி, திறமையுடன் முன்னுக்கு வருவது என்பது பாராட்டத்தக்க ஒன்றுதான் என்றாலும், இந்த ஆணாதிக்க சமுதாயத்தில் போட்டி போட்டு அரசியலில் முன்னேறுவது என்பது கடினம். எனவே கைதூக்கிவிட கோட்டாவும் தேவை. அரசியல் தலைவர்களில் ஒரு சிலரைத் தவிர, பெண்களுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டுமென்ற எண்ணம் மற்றவர்களுக்கு இல்லை" என்கிறார் பா.ம.க.வின் மாநில மகளிர் அமைப்பாளரான காசாம்பு பூமாலை.

"ஜனநாயக அமைப்புகளில் இடம் பெறும் பெண்கள் தங்களைத் தகுதிப்படுத்துக் கொள்ள, படிப்பு மட்டுமே உதவும் என்று சொல்ல முடியாது. நல்ல அனுபவ அறிவும், பொது அறிவும், சிந்தனை வளமும் போதுமே! பெண்களுக்கு இயல்பாகவே இவை இருக்கின்றன என்பது என் கருத்து. அதுபோல பெண்களுக்கான கோட்டாவில் உள் ஒதுக்கீடாக ஜாதிக் கண்ணோட்டம்

தேவையில்லை. இந்த வகையில், எல்லா சமுதாயப் பெண்களையும் உயர்த்தும் பொறுப்பு அரசியல் கட்சிகளுக்குத்தான் உண்டு" என்கிறார் காசாம்பு.

"இந்த ஒதுக்கீடு என்பது ஒரு கட்டாயத் தேவை. இது இல்லாவிட்டால் இங்கே பெண்கள் அரசியலில் முன்னேற, ஆண்கள் ஒரு போதும் அனுமதிக்கமாட்டார்கள். இதை என் சொந்த அனுபவத்திலிருந்து சொல்கிறேன்" என்கிறார் மூத்த வழக்கறிஞரும், அ.தி.மு.க. பிரமுகருமான சியாமளா. "பெண்களுக்கான இட ஒதுக்கீடு அமல்படுத்தப்படும் பட்சத்தில், அப்படிப் பட்ட படித்த பெண்களை வேட்பாளர்களாகப் போடுவது அரசியல் தலைவர்கள் கையில்தான் இருக்கிறது. இட ஒதுக்கீடு சட்டம் ஏதுமில்லாமலேயே, அதிகம் வாய்ப்பு கொடுப்பது எங்கள் அம்மாதான்" என்கிறார் சியாமளா.



• காசாம்பு பூமாலை



• பாலபாரதி

"பெண்கள் மட்டும் தகுதி, திறமையை வளர்த்துக் கொண்டு மேலே வரவேண்டும். ஆனால் ஆண்களுக்கு மட்டும் இது பொருந்தாதா! இப்போது இந்த ஜனநாயக அமைப்புகளில் இடம் பெற்றுள்ள ஆண்கள் முற்றிலும் தகுதி படைத்தவர்கள் தானா? உள்ளாட்சியில் இட ஒதுக்கீடு செய்ததால்தான் இன்று நாற்பத்திமூன்றாயிரம் பெண்கள் பொறுப்பிலிருக்கிறார்கள். இட ஒதுக்கீடு இல்லாவிட்டால் இது சாத்தியம் ஆகுமா! முதலில் கொஞ்சம் தடுமாற்றம் இருக்கத்தான் செய்யும். அதன் பின் திறம்படச் செயல்படுவது சாத்தியமே" என்கிறார் ஜனநாயக மாதர் சங்கத்தின் துணைச் செயலாளரும் சட்டமன்ற உறுப்பினருமான பாலபாரதி.

"இட ஒதுக்கீடு இல்லாமல், அரசியலில் முன்னேறுவது என்பது பெண்களுக்கு மிகவும் கடினமான ஒன்று. ஆண்களுக்கு அந்த அளவுக்குப் பெருந்தன்மை கிடையாது. தகுதி, திறமை இருந்தாலும் ஒரு பெண் ஆணாதிக்க அரசியலில் முட்டி மோதி மேலே வருவது, மிகவும் சிரமம் என்பதை என் அனுபவித்திலிருந்து சொல்கிறேன்" என்கிறார் காங்கிரஸ் பிரமுகர் ராணி கிருஷ்ணன். "கோட்டா கொடுத்துவிட்டார்கள் என்றால் அதிக அளவில் பெண்கள் அரசியலில் நுழைய வாய்ப்பிருக்கிறது. இது ஒரு பரிணாம வளர்ச்சிதான். துவக்கக் கட்டத்தில் கொஞ்சம் பிரச்னைகள் இருக்கத்தான் செய்யும். போகப் போக அவர்கள் பனிச்சிடுவார்கள்." என்கிறார்.

"முதல் பாராளுமன்றத்தில் நான்கு சதவிகிதம் பெண்கள் இருந்தனர். இப்போது இத்தனை ஆண்டுகளுக்குப் பின்னர் எட்டு சதவிகிதம் தான். இது நியாந்தானா? ஒதுக்கீடு நிரந்தரமாக வேண்டும் என்றும் சொல்லவில்லை. கணிசமாகப் பெண்கள் வந்துவிட்டால் காலப்போக்கில் அதை நீக்கி விடலாம்" என்கிறார் அவர்.

- ஸ்ரீநிவாசன்
படங்கள் : ராஜன்

இந்தாருக்கு இந்த மீசைதான் பொருந்தும்...

## சர்வாதிகாரத்தைச் சாடும் சர்வாதிகாரம்!

“நான் அவமானப்படுத்தப்பட்டேன். அதனால் பிரதமர் பங்கேற்ற சென்னை விமான நிலைய விழாவில் கலந்து கொள்ளாமல் திரும்பிவிட்டேன்” என்றார் முதல்வர்.

பிரதமரை விமான நிலையத்தில் வரவேற்றவர், அருகேயே நடந்த விழாவில் தலைகாட்டாமல் திரும்பிவிட்டார்.

எந்த முறையில் அவமானப்படுத்தப்பட்டார் ஜெயலலிதா? பிரதமரின் இருக்கைக்குப் பக்கத்து இருக்கை முதல்வர் என்ற முறையில் இவருக்கு ஒதுக்கப்பட்டிருக்க வேண்டுமாம். ஆனால் அவ்விழாவில் பிரதமருக்குப் பக்கத்தில் ஆளுனர் ஒரு புறமும், டி.ஆர்.பாலு மறுபுறமும் அமர்வது போல திட்டமிடப்பட்டிருந்ததாம். இவரை ஓரம் கட்டிவிட்டார்களாம்!

இவருக்கு நாற்காலி எங்கே போடப்பட்டிருந்தது என்பதைப் பெரிய பிரச்னையாக்கி விழாவைப் புறக்கணித்ததன் மூலம் இவர் வாஜ்பாயை, அதாவது பிரதமர் பதவியை அவமானப்படுத்தியதாகவும் கருதலாமில்லையா? முதல்வரை அவமதிப்பது தவறென்றால் பிரதமரை அவமதிப்பது அதைவிடப் பெரிய தவறல்லவா?

அது ஒருபுறமிருக்க, பிரதமர் பங்கேற்கிற மத்திய அரசு விழாக்களில் பிரதமருக்கு அருகே ஆளுனரும் மத்திய அமைச்சரும் அமர்வதுதான் மரபு, என்பதை முதல்வர் அறிந்திருக்கவில்லை என்பது வியப்பும் வேதனையும் அளிப்பதாகும். தமக்குத் தெரிந்திருக்கவில்லை என்றாலும்




# கல்கி



2003 மே 18
சுபானு வைகாசி 4
மலர் : 61
இதழ் : 42


தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




தக்கவர்களைக் கேட்டுத் தெளிவு பெற்றிருக்கலாம். இந்தச் சம்பவம் ஜெயலலிதாவின் ஆணவப் போக்குக்கு மற்றுமொரு உதாரணமாவே அமைகிறது.

விழாவை முதல்வர் புறக்கணித்ததற்கு உண்மையான காரணம் இது அல்ல, என்பதும் விரைவிலேயே தெரிந்துபோய்விட்டது. மத்திய தி.மு.க. அமைச்சர் டி.ஆர்.பாலுவுடன் ஒரே மேடையில் அமர அவருக்கு விருப்பமில்லை என்பதுதான் மெய்யான காரணம், என்பது சட்டமன்றத்தில் அவர் டி.ஆர்.பாலுவைச் சாடியதிலிருந்தே புரிந்து போயிற்று. அடுக்கடுக்கான குற்றச்சாட்டுகளை பாலுமீது சுமத்தியிருக்கிறார்.

ராணி மேரி கல்லூரியை இடித்துத் தரைமட்டமாக்கிவிட்டு அங்கு தலைமைச் செயலகம் கட்ட முதல்வர் முற்பட்டதை முறியடிப்பதற்காகவே, மத்திய அமைச்சர் பாலு, கடற்கரைப் பாதுகாப்பு விதிமுறைகளைக் கடுமையாக்கி, அவசரம் அவசரமாக ஓர் அறிவிக்கையை (notification) வெளியிட்டிருக்கிறார் என்பது முதல்வரின் முதல் குற்றச்சாட்டு.

இதை அவர் மாநில அரசுகளையோ, மத்திய மந்திரி சபையையோ, பிரதமரையோ கலந்தாலோசியாமல் தாமாகவே சர்வாதிகாரியாகச் செயல்பட்டுச் செய்திருக்கிறார் என்பது அடுத்த குற்றச்சாட்டு. இவ்வாறு தன்னிச்சையாக நடந்து கொள்கிற ஒருவர் மத்திய அரசில் மந்திரி பதவி வகிக்கவே தகுதியற்றவர் என்பது ஜெயலலிதாவின் தீர்ப்பு.

டி.ஆர்.பாலு வெளியிட்டுள்ள அறிவிக்கையில் 'ராணி மேரி கல்லூரி' என்ற வார்த்தையே இல்லை. கடற்கரையோரம் உள்ள புராதனக் கட்டடங்கள், கல்வி நிலையங்கள் முதலானவற்றுக்குப் பாதுகாப்பு தருவதற்கும், தாறுமாறாக நெடிதுயர்ந்த கட்டடங்கள் எழுந்து கடற்கரையும் அதையொட்டிய நகரங்களும் பாழாகாதிருக்கவுமே, பொதுப்படையாக அறிவிக்கை வெளியிடப்பட்டுள்ளது.

எனினும் இந்த அறிவிக்கை ராணி மேரி கல்லூரியைக் காப்பதையே பிரதான நோக்கமாகக்




கொண்டு வெளியிடப்பட்டுள்ளதாகக் கருத நிறையவே இடமிருக்கிறது. ஆனால் இதன்மூலம் அவர் சர்வாதிகாரத்தனமாக நடந்து கொண்டாரா அல்லது ஒரு சர்வாதிகாரப் போக்கைத் தடுத்து நிறுத்த நடவடிக்கை எடுத்தாரா என்பதையும் யோசிக்க வேண்டும்.

டி.ஆர்.பாலு மத்திய அமைச்சர்களையோ, மாநில முதல்வர்களையோ அல்லது பிரதமரையோ கலந்தாலோசித்தாரா என்பது ஒரு புறமிருக்க, ஒவ்வொரு காரியத்தையும் இவ்வாறு கலந்தாலோசித்துத்தான் அவர் செய்ய வேண்டும் என்ற விதிமுறை உள்ளதா என்பதையும் நோக்க வேண்டும். அமைச்சரவையின் கூட்டுப் பொறுப்பு என்பது வேறு ; தனி அமைச்சர்களின் செயல்பாடு என்பது வேறு. ஒவ்வொரு விஷயத்தையும் அமைச்சர் பிறரைக் கலந்தாலோசித்துத் தான் செய்ய வேண்டும் என்றால் ஒரு காரியமும் நடக்காது. பாலுவின் நடத்தை சர்வாதிகாரப் போக்கு என்றே வைத்துக் கொள்வதானாலும்கூட, முள்ளை முள்ளால்தான் எடுக்க வேண்டும் என்பதுபோல, சில சர்வாதிகாரப் போக்குகளை எதிர்க்க, சர்வாதிகார பாணியில் நடந்து கொள்ள வேண்டிய நிர்ப்பந்தமும் ஏற்படத்தான் செய்கிறது.

ராணி மேரி கல்லூரி வளாகத்தில் தலைமைச் செயலகம் கட்ட வேண்டும் என்று ஜெ தீர்மானிப்பதற்கு முன்னதாகக் கல்வியாளர்களைக் கலந்தாலோசித்தாரா? அந்தத் திட்டத்தால் நேரடி பாதிப்புக்கு உள்ளாகிற ராணி மேரி கல்லூரி ஆசிரியர்கள், மாணவியர் ஆகியோரின் ஒப்புதலைப் பெற்றாரா அல்லது சென்னை மாநகரின் வளர்ச்சிக் குழுமத்தின் விதிமுறைகள் என்ன சொல்கின்றன என்பதைக் கவனித்தாரா? இவையெல்லாம் சர்வாதிகாரப்போக்கு இல்லை எனில், டி.ஆர். பாலுவின் செயல்பாடும் சர்வாதிகாரம் இல்லைதான்.

இந்த அறிவிக்கையை வெளியிட்டதன்மூலம் டி.ஆர். பாலு மந்திரி பதவி வகிக்கும் தார்மிகத் தகுதியை இழந்துவிட்டார் என்கிறார் ஜெயலலிதா. அப்படி பார்க்கப்போனால் முதல்வராக நீடிக்கும் தார்மிகத் தகுதியை ஜெயலலிதா கடந்த காலத்தில் பலமுறை இழந்து விட்டிருக்கிறார். அவருடைய பல்வேறு செயல்பாடுகளும் நடத்தையும் இதனை உறுதிப்படுத்தும்.




# வட்டமேஜை

# அப்பள ஜோக்குக்கு 'அப்ப்ளாஸ்' டபுள்!

✉ படமே வேஸ்ட். இதில் நீர் மெனக்கெட்டு ஒரு பக்கம் விமர்சனத்தையும், அதன் நாயகியைப் பற்றி 'கவர்ச்சி ஜிகு ஜிகு' என்று ஜோன்விட்டு இரண்டு பக்கங்களையும் மேலும் வேஸ்ட்டாகியிருப்பது ஹ'தம்' மட்டுமல்ல. அபத்'தம்' கூட!

நெய்வேலி, க.சுந்தர்

✉ 'விரட்டும் வறட்சி. புரட்டு நிவாரணம்!' கட்டுரையைப் படித்தபொழுது "அரசு எந்தவொரு நலத்திட்டத்தையும் அறிவிப்பதோடு சரி. அதன் பின் அது ஒழுங்காக, முறைகேடின்றிச் செயல்படுத்தப்படுகிறதா என்று கவனிப்பதே இல்லை என்பது மிகத் தெளிவாகத் தெரிகிறது.

மதுரை, என். பாலகிருஷ்ணன்

✉ "பொடா சட்டத்தின் உள் பலவீனங்களை உணர்ந்து, அதன் காரணமாக நிரபராதிகள் பாதிக்கப்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது நீதிபதிகளின் பொறுப்பு" என்ற வழக்கறிஞர் விஜயனின் கூற்று நியாயமானது.

திருச்செங்கோடு, டி.ஏ.சி. பிரகாஷ்

✉ உடல்மொழி தரும் சைக்கோ டிப்ஸ்களை இலவச இணைப்பாக்கியது மற்ற உடல்களைப் (மற்றவர்களை) பற்றி அறிந்து கொள்ள உபயோகமாக இருந்தது!

பள்ளிபாளையம், ரஞ்சனிப்ரியன்

✉ தமிழகத்தில் நினைக்கவே பயப்படும் அளவுக்குக் கொடுஞ்செயல்கள் நடந்தேறி வருவதைப் பார்க்கும்போது, காவல் துறையினர்மீது அவநம்பிக்கை ஏற்படுகிறது. மணல் - கல் குவாரிகளில் நடைபெறும் முறைகேட்டைத் தடுக்க, அந்தப் பகுதி கிராமப் பஞ்சாயத்து நிர்வாகத்திடமே பொறுப்பை விட வேண்டும்.

மேல்பட்டி, எல்.மாறன்

✉ இரு பக்க ஜோக்குகளும் இனிப்பான கேக்குகளாக இருந்தாலும் அப்பள ஜோக்குக்கு மட்டும் அப்ளாஸ் டபுள்!

திசையன்விளை, ஆர்.ஜி.ஏ.ராமன்

✉ "மக்கள் ஆட்சியா? ரௌடிகள் ராஜ்ஜியமா?" என்று கேட்டிருக்கிறீர்கள். "The wicked walk on every side when the vilest men are exalted" என்கிறது கிறிஸ்துவ வேதம். அதாவது, "தீயவர்கள் உயர்வாக மதிக்கப்படும்போது, துன்மார்க்கர்கள் எங்கும் சுற்றித் திரிவார்கள்". எனவே வாக்காளர்களின் பொறுப்புதான் மிகுதியாகிறது.

தூத்துக்குடி, கோ.நாராயணன்

✉ பொன்மணி வைரமுத்துவின் கவிதை நச்சென்று இருந்தது. ஒவ்வொரு வரியும் பொருள் பொதிந்த வைர வரி.

தூத்துக்குடி, ஏ.எஸ்.காந்தி

"மழையும், வெயிலும் எப்படியோ, அப்படியே கோடை நோய்களும் அழையா விருந்தாளியாய் வந்து விடும்" என்கிறார் டாக்டர் சாய் ரமணன்.

'இதற்கு என்ன செய்யலாம்' என்று சில டிப்ஸ்களையும் தருகிறார் அவரே:

"கத்திரி வெயில் எனப்படும் அக்கினி நட்சத்திரக் காலத்தில், ஹீட் ஸ்ட்ரோக் என்கிற உஷ்ணத் தாக்குதல் வரும். குறிப்பாக வெளியே போய் வருகிறவர்களை இது தாக்கும். டீ ஹைட்ரேஷன் வரும். இந்தச் சமயத்தில் வெளியே செல்லுபவர்கள் தலைக்குத் தொப்பியோ, சிரமம் பார்க்காமல் குடை பிடித்தோ போவதுதான் நல்லது. அப்படியே வெளியே போக வேண்டி வந்தால், ஈரமான கர்சீஃபை எடுத்துப் போகலாம். அல்லது 'கோலோனில் தோய்ந்த டிஷ்யூ தாள்கள் வருகின்றன அல்லவா?' தலையிலும், நெற்றிப் பகுதியிலும் இந்த ஈர கர்சீஃபை ஒற்றி எடுக்கலாம். வெப்பம் நேரடியாகத் தாக்காது.

ஐஸ் போட்ட குளிர்பானங்களை வெயிலில் சுற்றி அலைந்த உடனே குடிக்கக் கூடாது. குளிர்பானம் உள்ளே போனதுமே, அது எதிர்விளைவைத்தான் உண்டாக்கும். சற்று நேரம் பொறுத்து, குளிர்பானம் அருந்தினால் தவறில்லை."

"உள்ளாடைகள், ஸாக்ஸ் முதலியவற்றை உபயோகிக்கும் போது வியர்வையில் நனைந்து அதனால் உப்பு வெளிப்பட்டு, இடுக்குகளிலும், பாதத்திலும் ஃபங்கஸ் (பூஞ்சாணம்) வரலாம். முதலில் அரிப்பாகத் தொடங்கும். பிறகு நாள்பட பூஞ்சாணம் வந்து விடும். செயற்கை இழை (சிந்தடிக்) உள்ளாடைகளை உபயோகிக்காமல், பருத்தி உள்ளாடைகளை

# ஆ...வெயில்

உபயோகிக்க வேண்டும். பூஞ்சாணம் போக, டஸ்டிங் பவுடர் போடலாம். இதை மாலையில் குளித்த பிறகு போடலாம். இந்தக் கோடைக் காலத்தில் உள்ளாடைகளைத் தினசரி மாற்றுவது நல்லது. ஒரு நாள் உபயோகித்ததையே மறுநாளும் உபயோகிக்கக் கூடாது. ஷூக்கள் போடுவதாயிருந்தால், காற்றுப் புகும் வசதியுள்ளவற்றைப் பயன்படுத்தலாம்.

•டாக்டர் சாய் ரமணன்



"வெகு சாதாரணமாக வருவது வேர்க்குரு. அரிப்பு இருந்தால் நகத்தால் சொறிந்து கொள்ளக் கூடாது. நகம் பட்டு இன்ஃபெக்ஷன் வரலாம். பிறகு ஜுரம் வந்துவிடும் வாய்ப்பும் உண்டு. இரண்டு வேளை குளிக்க தண்ணீருக்கு எங்கே போக? சிக்கனமாய் ஒருவேளை குளித்து, ஒரு வேளை ஈரத் துண்டால் உடலைத் துடைக்கவும்.

"கண்விழிகள் அல்ட்ரா வயலட் கதிர்களால் பாதிக்கப்பட்டு, தலைவலி, தலைசுற்றல், கண்களில் நீர் வருதல் ஆகியவை தொடரும். இது நோய்த் தொற்றாக மாறிவிடுமுன் பாதுகாப்பாக இருப்பது நல்லது.

"கோடைக் காலத்தில் வயிற்று உபாதைகள் வரலாம். சிலர் வயிற்றுப் போக்கு, அஸிடிடி, டயரியா என்று அவஸ்தைப் படலாம். இவை

கூடுதலானால் வாந்தியும் தொடரும். கூடுமானவரை உணவு விஷயத்தில் கட்டுப்பாடாக இருப்பது நல்லது. மிகவும் காரமான உணவு வகைகளைத் தவிர்க்கலாம். வெயில் கடுமையாக இருக்கும்போது, ஆவக்காய் ஊறுகாய் வகைகளைப் பயன்படுத்தாமல் இருப்பது நல்லது. மிளகாய் வகைகள் அரிப்பையும், எரிச்சலையும் உண்டாக்கும் தன்மை உடையவை. சாலை ஓரங்களில், மூடப்படாமல் வைக்கப்பட்டி



# நோய்!

ருக்கும் தர்ப்பூசணி, பலாப்பழம் வகையறாக்களையும், பலகாரங்களையும் தவிர்க்க வேண்டும்.

"வெயிலின் கடுமையைத் தவிர்க்க, வீடுகளில் சன்னல்களுக்கு வெட்டிவேர்த் தட்டி கட்டி, அவ்வப்போது தண்ணீர் தெளித்தால், இயற்கையான குளிர்ச்சி அறைகளில் இருக்கும். உஷ்ணம் தெரியாது. தடிமனான படுக்கையில் படுக்காமல், பாயில் படுத்தால் சூடு அவ்வளவாக உறைக்காது.

"அதிகமாக வியர்த்துக் கொட்டும்போது, உடலில் உப்புச் சக்தி குறையும். தளர்ச்சி உண்டாகும். பழ ரசங்களில் சால்ட் சொல்யூஷன் சேர்த்து அருந்தலாம். அதுவும் பயன்தராமல் போனால், எலக்ட்ரோலைட்ஸ் சொல்யூஷன் கரைத்துக் குடிக்கலாம். அல்லது ஊசியாகப் போட்டுக் கொள்ளலாம். இதை ஏன் சொல்லுகிறோம் என்றால், சிலருக்கு கை – கால்களில் பிடிப்பு உண்டாகிவிடும். அதைத் தவிர்க்கவே இந்தப் பானங்கள்.

"கடுமையான ஜுரம் வரலாம். பாராசிடமால் மாத்திரை போட்டுக் கொண்டால் குறைந்துவிடும். 'ஸ்பாஞ்ச் பாத்' எடுத்துக் கொள்ளலாம். சிலருக்குக் காய்ச்சல் அதிகமாகி, கிருமித் தொற்று காரணமாகக் கொப்புளங்கள், சரும நோய்கள் வர வாய்ப்பு உண்டு. மருத்துவரை உடனே அணுகி வைத்தியம் செய்து கொள்ளுவது நல்லது. அம்மை வந்துவிட்டது என்று டாக்டரிடம் செல்லாமல் இருப்பது நல்லதல்ல. இப்போது இவ்வகை நோய்களுக்குச் சரியான மருந்துகள் கிடைக்கின்றன. அதிலும் பெரியவர்கள் விஷயத்தில் இம்மாதிரி நோய்கள் தாக்கும்போது, கவனம் செலுத்த வேண்டும்.

"வெளியே ஸ்கூட்டர் அல்லது சைக்கிளில் செல்வோர், பாதுகாப்பாக, ஓரளவுக்கு நல்ல வகையான குளிர் கண்ணாடி அணிந்து கொள்ளுவது நல்லது."

— எஸ்.வி.என்.

# பிட்ஸ் பஜார்!



## ஊர்மிளா சர்ச்சை!

கலர் தோரணம் கட்டி, ஸ்பீக்கரில் பாட்டு போட்டு, எல்லாரும் தான் 'மே' தினத்தை, கோலாகலமாகக் கொண்டாடினார்கள். ஆனால் மகாராஷ்ட்ரா அரசு உழைப்பாளிகள் தினத்தைக் கொண்டாடியதுதான் சர்ச்சைக்குரிய விஷயமாகிவிட்டது.

மகாராஷ்ட்ரா அரசைப் பொறுத்தவரை, மே ஒன்றாம் தேதி கொண்டாடப்பட டபுள் காரணங்கள். ஒன்று, தொழிலாளர்கள் தினம். இன்னொன்று மகாராஷ்ட்ரா மாநிலம் அமைக்கப்பட்ட நாள். அன்றைய தினத்தில் சிறப்புக்குரிய நபரைத் தேர்ந்தெடுத்து 'தி மஹாராஷ்ட்ரா கௌரவ் சம்மான்' என்ற விருது தந்து போற்றுவது வழக்கம். இந்த வருஷ சிறப்புக்குரிய சம்மான் விருது வாங்கிய கலைமான் யார் தெரியுமா? ஊர்மிளா மகோன்ட்கர். 'ரங்கீலா'வில் 'ஆயிரே... ஆயிரே..' என ஆட்டம் போட்டவர்.

சர்ச்சையைக் கிளப்பிவிட்டுள்ள அதிருப்தியாளர்களின் புலம்பல் இதுதான்!

"நடிகைகளுக்கு இந்த விருது தரக் கூடாது என்று சொல்லவில்லை. தரட்டும்! ஆனால் ஷாந்தா ஆப்தே, நூதன், ஸ்மிதா பாட்டில், மாதுரி தீக்ஷித் போல கலைத் திறமையோ, சமூக அக்கறையோ கொண்டிருந்தால் சந்தோஷப் பட்டிருப்போம். ஊர்மிளா நடித்துப் புகழ்பெற்ற 'ரங்கீலா', 'சத்யா', 'பியார் துனே க்யா க்யா' போன்றவை எல்லாமே ராம் கோபால் வர்மாவின் படங்கள். வெளிமாநிலப் படங்களில் மெச்ச நடிக்கட்டும். திறமையை நிரூபிக்கட்டும். அப்புறம் வாங்கட்டும் விருதையும், சம்மானையும்." என்கிறார்கள். ஊர்மிளா, 'உர்' என்று ஆகிவிட்டதாகத் தகவல்!

## 'லிங்கத்'துல வர்றீங்களா? இல்லையா?

இன்றைய தேதிக்கு, பிஸியான நங்கூர நங்கை மந்திரா பேடிதான். 'ஹீரோ ஹோண்டா அவார்டு' போன்ற படா பிஸினெஸ் ஷோ விலிருந்து, லோக்கல் பாப்கார்ன் விளம்பம் வரை, அம்மணி 'பதினைந்து செகண்ட்' புகழ் பெற்று பிரமாதமாகக் கல்லாவை நிரப்பிக் கொண்டிருக்கிறார்.

'தில் வாலே துல்ஹானியா லே ஜாயேங்கே' படத்தில் தம்மாத்துண்டு ரோலில் வந்துபோன பிறகு, யாராலும் கண்டு கொள்ளாமலேயே போய்விட்டவரின் வாசக் கதவை ராஜலட்சுமி தட்டோ தட்டென்று தட்டுகிறாளாம் தயாரிப்பாளர்கள் ரூபத்தில்.

"சே... சே! சான்ஸ் வருதேனு, சகட்டு மேனிக்கு அட்வான்ஸ் வாங்கிப் போட்டுக் கொள்ள நான் என்ன பழைய மந்திராவா? கதை கேட்

* மந்திரா பேடி

* சோனாலி

* மடோனா



• ப்ரீத்தி ஜிந்தா

கொடுத்து, கை நிறைய காசும் கொடுத்து அனுப்பறாங்களே!" என்று நன்றி மல்குகிறார் மந்திரா.

அதெல்லாம் சரி. பார்த்திபனோட 'லிங்கம்' படத்துலே இருக்கீங்களா இல்லையா? பட்டுன்னு சொல்லி, பாலை வாருங்க! மீடியா தொல்லை தாங்க முடியலை.

## தாராளம்?

**நா**ளுக்கு நாள் நடிகைகளின் கவர்ச்சி எல்லை நீண்டு கொண்டே செல்வது பற்றி, எந்தப் புண்ணியவான் கவலைப்பட்டாரோ தெரியவில்லை. ப்ரீத்தி ஜிந்தா, கரீனா கபூர், ராணி முகர்ஜி போன்றவர்கள் வெகுண்டெழுந்து விட்டார்கள்.

"நாங்கள் கண்ணியமான ரோல்களைத் தேர்ந்தெடுத்தாலும் உடைகள் விஷயத்தில் கொஞ்சம் தாராளமாக இருக்கத்தான் வேண்டியிருக்கிறது. இல்லை என்றால் பிபாஷா, இஷா, சோனாலி போன்றவர்கள் எங்களை ஓவர்டேக் செய்து விடுவார்கள். அப்படியொரு காரியத்தைச் செய்ய நாங்கள் யாருமே தயாரில்லை." என்று புலம்பித் தள்ளுகிறார்கள்.

பிபாஷாவைக் கேட்டால், "எக்ஸ்போஸ் செய்யறமோ இல்லியோ... அதெல்லாம் பேச்சு கிடையாது. ரசிகர்களை மீண்டும் மீண்டும் படத்துக்கு வர வைக்கிறோமான்னு பாருங்க" என்கிறார் கூலாக.

## டென்ஷனில் மடோனா!

**போ**ருக்கு எதிரான ஓர் மியூசிக் ஆல்பத்தைத் தயாரித்தார் பிரபல பாப் பாடகி மடோனா. அமெரிக்க அரசுக்கெதிராக இது அமைவதைக் கண்டு திடீரென்று அதன் ரிலீஸை நிறுத்திக் கொண்டார். இது பற்றி கொலம்பியாவின் பாப் பாடகி ஷகிரா, "கொஞ்சம் முதுகெலும்பும் மடோனாவுக்கு இருந்திருக்கலாம்" என்று பகிரங்கமாகவே கிண்டலடிக்க, கொதித்துப் போயிருக்கிறாராம் மடோனா.

- அனு, குல்லூ

கிறேன். என்னுடைய ரோலைப் பற்றி, என் கணவரிடம் விவாதிக்கிறேன். 'கிளிக்' ஆகுமென்று தோன்றினால் தான் தலையசைக்கிறேன்!" என்கிறார் சீரியஸாக சிரித்துக் கொண்டே.

சினிமா தான் இப்படி என்றால், டீவி. தயாரிப்பாளர்கள் க்யூ இன்னொரு பக்கம் நீளுகிறது.

"ஏக்தா கபூரின் 'க்யூன் கி சாஸ் பீ கபி பஹு தி' தொடரில் கொஞ்சம் வில்லித்தனமான வேடம் செய்கிறேன். அதனால் என்ன? நான் கேட்கும் போதெல்லாம் லீவும்






• ஊர்மிளா

# சட்டமன்றத்தில் ஒரு ஜோஸ்யர்!

"ஆறாம் இடத்தில் தீமை செய்யும் கிரகமாகிய செவ்வாயை மூன்றில் அமர்த்தி, சூரனை சம்ஹாரம் செய்ய ஆணையிட்டான் ஈசன். அதன் பின் செந்தில் வேலன் சூர சம்ஹாரம் செய்து, திருச்செந்தூரில் அமர்ந்து மக்களுக்கு அருள் பாலித்து வருகிறார். அதுபோல அம்மாவும் ஆறுக்குண்டான செவ்வாயை மூன்றில் அமர்த்தி, தேர்தல் என்னும் களத்தில், தி.மு.க என்னும் அசுரர்களை ஒடுக்கி ஆட்சிப் பொறுப்பேற்று தமிழக மக்களின் குறைகளைத் தீர்த்து வருகிறார்'' - இது ஒரு தீவிரமான அம்மா பக்தரின் பேச்சு என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும். ஆனால் பேசியவர் ஒரு சட்டமன்ற உறுப்பினர். ஜோஸ்யம் பார்க்கும் இந்த உறுப்பினர் அவையில் பேசிய பேச்சுத் தான் இது.

அவர் ஆலங்குளம் தொகுதி சட்டமன்ற உறுப்பினர் பி. ராஜேந்திரன்.

சட்ட மன்றம், தொகுதி வேலை போக, நேரம் கிடைத்தால் உடனே ஜோதிட, ஜாதகக் கட்டுகளை கைவசம் எடுத்துவிடுகிறார் ராஜேந்திரன். பிரபலமானவர்களின் ஜாதகங்களை எடுத்து அக்குவேறு ஆணிவேறாக அலசுகிறார். இடையில் நண்பர்கள் யாராவது வந்தால் அவர்களது ஜாதகங்களையும் ஆராய்கிறார். இவரது எம்.எல்.ஏ நண்பர்கள் "ஜோஸ்யர் இருக்காரா?'' என்று கிண்டலாகக் கேட்கிறார்கள்.

ராஜேந்திரனின் சொந்த ஊர் ஆலங்குளம் அருகிலுள்ள தாயத்தூர். இவரது அப்பா அந்தக் கால எம்.ஜி.ஆர் பக்தர். 1989ல் அ.தி.மு.க. ஜெ-ஜா என்று பிரிந்த போது, மகன் ராஜேந்திரன் ஜெ. பக்கம் சாய, அப்பா ஜானகி பக்கம் சாய, ஊரில் கொடியேற்றுவதில் அடிதடி. விளைவு: ராஜேந்திரனை ஊரைவிட்டே அனுப்பி விட்டார் அப்பா. பின்பு கட்சிகள் இணைந்தபோது, அப்பாவும் மகனும் ஒரே கட்சியாகி விட்டனர். தமது சொந்தப் பணத்தில் ஊரில் தண்ணீர்த் தொட்டி கட்டிக் கொடுத்துள்ளார்.

"ஜோஸ்யர்களில் எனக்குப் பிடித்தவர், புலியூர் பாலு. அவரது ஜோஸ்யப் பத்திரிகையில் ஏராளமான கேள்விகளைக் கேட்டு அவரைச் சங்கடப்படுத்தியுள்ளேன்'' என்கிறார் ராஜேந்திரன். "தமது ஜாதகத்தையே ஆராய்ச்சி செய்தபோது நிச்சயம் அரசியலில் ஏற்றமுண்டு என்று தெரிய வந்ததாம். 2001ல் எம்.எல்.ஏ ஆகிவிட்டார்.

"ஜாதகம் பார்ப்பது விஞ்ஞான அடிப்படையில் அமைந்த ஒன்று. நம்மை ஆட்டி வைப்பது நவக்கிரகங்களே. அவற்றின் இடமாற்றம் ஒரு மனிதனுடைய வாழ்க்கையில் கட்டாயம் மாறுதல்களைக்கொண்டு வரும்'' என்கிறார் ராஜேந்திரன்.

பெரும்பாலான அமைச்சர்களுக்கும், சக சட்டமன்ற உறுப்பினர்களுக்கும் இவர் ஜாதகம் பார்த்து கணிப்புகளைச் சொல்ல, சற்று யோசனை செய்கிறார். காரணம்?-

"என்னைப் பொறுத்தவரை அம்மா, ஞானியைப் போன்றவர். அவரது ஜாதகமும் அப்படித்தான் கூறுகிறது. இந்த நிலையில் சில கணிப்புகள் அம்மாவின் முடிவுகளால் மாறக்கூடும். அப்படி மாறுவதற்குக்கூட சம்பந்தப்பட்ட நபர்தான் காரணமாக இருப்பார்'' என்றார் ராஜேந்திரன். ஜாதகம் பார்க்க ராஜேந்திரன் யாரிடமும் சன்மானம் வாங்குவதில்லை.

"இப்போது சனி திசை நடப்பதால் இனி ரஜினிக்கு இறங்குமுகம்தான்'' என்று அடித்துச் சொல்கிறார்.

- கௌசி

படம் : ராஜன்

'இசையில்லாத இலையில்லை' என்ற தொகுப்பின் மூலம் கவிஞராக அறியப் பட்ட தேன்மொழி, இப்போது தமிழ் சினிமாவின் முதல் பெண் வசனகர்த்தா. பாரதி ராஜாவின் புது சிஷ்யை.

''சின்னமனூர் தியேட்டர்ல 'மண் வாசனை' படம் பார்த்துட்டிருந்தேன். தொடக்கத்துல 'என் இனிய தமிழ் மக்களே'ங்கற கரகரப்பான குரல் கேட்டதும், தரையிலிருந்து எழுந்து திரைக்குப் பின்னால ஓடப்போனேன். என்னைப் பிடிச்சு இழுத்து, "திரைக்குப் பின்னால யாருமில்லை; திரைதான் பேசுது"ன்னார் அப்பா. அந்தக் குரல் மேல அப்பவே எனக்கு ஈர்ப்பு. இப்ப அவர்ட்டயே உதவி இயக்குனராகவும் 'ஈர நிலம்' படத்துக்கு வசனகர்த்தாவாகவும் இருக்கிறது நினைச்சுப் பார்க்காத விஷயம்" என்கிறார் தேன்மொழி.

• தேன்மொழி



"நான் அதிகமாப் படிக்கலை. ப்ளஸ் டூதான். சினிமா பற்றிய தொழில் நுட்பம் எதுவும் தெரியாது. சின்ன வயசு முதலே எனக்குத் தெரிஞ்சதெல்லாம் இயற்கையும் கவிதையும். என் சுபாவமே, எதுக்கெடுத்தாலும் கேள்வி கேட்கிறது தான். சம்மந்தமேயில்லாம கேள்வி கேட்டுட்டே இருப்பேன். எல்லாத்துக்கும் பொறுமையா பதில் சொல்வார் என் அப்பா.

"நான் வளர்ந்த சூழல் பாரதி ராஜா சார் படத்துல வர்ற கிராமத்தைவிட, மண் வாசனை வீசற மலைக்கிராமம். சின்னமனூர்லயிருந்து மூன்றரைக் கிலோ மீட்டர் மலைமேல போகணும். இயற்கையை அணுஅணுவா ரசிச்சு வளர்ந்தவ நான். அந்தக் கிராமம் என்னுள்ளே ஆழமா பதிஞ்சு போச்சு. அந்தக் கிராமத்து அனுபவங்களை அப்படியே சினிமாவுக்குள்ள கொண்டு வரணுங்கறதுதான் என் ஆசை'' என்கிற தேன்மொழியிடம், "சரி, பாரதி ராஜாட்ட எப்படி அஸிஸ்டெண்டா சேர்ந்தீங்க!" என்றோம்.

"ப்ளஸ் டூ முடிச்சுட்டு மதுரைல நர்சிங் கோர்ஸ் முடிச்சேன். அப்புறம் சென்னையில அப்பல்லோவுல நர்ஸா வேலை பார்த்தேன். அப்போ கவிஞர் அறிவுமதியோட அறிமுகம் கிடைச்சது. என்னோட கவிதை ஆர்வம் பற்றிக் கேட்டவர், நான் எழுதிய கவிதைகளைப் பார்த்தார்.

அவர்தான் அதைத் தொகுப்பா கொண்டு வர உதவி பண்ணினார். அந்தப் புத்தக வெளியீட்டு விழா வுக்கு பாரதிராஜா சாரை அழைத்திருந்தேன். 'படிச்சுப் பார்த்துட்டுத் திருப்தியா இருந்துச்சுன்னா வருவேன்' னார். படிச்சுட்டு மறுநாளே அதைப் பற்றி விரிவா நிறை யப் பேசினார். வெளியீட்டு விழாவுக்குப் பிறகு ஒரு நாள், நீ பார்க்கற நர்ஸ் வேலை


• பாரதிராஜா

# பாரதிராஜாவின் புது சிஷ்யை!

உனக்குத் திருப்தியா இருக் கா'ன்னு கேட்டார். 'இல்லை'ன்னேன். உடனே 'என்கிட்ட உதவி இருக் குனரா சேர்ந்துக்கோ'ன்னு சொன்னார். சினிமா பற்றி எதுவும் தெரியாத நான் எப்படி உடனே சரின்னு சொல்றது? அதனால யோசிச்சு சொல்றேன்னுட்டு ஊருக்குப் போயிட்டேன். தேனிக்கு வந்த பாரதிராஜா, அப்படியே எங்க வீட்டுக்கும் வந்தார். அப்பாட்ட சொல்லி, அவர் சரின்னு சம்மதிக்க, நான் உதவி இயக்குனரா சேர்ந்தேன்'' என்று பூரிக்கும் தேன்மொழியிடம் 'முதல்பட அனுபவம்' பற்றிக் கேட்டோம்.

''கதாசிரியர் செல்வராஜ் எழுதிய 'வாக்கப்பட்ட பூமி' கதையை எங்கிட்ட கொடுத்து வாசிக்கச் சொன்னார் டைரக்டர். கதையைத் திருப்பிக் கொடுக்கும்போது, ஒரு தாளில் இரண்டு வார்த்தைகள் எழுதி நீட்டினேன். 'என்ன?'ன்னு கேட்டார். இந்தக் கதைக்கு நான் வச்ச தலைப்புன்னு சொன்னேன். கொஞ்ச நேரம் உற்றுப் பார்த்துட்டு, 'குட், நல்லா இருக்கு'ன்னு சொன்னவர், அதையே படத்துக்கும் தலைப்பா வச்சார். அந்தத் தலைப்பு ஈர நிலம்!''

'ஈர நிலம்', 'கண்களால் கைது செய்' என்ற படங்களுக்கு பாடல்களும் எழுதியிருக்கிறார் தேன்மொழி.

''எதையாவது பார்க்கும்போது, ரசிக்கும்போது, பொங்கி வர்ற உணர்ச்சிதான் கவிதை. பாட்டு வேற, அது சினிமாவுக்கானத் தேவை. இசையமைப் பாளரோட ட்யூனுக்கு ஏற்ப, சிச்சுவேஷனுக்குப் பொருத்தமா எழுத வேண்டியது பாடல். பாடலாசிரிய னோட வேலை இது தான். கவிதை வேறு, பாட்டு வேறன்னு புரிஞ்சு வச்சிருக்கேன். சினிமா பாடல்கள்ல எந்தள வுக்குக் கவித்துவமா சொல்ல முடியும்னு முயற்சி செய்றேன். இதிலயும் ஜெயிப் பேன்னு நம்பிக்கை இருக்கு'' என்கிறார் தேன்மொழி.




— மௌலி
படங்கள் : யோகா

# பழைய ஸ்டோரி




காகமே ஒரு பாட்டுப் பாடேன்!




நீ நினைச்சுட்டு இருக்கற மாதிரி இது வடையில்லை. நான் லேட்டஸ்ட்டா வெளியிட்டிருக்கிற ஸி.டி.








தாங்ஸ்... ஒண்ணுக்கு ரெண்டா இருந்தா இந்த வெயிலுக்கு நல்லதுதான்!

# புது டயலாக்!




இலங்கைக்கு குரங்குகள் பாலம் கட்டிக் கொண்டிருக்கின்றன.







கருத்து: எம்.ஆர். மூர்த்தி
கார்ட்டூன்: பிள்ளை





# ஊடும் பாவும்

மகாவிஷ்ணுவின் அவதாரங்களில் ஒன்று வாமனாவதாரம். மஹாபலியை அடக்குவதற்காக அதிதியின் மகனாக அவதரித்து குள்ள பிராமணனாகத் தோன்றி, யாகசாலையில் சென்று யாசகம் கேட்டு, திருவடிகளால் அண்டம் அளந்து நின்ற அவதாரம். மஹாபலியால் விரட்டப்பட்டுவிட்ட தன்னுடைய குழந்தைகளான தேவர்கள், மீண்டும் செல்வத்தையும் செல்வாக்கையும், தேவலோகத்தையும் பெறவேண்டும் என்பதற்காக, பகவான் நாராயணனை வேண்டி 'பயோவ்ரதம்' என்னும் விரதத்தை அனுஷ்டித்தாள் அதிதி. அவளின் விரதத்திற்கு மகிழ்ந்து அவள் எதிரில் தோன்றிய ஸ்ரீமந் நாராயணன், அவள் உள்ளத்தில் இருந்த விருப்பத்தை அறிந்தார்.

அசுரத் தலைவனான மஹாபலியை வெற்றி கொள்வது கடினம். காரணம், அவனுடைய ஆசார்யர்களின் பலம் அவனைக் கட்டிக் காப்பாற்றியது. எவனுக்கு ஆசிரியர்களின் ஆசீர்வாதமும் பலமும் கட்டுக்காவலாக உள்ளதோ, அவனை வெல்லுதல் எளிதன்று. இருப்பினும் அதிதியின் விரதத்திற்கும் நியமத்திற்கும் பலன்தர வேண்டுமல்லவா? அதனால் அவளின் மகனாகத் தோன்றி உபாயம் ஏதேனும் செய்து, மஹாபலியை வெல்லுவதாகச் சொல்லிச் சென்ற இறைவன், அதேபோல், அதிதி புத்ரனாக அவதரித்தார்.

நர்மதை ஆற்றின் வடக்குக் கரையில் யாகசாலை அமைத்து யாகம் செய்து கொண்டிருந்தான் மஹாபலி. யாகசாலையை அடைந்தார் வாமனர். அழகும் ஒளியும் மிளிர உள்ளே நுழைந்த குள்ள பிராமணரை வரவேற்ற பலி, யாகசாலையில் தானம் வழங்க நல்ல வாய்ப்பு வாய்த்ததை எண்ணி மகிழ்ந்து, அவருக்கு என்ன வேண்டும் எனக்கேட்டான்.

அப்போதுதான் மூன்றடி மண் வேண்டும் என்று கேட்டார் வாமனர். 'மூன்றடி மண் தானா!' என்று கேலி பேசிய பலியிடம் தனக்கு 'அதுவே போதும்' என்று தீர்மானமாகத் தெரிவித்தார். வாமனருக்குப் பூமியைக் கொடுக்க வேண்டி கமண்டலத்தைக் கையிலெடுத்தான் பலி.

மஹாபலியின் குரு சுக்ராசார்யார். யாசகம் கேட்கும் குள்ள வடிவத்தையும், விநோதமான வேண்டுகோளையும் பார்த்த சுக்ராசார்யார், அது யார் என்பதையும் புரிந்து கொண்டார். தன்னுடைய மாணவனான பலி, இதன் மூலம் சொத்து சுகம் எல்லாவற்றையும் இழந்து விடுவான் என்பதையும், மூன்றடிகளால் வாமனர் உலகை அளந்து விடுவார் என்பதையும் உணர்ந்து கொண்டவர், எப்படியாவது தானத்தைத் தடுத்து பலியைக் காப்பாற்ற வேண்டும் என்று முடிவு செய்தார்.

பலியை நோக்கிப் பேசத் தொடங்கினார் சுக்ராசார்யார்: "பலி! வந்திருப்பது உண்மையில் மஹாவிஷ்ணுவே! உன்னுடைய பதவி, செல்வம், செல்வாக்கு யாவற்றையும் பறிமுதல் செய்து, உன்னை அழிக்கவே இவர் வந்துள்ளார். நீ இவருக்கு மூன்றடிகளைக் கொடுப்பதாகச் சொன்னாய். ஒரு அடியினால் மண்ணையும், இன்னொரு அடியினால் விண்ணையும் அளந்து விட்டால், மூன்றாவது அடிக்கு இடமேது? சொன்னதைக் கொடுக்க முடியாதவன் நரகத்திற்குத் தான் போவான். எனவே நீ சொன்னதை யோசித்துப் பார்" என்று அறிவுரை கூறுகிறார்.

முதலில் கொடுப்பதாகச் சொன்னதை எப்படி மாற்றலாம்? அதற்கும் வழி சொல்கிறார். வேதவாக்கியத்தையே மேற்கோளாகக் காட்டுகிறார். "உடலான மரத்திற்கு 'ஸத்யம்' பூவாகவும் பழமாகவும் விளங்குகிறது; அதே உடலுக்கு வேராக இருப்பது அஸத்யம். மரம் தழைத்தால் பூவும் பழமும் கிடைக்கும். ஆனால், வேரில்லாமல் மரம் தழைக்குமா? உயிரையும் உடலையும் ஜீவனத்தையும் காப்பாற்றிக் கொள்ளச் சொல்லப்படும் பொய் தவறாகாது."

டாக்டர் சுதா சேஷய்யன்

ஆசார்யரை மிகவும் மதித்தவன் மஹாபலி. முன்னால் ஒருமுறை இந்திரனுடன் போரிட்டபோது, உயிரிழந்த தனக்கு மீண்டும் உயிர்கொடுத்தவர் என்பதனால், அவரிடம் நிரம்ப மரியாதையும் அன்பும் கொண்டிருந்தான்.

ஆனாலும், இப்போது அவர் கொடுக்கும் அறிவுரைகளை ஏற்றுக் கொள்ள பலி இசையவில்லை. "பணத்தின் மீது ஆசைப்பட்டோ, அயோக்கியன் போலவோ, கொடுத்த வாக்கை இல்லையென்று மறுக்கமாட்டேன். வேறெதையும் சுமப்பேன்; பொய் சொல்லும் தன்மையைச் சுமக்க மாட்டேன்'' என்று தீவிரமாகவே மொழிந்தான்.

தன் பேச்சைக் கேட்க மறுத்தான் என்பதனால் கோபம் கொண்ட சுக்ராசார்யார் சபித்தார்; எந்த ஆசார்யரின் பலம் அவனை அதுவரை காப்பாற்றியதோ, அது அப்போது அகன்றது.

மஹாபலியின் கதையைச் சொல்கிற சுகர், அவனை 'ஸத்யஸந்தன்' என்று குறிப்பிடுகிறார். வந்திருப்பது மஹாவிஷ்ணு என்று தெரிந்தும், வாமன வடிவத்தால் ஏமாற்றப்படப் போகிறோம் என்பது புரிந்தும் 'உண்மையை மீறமாட்டேன்' என்கிற வைராக்யத்துடன் இருந்த பலி, ஸத்யஸந்தன் தானே!



இதோடு இந்தக் கதை முடிந்து விடவில்லை. திரிவிக்ரமனாக வளர்ந்து, ஓரடியால் மண்ணையும் இன்னொன்றால் விண்ணையும் அளந்து நின்றவர், "என்னை ஏமாற்றி விட்டாயே! வாக்கு மீறிவிட்டாயே!" என்று பலியிடம் கேட்டார். "மூன்றடி கொடுத்தாய். இரண்டடிகளால் எல்லாம் முடிந்து விட்டது. அப்போது மூன்றாமடி என்பது பொய்யாகி விட்டதே!" என்று அவனை மடக்கினார். "ஐயனே! நரகத்துக்கோ, பாசத்துக்கோ, உறவுக்கோ, துக்கத்துக்கோ, தரித்திரத்துக்கோ, தண்டனைக்கோ நான் பயப்

படவில்லை. ஆனால், அஸத்யத்திற்குப் பயப் படுகிறேன். நான் சொன்னது இன்னமும் பொய்யில்லை; மூன்றாவது அடியை என் சென்னியில் சூட்டுங்கள்" என்றான் பலி.

குருவினால் கைவிடப்பட்ட காலத்திலும், பணமும் பலமும் குறைந்து போனபோதும், வேதனை அடைந்த வேளையிலும், சாபம் பெற்ற சூழலிலும், போலி வார்த்தைகளால் மயக்கப்பட்ட நிலையிலும், குதர்க்கமாகத் தாக்குண்டபொழுதிலும், ஸத்யத்தை விடாமல் கட்டிக் காத்த பலி என்ன ஆனான் தெரியுமா?

சோம்பல், நோய், வறுமை எதுவும் அண்டமுடியாத அற்புதமான உலகமான ஸுதலலோகத்தில் அவனை வசிக்கச் செய்தார் விஷ்ணு; எட்டாவது மன்வந்த்ர மான ஸாவர்ணி மன்வந்த்ரத்தில் மஹாபலி தான் இந்திரனாக இருப்பான் என்கிற அருளையும் அளித்தார்.

அதிதியின் மகனான இந்திரனைப் பதவியில் அமர்த்துவதற்காகவும், மஹா பலியை அழிக்கவும்தான் வாமனாவதாரமே நிகழ்ந்தது. ஆனால் தொடக்கத்தில் இருந்த நோக்கம் மாறி, இந்த மன்வந்த்ரத்தில் தேவர்களும் இந்திரனும்கூட வணங்கும் நிலையில் ஸுதலலோகப் பதவியும், அதன் பின் அடுத்த மன்வந்த்ரத்தில் இந்திரனாகவே இருக்கும் நிலைமையும் எப்படி மஹா பலிக்குக் கிடைத்தது?

ஒரேயொரு காரணம்தான் – அவன் உண்மை பேசியது!

"ஸத்யம் வத" என்பது வேத வாக்கியம். ஸத்யத்துக்கு - உண்மைக்கு இவ்வளவு பெருமையா?

இன்றைய சமுதாயத்தில் வாழும் நமக்கு உண்மை இவ்வளவு பெருமையுடையதா என்று வியப்பாகவிருக்கும். இன்று உண்மை பேசப்படுகிறதா? மதிக்கப்படுகிறதா? பெரும் பான்மையோர் உண்மை என்பதைப் பற் றியே கவலைப்படாதபோது, அந்த உண்மை உயர்வானது என்று சொல்ல முடியுமா? சுவாமி விவேகானந்தர் இதற்கு விளக்கம் கொடுத்தார். "பொய்கூட உண்மை என்ற பெயரில்தானே பேசப்படுகிறது; அதனால், உண்மையின் மதிப்பு எப்போதும் குறை யாது!" பொய் சொல்கிற ஒருத்தர், தான் பொய் சொல்வதாக ஒப்புக் கொள்வாரா? தான் பேசுவது உண்மை என்றுதானே தலையிலடித்து ஸத்யம் செய்வார். அப்படி யானால்...? உண்மைதான் உயர்வானது என்று அவருக்கும் தெரியும்.

உண்மையின் மதிப்பு மட்டுமே உயர் வானது என்பதால்தான், சனாதன தர்மம் ஸத்யமே பிரதானம் என்று சொன்னது. இந்து மத இழைகளின் ஊடும் பாவுமாக இலங்குவது ஸத்யம்.

கங்கைச் சமவெளிப் பகுதிகளில் ஆட்சி நடத்தியவன் அபராஜித மன்னன். ஒரு நாள் அதிகாலைப் பொழுதில், கங்கையில் நீராடிவிட்டு நகருக்குள் வந்து கொண்டிருந் தான். எதிரில் எழில்மிகு நங்கையொருத்தி வந்தாள். "யார் இவள்? இந்த அதிகாலைப் பொழுதில் தனியாகப் போகிறாளே" என்று எண்ணிய மன்னன் அவளை விசாரித்தான். "நான்தான் ஐஸ்வரிய லட்சுமி. உன் நாட்டி லேயே நெடுங்காலம் வசித்து விட்டேன்.

## பெரிய பிள்ளையாரைச் சின்ன மூஞ்சூறு சுமப்பது எப்படி?

பிள்ளையாரின் உருவம் பார்வைக்குப் பெரியது ; மூஞ்சூறோ சிறியது. எடையும் வடிவமும் பெரிதாக உள்ள விநாயகப் பெருமானை, எடை யிலும், வடிவிலும் சிறிய ஒரு விலங்கு சுமப்பது பெரிய முரண்பாடு போலத் தெரியும். ஆனால் அதன் தாத்பரியம் வேறு. பார்வைக்குப் பெரியதாக இருந்தாலும் ஸ்தூல உடலின் உண்மை கனமும், பரிமாணமும் குறைவு. ஆனால் சூட்சுமமான சின்ன வடிவத்தின் கனமும் பரிமாணமும் அதிகம்.

சித்தாந்தத்தின்படி இந்த விளக்கத்தைச் சொன்னாலும் இன்னொரு வகையிலும் பார்க் கலாம். இறைமை அல்லது கடவுள் தன்மை என்பது பரந்து விரிந்தது; எல்லையற்றது. எல்லா விதத் திலும் நம்மைவிட பரந்து விரிந்து உயர்ந்த கட வுளை, நம் உள்ளங்களில் வைத்துச் சுமக்க வேண் டும் என்பதுதான் இதன் அடையாளம். வாகனங் களாக ஒவ்வொரு மனித மனமும் இலங்க வேண் டும் ; இறைவனைச் சுமக்கும் வாகனமாக அந்த மனம் இயங்க வேண்டும்.

ராமாயணத்தில் ஓர் அழகான symbolism உண்டு. இராவணனோடு சண்டைக்குப் புறப் படும்போது, இராமபிரான், வானர சைனியத்தைப் பார்த்துச் சொன்னார்: "எல்லோருமே குரங்கு வடிவிலேயே யுத்தத்துக்குப் புறப்படுங்கள்" என்று. யுத்தமெல்லாம் முடிந்தது. எல்லோரும் நந்தி கிரா மத்தை அடைந்தார்கள். அங்கிருந்து அயோத்தி நகரத்தில் நடைபெறவிருக்கும் பட்டாபிஷேகத்துக் குப் புறப்பட்டார்கள். அப்போது இராமபிரான் ஆணையிட்டார்: "வானரங்கள் உருவத்தை மாற்



றிக் கொண்டு மனித வடிவில் வாருங்கள்" என்று!

கிளைவிட்டுக் கிளை தாவும் குரங்கு போன்றதே மனித மனமும். ஒரு எண்ணம் தொட்டு இன்னொரு எண்ணம் என்று தாவிக் கொண்டே இருக்கும். அந்த மனத்தைக் கட்டுப்படுத்தி, நெறிப்படுத்தினால் மனிதனும் தெய்வமாக உயரலாம். அதனால்தான் வானர சைனியத்தை வைத்துக் கொண்டு போரிட்டார் இராமபிரான். சண்டை போடும்போது குரங்கின் சுபாவம் தலை காட்டலாம். ஆனால் அமைதிக்காலத்திலும் ஆட்சிக்காலத்திலும் மனது கட்டுப்பட்டால்தான், அறம் தழைக்கும்.

இன்னும் சொல்லப்போனால், அவதார நோக்கத்தின்படி வானுலகத்துத் தேவர்கள்தான் குரங்குகளாக வந்தவர்கள். குரங்குத் தன்மை நெறிப்படுத்தப்பட்டால் மனிதனும் தெய்வமாகலாம்.

எனவே சற்று வெளியே போகிறேன்" என்றாள். விடை கொடுத்தான் மன்னன். சிறிது தூரத்தில் இன்னொருத்தி வந்தாள். இவளை விசாரித்தால், நீதி தேவதை என்று சொல்லி, 'போய் வருகிறேன்' என்றாள். விடை கொடுத்தான். சிறிது தூரத்தில் தரும தேவதை வந்தாள். அவளுக்கும் விடை கொடுத்தான். மீண்டும் ஒருத்தி வந்தாள். 'ஸத்ய தேவதை' என்றாள். காலில் விழுந்த மன்னன் கெஞ்சிக் கேட்டுக் கொண்டான் : "அம்மா, நீ மட்டும் என்னை விட்டுப் போகாதே!"

மன்னவனின் வேண்டுதலை ஏற்ற ஸத்ய தேவதை நகருக்குத் திரும்பினாள். அவள் இருக்குமிடமே தங்களுக்கும் இருப்பிடம் என்று மற்ற மூவரும் திரும்பினார்கள்!

அபராஜிதன் என்றால் 'யாராலும் வெல்லப்பட முடியாதவன்' என்று பொருள். உண்மை யாரிடத்தில் உண்டோ அவர் பிறரால், ஏன், இறைவனால்கூட வெல்லப் படமாட்டார் என்கிறது சனாதன தர்மம்.

**த**னிமனிதர்களுக்கும், சமுதாயங்களுக்கும் என்றில்லை. நாடுகள் கூட உண்மையின் அடிப்படையில்தான் வெற்றி பெற முடியும். இதன் அடிப்படையிலேயே, முண்டகபநிஷத் சொல்லும் 'ஸத்யமேவ ஜெயதே' என்ற வாசகத்தை இந்தியத் தாய் தன்னுடைய ஏற்றமிகு கொள்கையாக ஏற்கிறாள்.

நவநாகரிகம் மலிந்துவிட்ட, நவீன யுக்திகள் நிறைந்துவிட்ட இந்த நாளில், பல்வேறு பிரச்னைகளுக்கு அடிப்படைக் காரணம் எது? திருப்பிக் கொடுக்கப்படாத பணம் - அதனால் ஏற்படும் பொருளாதாரச் சிதைவு - அதன் விளைவாக தனிமனித மற்றும் நிறுவனச் சேதங்கள். ஆதரவு தேடும்போது சொன்ன சொல்லை, அடுத்த சில நாட்களிலேயே மறந்து விடுதல் - அதனால் ஏற்படும் அரசியல் உடைப்புகள் - விளைவாகத் தோன்றும் விபரீதங்கள். பிற நாடுகளையும் மக்களையும் கட்டியாள வேண்டும் என்கிற வெட்டி மதர்ப்பில் வளர்த்து விடப்படும் வக்ரங்கள் - விஸ்வ ரூபம் எடுக்கும் வாக்கு மீறல்கள். சராசரி வாழ்க்கையில் ஆரம்பித்து, உலக அரங்கம் வரை முக்கியமான அடிப்படைச் சிக்கல் ஒரே மாதிரிதான். உண்மை மீறப்படுவது அல்லது மறைக்கப்படுவது; பொய்க்கு அரிதாரம் பூசி அகல நீளங்களை ஆக்கிரமிப்பது. 'உண்மையைக் கடைப்பிடிப்பது' என்பது பழமையானதாக இருக்கலாம். ஆனால் பொருத்தமானது; வாழ்க்கையை வளப்படுத்துவது.

மஹாபலியிடமிருந்து எல்லாவற்றையும் பறிக்க வந்த வாமனர் தன்னையே அவனிடத்தில் பறிகொடுத்தாரே; எடுக்க வந்தவர் ஏற்றங்களைக் கொடுத்து விட்டுப் போனாரே; அழிக்க நினைத்தவர் 'அடுத்த வராலும் வணங்கப்படுவாய்' என்று அருள் செய்தாரே - இறைவன் கூட உண்மைக்கும் ஸத்தியத்துக்கும் கட்டுப்பட்டவன். முழுமுதற் கடவுள், பரம்பொருள், எல்லாம் வல்ல இறைமை என்று ஸத்தியத்திற்கே முதலிடம் கொடுக்கிறது இந்து மதம். "சாமி சத்யமா" என்று சொல்வோம். சாமிதான் சத்யம்; சத்யம் என்பதே சாமி.

(தொடரும்)

# முகங்கள்



சவலைப் பிள்ளையாய் அம்மாவின் தோள்களில்
துவண்டிருந்தபோது எதிர்வீட்டுப் பாட்டி சொல்வாளாம்
எங்கேயிது தேறப் போகிறது என்று.
எப்படியோ என்னைப் பிழைக்க வைத்துவிட்டு
செத்துப் போனாள் அம்மா.

புயலடித்தபோதும் உடைந்து விடாத
ஒரு பனித்துளி போல எனைக் கட்டிக்காத்தவளின்
அசைவுகள் சுவாசப் பைக்குள்
சுழன்று கொண்டேயிருக்கின்றன.

தயிர் சாத முறை வரும்போது
அப்பாவின் தட்டில் கடைசி வாய்ச் சோறு எப்போதும்
எனக்குத் தேவாமிர்தமாய் ஊட்டப்படுவதுண்டு.

தயிர் சாதமும் பக்கோடாவும்
எங்கேனும் பார்க்க நேர்ந்தால்
தந்தையின் ஞாபகங்கள் கண்களில் விரிகின்றன.

கண் கட்டியின்போது பெரியப்பாவின் உள்ளங்கைச் சூடு
ஆள் காட்டி விரல் வழியே இமைகளுக்குள் சேமிக்கப்பட்டுள்ளது.

சாலையோரமாய்ப் பள்ளி விட்டு வரும் எனைக் கண்டதும்
கிராமம் வந்து திரும்பும்
பேருந்து சன்னல் பக்கமிருந்து
தாய் மாமன் விட்டெறிந்த எட்டணாவில் தெரிகிறது
நாணயத்தின் பூ மீது அத்தை முகமும், தலைமீது மாமன் முகமும்.

தருமசேனன்

## ஏறு நூறு —

"என்னால் கான்சன்ட்ரேட் பண்ணவே முடியலே" என்று ஒரு குறை.

"நான் படிக்க ஆரம்பிக்கிறபோதெல்லாம் மனசு அலைந்து திரிகிறது!" என்று இன்னொரு விதமான குறை.

படிப்பில் கவனம் இல்லை என்று மாணவர்கள் சொல்லுவது புதிதல்ல. கவனம் என்பது என்ன? குறிப்பிட்ட ஒரு விஷயத்தில் சிந்தனையை ஒருமுகமாகச் செலுத்துவது. நம் எல்லோருக்குமே இந்தத் திறமை இருக்கிறது – சில சமயங்களில்.

கவனம் செலுத்துவது எப்படி என்பதைக் கற்றுக் கொள்ள, பயிற்சி அவசியம். எந்த விஷயத்தைக் கற்றுக் கொள்ளவும் பயிற்சி எப்படித் தேவையோ, அதைப் போலத்தான் இதுவும்.

இந்தப் பயிற்சி மட்டும் முடிந்து விட்டால், சில நாட்களிலேயே மாற்றத்தைக் காண்பீர்கள். நாலு முதல் ஆறு வாரங்களில் அந்தப் பயிற்சியின் பலனைத் தெரிந்து கொள்ளலாம்.

கவனத்தை அதிகரிக்க இரண்டு வழிகள்

# அலைபாயுதே!

இருக்கின்றன.

1. மனத்தை ஒரு சுய வரைமுறைக்குள் கொண்டு வருவது.

2. எதை எல்லாம் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர முடியுமோ, அவற்றை வரிசைப்படுத்திக் கொள்ளுவது.

முதலில் சுயவரைமுறை பற்றிப் பார்ப்போம்:

'இங்கேயே இரு': இந்த மந்திரச் சொல்லுக்கு மகத்தான சக்தி உண்டு. உங்கள் மனது எப்பொழுதெல்லாம் கவனம் இல்லாமல் அலையத் தொடங்குகிறதோ, அப்பொழுதெல்லாம், 'இங்கேயே இரு' என்று உங்களுக்குள் சொல்லிக் கொள்ளுங்கள். அலைகிற நினைப்பை இழுத்துக் கொண்டு வாருங்கள்.

உதாரணமாக, வகுப்பில் பாடம் நடந்து கொண்டிருக்கிறது. உங்கள் மனம் அதைத் தாண்டி, வயிறு பகபகவென்று பசிப்பதை நினைவூட்டுகிறது. 'மனமே, கவனமாக இரு' என்று உங்களுக்குள் நீங்கள் ஒரு சின்னக் கட்டளை இடுங்கள். கவனம் மெல்லத் திரும்பி அப்படியே நிலைக்கும்.

அப்புறம் நாள் போகப் போக, மனம் இப்படி அலை பாய்வது குறைந்து கொண்டே வரும். பொறுமையாக மேற்படி பயிற்சியை மேற்கொள்ளுங்கள். வேறுபாடு நிச்சயம் தெரியவரும்!

ஆசிரியர் என்ன சொல்லுகிறார் என்பதிலேயே கவனமாக இருக்கும்போது, வகுப்பில் யாரேனும் இருமுவதையோ, வந்து போவதையோ பார்த்துக் கொண்டிருக்காதீர்கள். யாருடனாவது பேசும்போது அவர் முகத்தைக் கவனியுங்கள். அவர் என்ன சொல்லுகிறார் என்பதில் மட்டுமே கவனமாக இருங்கள். உலகில் உள்ள மற்றெல்லா விஷயங்களும் வெளியே காத்திருக்கட்டும்.

'இங்கேயே இரு' மந்திரம் போலவே, 'வெளியே இரு' என்ற மந்திரமும் அவசியமானது.

1. ஓய்வு கொடுங்கள்: முப்பது நிமிடங்கள் தொடர்ந்து படித்தால், மூன்று நிமிடம் ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள். தொண்ணூறு நிமிடங்கள் படித்தால், சற்றே நீண்ட ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள்.

2. விஷயத்தை மாற்றுங்கள்: பல மாணவர்கள், தங்கள் கவனத்தை ஒரு சப்ஜெக்ட்டிலிருந்து இன்னொரு சப்ஜெக்ட்டுக்கு ஒரு மணி, இரண்டு மணிக்கு ஒரு முறை மாற்றிக் கொண்டே இருப்பார்கள். வேறு விஷயத்துக்கு மாறும்போது கவனம் கூடும்.

3. உங்கள் செயல்பாடுகளை அதிகமாக்குங்கள்: ஒரே பாடத்தை ஆரம்பம் முதல் கடைசி வரை படிக்கும்போது, மனம் அங்கே இங்கே போகலாம். அதனால், ஒவ்வொரு பகுதியையும் படித்துவிட்டு, ஒரு கேள்வி கேட்டுக் கொள்ளுங்கள்.

4. சுறுசுறுப்பான நேரம் எது, கண்டு




பிடியுங்கள்: அப்போது பார்த்து, கஷ்டமான பகுதிகளைப் படித்து முடியுங்கள். உடம்பில் சுறுசுறுப்புச் சக்தி குறைந்திருக்கும்போது, ஈஸியான பகுதிகளையும், பிடித்தமான பாடங்களையும் படியுங்கள்.

5. சுற்றுப்புறம் எப்படி?: போதுமான வெளிச்சம் இருக்கிறதா? முதுகு வளையாமல் உட்கார நாற்காலி வசதியாக இருக்கிறதா? கவனம் அப்போதுதான் கூடும்.

6. டெலிபோன், டெலிவிஷன் எல்லாவற்றிலிருந்தும் தள்ளி இருங்கள். படிக்கிறபோது, தொலைபேசி தொல்லையாக இருந்தால் ரிஸீவரைக் கீழே வைத்து விடுங்கள். வெளிப்புறத் தொல்லைகள் இருந்தால் கதவைச் சாத்திக் கொண்டு அமர்ந்து விடுங்கள்.

7 படிப்பதற்கு என்று தனியாக ஓர் இடம் ஒதுக்கி வைத்துக் கொள்வது நல்லது.

8. ஒவ்வொரு சப்ஜெக்ட்டுக்கும் நேரம் ஒதுக்குங்கள். சில சமயம் கூடுதலாக ஒரு மணி நேரம் தேவைப்பட்டால், அதற்கும் தயாராக இருங்கள்.

9. தூக்கம் வரும் சமயத்திலும், களைப்பாக இருக்கும் போதும், படித்ததை நினைத்துப் பார்க்க முயலாதீர்கள்.

10. வெகுமதி: வெற்றிகரமாகப் படித்து முடித்து விட்டாலோ, குறிப்பிட்ட நேரத்தில் கவனம் சிதையாமல் 'கான்சன்ட்ரேஷ'னுடன் படித்துப் புரிந்து கொண்டாலோ, உங்களை நீங்களே பாராட்டிக் கொள்ளலாம். இதற்கு ஈடு இணை கிடையாது. வகுப்பில் சட்டென்று உங்களைக் கேட்கும் கேள்விக்குப் பதிலை நினைவுக்குக் கொண்டு வரும் அற்புதம் இதனால் சாத்தியப்படும். கவனக் கலைப் பயிற்சி, உங்களுக்குத் தன்னம்பிக்கையைத் தரும். எதிலும் ஒரு முழுக் கவனம் செலுத்த உங்களைத் தூண்டும்.

(தொடரும்)

---

**ஆர்.கண்ணன்**

# அவசரம்

**ஜி.பி.சதுர்புஜன்**

"எங்கேடீ உஷா வெச்சுத் தொலைச்ச அந்த சோப்பை?.."

குளிக்கப் போன ஜெயராமன்தான் பாத்ரூமிலிருந்து கத்தோ கத்தென்று கத்திக் கொண்டிருந்தான்.

"சனியன், எத்தனை தடவை சொன்னாலும் தெரிய மாட்டேங்கறது. எங்கியாவது மாத்தி மாத்தி வெச்சுத் தொலைச்சுப்புடற... என்னடாது, வீட்டுக்காரர் காலைல வேலைக்குப் போகணும்னா எவ்வளவு டென்ஷன்ல இருப்பார்னு ஒரு கவலை கிடையாது... தெனம் தெனம் இப்பிடி ஏதாவது காலங்காத்தால ஒரு ப்ராப்ளம்...!"

பொரிந்து தள்ளிக் கொண்டிருந்தான் ஜெயராமன். அவன் இப்படித்தான். எப்போதும் ஒரு அவசரம். அதுவும் காலை வேளையென்றால் சொல்லவே வேண்டாம். எதையாவது நினைத்துக் கொண்டு ஒரு ஆத்திரம். அப்புறம் கத்தக் கிளம்ப வேண்டியது. ஆரம்பித்தால் நிறுத்தத் தெரியாது.

"அங்கேயேதாங்க இருக்கு.. நல்லாப் பாருங்க. எப்போதும் வெக்கற அந்த ஸ்டாண்டுலதான் இருக்கு... என்னன்னு தெரியறதுக்கு முன்னே கத்த ஆரம்பிச்சுடுறீங்களே...!"

அப்புறம்தான் பார்த்தான். உஷா சொன்னதுபோல் சோப்பு டப்பா அங்கேயேதான் இருந்தது. அவன்தான் அவசரத்தில சரியாகக் கவனிக்கவில்லை. ஆனாலும், கத்தினதுக் கெல்லாம் பெயருக்காவது ஒரு சாரி சொல்ல வேண்டுமே! ஊஹூம், அதுதான் கிடையாது. 'பெண்டாட்டிகிட்ட என்ன சாரி கேக்கறது?' என்ற நினைப்பு போல.

தலையைத் துவட்டிக் கொண்டே வெளியே வந்தவன், இங்கேயும் அங்கேயும் ஓடினான். மீண்டும் முகத்தில் திடீரென்று ஒரு கடுகடுப்பு...

"இந்த ஒயிட் ஷர்ட் எங்கே போயிடுச்சு...? நேத்திக்கே தோய்க்கணும்னு சொன்னேனே?... அடடா.. ஆபீஸுக்கு லேட்டாயிக்கிட்டே இருக்கு... அஞ்சு நிமிஷம் லேட்டாப் போனாக்கூட மேனேஜர் கிட்ட கையைக் கட்டிக்கிட்டு நிக்கணுமே! அந்த ஆளுகிட்டே யாரு பாட்டுக் கேக்கறது?... இதெல்லாம் இந்த பெண் ஜென்மத்துக்குத் தெரிஞ்சாத்தானே?...."

அதே கோப ராகத்தில் மற்றுமொரு கோர ஆலாபனை.



உஷா கையிலிருந்த தோசைத் திருப்பியைக் கீழே வைத்துவிட்டு, அடுப்பையும் சிம்மில் வைத்து விட்டு அரக்கப் பரக்க ஓடி வந்தாள்.

''இந்தாங்க... கையைக் காட்டுங்க... எல்லாம் நேத்திக்கே ரெடி பண்ணி அயர்ன் பண்ணி வெச்சிருக்கேன்ல... அப்பப்பா... கொஞ்சம் பொறுமையாகத்தான் இருங்களேன்... எல்லாம் கரெக்ட் டயத்துக்கு ஆபீசுக்குப் போயிரலாம்... தெனம் நான்தானே ஒங்களை சரியா அனுப்பி வெக்கறேன்.... ஏதோ, நீங்கதான் ஆபீசையே தாங்கிறமாதிரி, ரொம்பத்தான் பரபரக்கிறீங்க...!''

''ஆமாண்டீ, தாங்கத்தான் தாங்கறேன்! அவனவன் வி.ஆர்.எஸ். வாங்கிக்கிட்டு ஜாலியா ஓடிட்டான். இருக்கிறது நாங்க நாலு பேருதான். பேங்க்ல கிளார்க்ன்னா சும்மாவா? இப்பல்லாம் முன்னே மாதிரி இல்லையாக்கும்! மாங்கு மாங்குன்னு எவ்வளவு வேலை காத்துக் கிடக்கும் தெரியுமா...? ஒன்பதுன்னா, எட்டு



''எழுத்தாளரைக் கல்யாணம் பண்ணினியே, எப்படி இருக்கு?''
''ஐய்யோ, அதையேன் கேட்குறே!''
''வீட்ல மாவாட்டச் சொன்னா, அரைச்ச மாவைத்தான் அரைப்பேன்ங்கறார்!''

— எஸ். முகம்மது யூசுப்

அம்பதுக்கே இந்த பென்ஷன் கேஸெல்லாம் வந்து நிக்கும்... அது அது சூல் பேசும்... நீ வந்து பதில் சொல்லுவியா? ஒனக்கெங்க என்னோட அவசரம் புரியப் போவுது?''

சனியனே என்று முடிக்காத குறைதான். சன்னென்று விழுந்தான்.

''இன்னும் ஒன்னே ஒண்ணு சாப்பிட்டுட்டுப் போங்க'' என்று அன்போடு போட்ட மூன்றாவது தோசையையும் தள்ளிவிட்டான்.

''போடீ, போ, இந்தக் காலை வேளை ஆபீஸ் அவசரத்துல, இதுக்கு மேலே சாப்பிட முடியாது. நீயே சாப்பிட்டுக்க..''

உஷாவும் என்ன செய்வாள்? அவளுக்கும் அசதியாகத்தான் இருந்தது. ஐந்து மணிக்கே அலாரம் வைத்து எழுந்து, வரிசை வரிசையாய், ஒவ்வொரு காரியமாய் ஓடி ஓடி செய்து கொண்டுதான் இருக்கிறாள். ஆனால், என்ன செய்தாலும், 'ஒனக்கென்ன தெரியும் என்னோட ஆபீஸ் அவசரம்?' என்கிறாரே!

கணவன் பைக்கை உதைத்துக் கிளம்பும் போது, ஏனோ தன்னையே உதைப்பது போல் தோன்றியது அவளுக்கு. அப்போதும் பொறுமையாக 'பை' சொல்லி விட்டு உள்ளே வந்தாள்.

எவ்வளவு எழுப்பியும் கண்ணைத் திறக்கப் பிடிக்காமல் அதுவரை படுக்கையில் புரண்டு கொண்டிருந்த மகன் கார்த்திக்கை தாஜா பண்ணி, கையில் போர்ன்விட்டாவுடன் எழுப்பினாள். பிறகு, அவனையும் தயார் செய்து, ஸ்நாக் பாக்ஸ், லஞ்ச் பாக்ஸ் இத்யாதி இத்யாதியுடன் பள்ளிக்கு அனுப்பி வைத்தாள்.



''சொத்தையெல்லாம் விற்று சொந்தமாக ஒரு பத்திரிகை ஆரம்பி!''
''சே! என் கதை பத்திரிகையில் வர என்ன வழின்னு உன்னிடம் போய்க் கேட்டேன் பார்!''

— உ. ராஜாஜி



''யோவ் ஏட்டு! போட்டாவுல உள்ள தள்ளுறதுக்குச் சரியான ஆளுன்னு கூட்டியாந்திருக்கியே, என்னய்யா செய்தான்?''
''ரோட்டு ஓரமா நின்னு 'நாட்டுத் துப்பாக்கி'யால கொக்கு சுட்டுக் கிட்டிருந்தான் சார்!''

—புளியரை கணேசன்

கார்த்திக் கியர் சைக்கிளை மிதித்து அந்தப் பக்கம் சென்ற பின், ஹாலுக்கு வந்து கடிகாரத்தைப் பார்த்தால், மணி எட்டு ஐம்பது.

அடுத்த பத்து நிமிடத்தில், ஃபாஸ்ட் ஃபார்வோர்டில் போடும் வீடியோ டேப் போல, பறந்து பறந்து, குளித்து, டிரஸ் பண்ணி, சாப்பாடு மூட்டை கட்டி, மூச்சிரைக்க வெளியே ஓடி வந்து, கைனடிக்கை அவசர அவசரமாகக் கிளப்பினாள் உஷா.

மாம்பலம் கனரா வங்கிக் கிளையின் மேனேஜராயிற்றே அவள்! ○

# சிவகாமியின் சபதம்

இரண்டாம் அத்தியாயம்

## மானவன்மன்

திருக்கழுக்குன்றத்தைச் சுற்றிலும் விசாலமான பிரதேசத்தில் பல்லவ சைனியம் தண்டு இறங்கியிருந்தது.

அந்தக் குன்றின் உச்சியில் வீற்றிருந்த சிவபெருமானாகட்டும், அந்தப் பெருமானைத் தினந்தோறும் வந்து வழிபட்டுப் பிரஸாதம் உண்டு சென்ற கழுகுகள் ஆகட்டும், அதற்கு முன்னால் அக் குன்றின் சாரலில் அம்மாதிரிக் காட்சியை எப்போதும் பார்த்திருக்க முடியாது. குன்றின் மேலேயிருந்து வடக்கே நோக்கினால் கண்ணுக்கு எட்டிய தூரத்துக்கு ஒரே யானைகள், யானைகள், யானைகள்! உலகத்திலே இத்தனை யானைகள் இருக்க முடியாது! இவ்வளவு யானைகளும் ஒரே இடத்தில் வந்து சேர்ந்திருப்பதினால் பூமி நிலை பெயர்ந்து விடாதா என்றெல்லாம் பார்ப்பவர்கள் மனத்தில் சந்தேகத்தைக் கிளப்பும்படியாக எல்லையில்லாத தூரம் ஒரே யானை மயமாகக் காணப்பட்டது.

கிழக்கே திரும்பிப் பார்த்தால், உலகத்திலே குதிரைகளைத் தவிர வேறு ஜீவராசிகள் இல்லையென்று சொல்லத் தோன்றும். எல்லாம் உயர்ந்த ஜாதிக் குதிரைகள்; அரபு நாட்டிலிருந்தும் பாரசீகத்திலிருந்தும் கப்பலில் வந்து மாமல்லபுரம் துறைமுகத்தில் இறங்கியவை. வெள்ளை நிறத்தவை, சிவப்பு நிறத்தவை, பளபளப்பான கரிய நிறமுடையவை, சிவப்பு நிறத்தில் வெள்ளைப் புள்ளி உள்ளவை; ஹா ஹா! அந்த அழகிய மிருகங்களைப் பார்த்துக் கொண்டேயிருக்கலாமென்று தோன்றும். போர்க்களத்துக்குப் போகும் இந்தப் பதினாயிரக்கணக்கான குதிரைகளில் எவ்வளவு குதிரைகள் உயிரோடு திரும்பி வருமோ என்று நினைத்துப் பார்த்தால் கதிகலங்கும்.

தென்புறத்தில் கண்ணுக்கெட்டிய தூரம்

**அமரர் கல்கி**

குதிரைகள் பூட்டிய ரதங்களும், ரிஷபங்கள் பூட்டிய வண்டிகளும், பொதி சுமக்கும் மாடுகளும் ஒட்டகங்களும் கோவேறு கழுதைகளும் காணப்பட்டன.

வண்டிகளிலே தானிய மூட்டைகளும் துணி மூட்டைகளும் கத்திகளும் கேடயங்களும் வாள்களும் வேல்களும் ஈட்டிகளும் சூலங்களும் வில்களும் அம்பறாத் தூணிகளும் இன்னும் விதவிதமான விசித்திர ஆயுதங்களும் பிரம்மாண்டமான வடக் கயிறுகளும் நூல் ஏணிகளும் கொக்கி



களும் அரிவாள்களும் மண்வெட்டிகளும் தீப்பந்தங்களும் தீவர்த்திகளும் அடுக்கப்பட்டிருந்தன. வண்டியில் ஏற்றப்படாமல் இன்னும் எத்தனையோ ஆயுதங்களும் மற்றக் கருவிகளும் மலைமலையாக ஆங்காங்கு கிடந்தன. ஓரிடத்தில் மலைபோலக் குவிந்திருந்த தாழங்குடைகளைப் பார்த்தால், அவற்றைக் கொண்டு பூமியின் மீது ஒரு சொட்டு மழை கூட விழாமல் வானத்தையே மூடி மறைத்து விடலாம் என்ற எண்ணம் உண்டாகும்.

மேற்கே திரும்பினால், அம்மம்மா! பூவுலகத்திலுள்ள மனிதர்கள் எல்லாம் இங்கே திரண்டு வந்திருக்கிறார்களா, என்ன? அப்படிக் கணக்கிட முடியாத வீரர்கள் ஈ மொய்ப்பது போலத் தரையை மொய்த்துக் கொண்டு நின்றார்கள்! இராவணேசுவரனுடைய மூல பல சைனியம் என்று நாம் கேள்விப்பட்டிருக்கும் மகா சைனியத்திலே கூட வீரர்களின் எண்ணிக்கை இவ்வளவு இருந்திருக்



குமா என்று சொல்ல முடியாது.

இவ்விதம் அந்த நாலு வகைப்பட்ட பல்லவ சைனியமும் தண்டு இறங்கியிருந்த பிரதேசம் முழுவதிலும் ஆங்காங்கு ரிஷபக் கொடிகள் வானளாவிப் பறந்து காற்றில் ஆடிக் கொண்டிருந்தன.

மேற்கூறிய சேனாசமுத்திரத்தை அணுகி, மாமல்ல நரசிம்ம சக்கரவர்த்தியானவர் ரதத்தில் வந்து கொண்டிருந்தார்.

அவரைத் தூரத்திலே பார்த்ததும், பூரண சந்திரனைக் கண்டு ஆஹ்லாதித்துப் பொங்கும் சமுத்திரத்தைப் போல அந்தச் சேனா சமுத்திரத்தில் மகத்தான ஆரவாரம் ஏற்பட்டது.

சங்கங்களும் தாரைகளும் பேரிகைகளும் முரசுகளும் 'கடுமுகங்'களும் 'சமுத்திர கோஷங்'களும் சேர்ந்தாற்போல் முழங்கிய போது எழுந்த பேரொலியானது, நாற்றிசைகளிலும் பரவி, வான முகடு வரையில் சென்று, அங்கிருந்து கிளம்பி எதிரொலியோடு மோதி, கொந்தளிக்கும் கடலில் அலைகள் ஒன்றையொன்று தாக்கி உண்டாக்குவது போன்ற பேரமளியை உண்டாக்கியது.

இன்னும் அந்த வீரர் பெருங்கூட்டத்தில் ஆயிரமாயிரம் வலிய குரல்களிலிருந்து, "மாமல்லர் வாழ்க!", "புலிகேசி வீழ்க!" "காஞ்சி உயர்க!", "வாதாபிக்கு நாசம்!" என்பன போன்ற கோஷங்கள் காது செவிடுபடும்படியான பெருமுழக்கமாக ஏகாபித்து எழுந்து, வானமும் பூமியும் அதிரும்படி செய்தன.

இப்படி ஆரவாரித்த மாபெருஞ் சைனியத்திலிருந்து தனியே பிரிந்து உயர்ந்த ஜாதிக் குதிரை மீது ஆரோகணித்திருந்த ஒரு கம்பீர புருஷன் சக்கரவர்த்தியின் ரதத்தை எதிர்கொள்வதற்காக முன்னோக்கிச் சென்றான். ரிஷபக் கொடி ஏந்திய வீரர் இருவர் அவனைத் தொடர்ந்து பின்னால் சென்றார்கள்.

அப்படி மாமல்லரை எதிர்கொள்வதற்காகச் சென்றவன்தான் மானவன்மன் என்னும் இலங்கை இளவரசன்.


ந்த மானவன்மனுடைய தந்தையும் மகேந்திர பல்லவரும் நண்பர்கள். மகேந்திர பல்லவரைப் போலவே மானவன்மனுடைய தந்தையும் கலைகள் வளர்ப்பதில் ஈடுபட்டு, அரசியலை அதிகமாய்க் கவனியாது விட்டிருந்தார். இதன் பலனாக அவர் இறந்ததும் மானவன்மன் சிம்மாசனம் ஏற இடங்கொடாமல் அட்டதத்தன் என்னும் சிற்றரசன் இராஜ்யத்தைக் கைப்பற்றிக் கொண்டான். மானவன்மன் காஞ்சி மாமல்லருக்கு உதவி கோரித் தூது அனுப்பினான். அப்போதுதான் தொண்டை மண்டலத்தைப் பெரும் பஞ்சம் பீடித்திருந்தது. எனினும் மாமல்லர் ஒரு சிறு படையைக் கப்பலில் ஏற்றி இலங்கைக்கு அனுப்பி வைத்தார். அந்தப் படை இலங்கையை அடையும் சமயத்தில் மானவன்மன் படு தோல்வியுற்றுக் காட்டில் ஒளிந்து கொண்டிருந்தான். மாமல்லர் அனுப்பிய சிறு படை அட்டதத்தனோடு போரிடுவதற்குப் போதாது என்று கண்ட மானவன்மன், பல்லவர் படையோடு தானும் கப்பலில் ஏறிக் காஞ்சிக்கு வந்து சேர்ந்தான்.

மகேந்திர பல்லவருடைய சிநேகிதரின் மகன் என்ற காரணத்தினால், மானவன்மன் மீது இயற்கையாகவே மாமல்லருக்கு அன்பு ஏற்பட்டது. அதோடு அயல்நாட்டிலிருந்து தம்மை நம்பி வந்து அடைக்கலம் புகுந்தவனாகையால் அன்போடு அனுதாபமும் சேர்ந்து, அழியாத சிநேகமாக முதிர்ச்சி அடைந்தது. வெகு சீக்கிரத்தில் இணைபிரியாத தோழர்கள் ஆனார்கள்.

மாமல்லர் பரஞ்சோதிக்குத் தமது இருதயத்தில் எந்த ஸ்தானத்தைக் கொடுக்க விரும்பினாரோ, அந்த ஸ்தானத்தை இப்போது மானவன்மன் ஆக்கிரமித்துக் கொண்டான்.

உண்மையில் மாமல்லருக்கும் பரஞ்சோதிக்கும் மனமொத்த அந்தரங்க சிநேகிதம் எப்போதும் ஏற்படவேயில்லை. ஏனெனில், பரஞ்சோதியின் உள்ளத்தில் மாமல்லர் புராதன சக்கரவர்த்தி குலத்தில் உதித்தவராகையால் தாம் அவரோடு சரிநிகர் சமானமாக முடியாது என்னும் எண்ணம் எப்போதும் இருந்து வந்தது.

அதோடு, ஒன்பது வருஷத்துக்கு முன்னால் வாதாபியிலிருந்து திரும்பி வந்ததிலிருந்து, சேனாதிபதி பரஞ்சோதி படையெடுப்புக்கு வேண்டிய ஆயத்தங்களில் முழுவதும் கவனத்தைச் செலுத்தியிருந்தார். ஊர் ஊராகச் சென்று வீரர்களைத் திரட்டுவதிலும், அவர்களுக்குப் போர்ப் பயிற்சி அளிப்பதிலும், அவர்களில் யானைப் படை, குதிரைப் படைகளுக்கு ஆட்களைப் பொறுக்கி அமைப்பதிலும், ஆயுதங்கள் சேகரிப்பதிலும் அவர் பரிபூரணமாய் ஈடுபட்டிருந்தார். மாமல்லரிடம் சிநேகித சல்லாபம் செய்வதற்கு அவருக்கு நேரமே இருப்பதில்லை.

எனவே, மாமல்லருக்கு மனமொத்துப் பழகுவதற்கு வேறொருவர் தேவையாயிருந்தது. அந்தத் தேவையை இலங்கை இளவரசன் மானவன்மன் பூர்த்தி செய்வித்தான்

மானவன்மன் இலங்கையிலிருந்து காஞ்சி வந்தவுடனே மாமல்லர் அவனுடைய உதவிக்காகப் பெரிய சைனியத்தை அனுப்பி வைப்பதாகக் கூறினார். ஆனால் அப்போது வாதாபி படையெடுப்புக்காகச் சைனியம் திரட்டப்பட்டு வந்ததை மானவன்மன் அறிந்ததும் அந்தச் சைனியத்தில் ஒரு பெரும் பகுதியைப் பிரித்துக் கொண்டு போக விரும்பவில்லையென்பதைத் தெரிவித்தான். வாதாபி யுத்தம் முடியும் வரையில் அங்கேயே தான் தங்குவதாகவும், பிறகு இலங்கைக்குப் போவதாகவும் சொன்னான்.

இதனால் மாமல்லர் மிகவும் மகிழ்ச்சியடைந்தார். அச் சமயம் இலங்கைக்குப் பெரிய சைனியம் அனுப்புவதற்குச் சேனாதிபதி பரஞ்சோதி ஆட்சேபிப்பார் என்ற பயம் மாமல்லருக்கு உள்ளுக்குள் இருந்தது. எனவே, மானவன்மன் இலங்கைப் படையெடுப்பைப் பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்று சொன்னது நரசிம்மவர்மருக்கு மிக்க திருப்தியையளித்தது. மானவன்மனுடைய பெருந்தன்மையைப் பற்றியும், சுயநலமில்லாத உயர்ந்த குணத்தைப் பற்றியும் எல்லாரிடமும் சொல்லிச் சொல்லிப் பாராட்டினார்.

பின்னர், வாதாபிப் படையெடுப்புக்குரிய ஆயத்தங்களில் மானவன்மனும் பரிபூரணமாய் ஈடுபட்டான். முக்கியமாக யானைப் படைப் போரில் மானவன்மனுக்கு விசேஷ சாமர்த்தியம் இருந்தது. எனவே, யானைப் படைகளைப் போருக்குப் பயிற்சி செய்வதில் அவன் கவனத்தைச் செலுத்தினான்.

புலிகேசி முன்னம் படையெடுத்து வந்த போது, அவனுடைய பெரிய யானைப் படைதான் அவனுக்கு ஆரம்பத்தில் வெற்றியளித்ததென்றும், யானைப் படை போதிய அளவில் இல்லாதபடியாலேயே மகேந்திர பல்லவர் பின்வாங்கவும் கோட்டைக்குள் ஒளியவும் நேர்ந்தது என்றும் பரஞ்சோதியும் மாமல்லரும் அறிந்திருந்தார்கள். எனவே, வாதாபிப் படையெடுப்புக்குப் பெரும் யானைப் படை சேகரிக்கத் தீர்மானித்து, சேர நாட்டிலிருந்து ஆயிரக்கணக்கான யானைகள் தருவித்திருந்தார்கள். அந்த யானைகளைப் போருக்குப் பழக்குவதற்கு மானவன்மன் மிக்க உதவியாயிருந்தான்.

வாதாபிக்குப் படை கிளம்ப வேண்டிய தினம் நெருங்க நெருங்க, மானவன்மனுக்கும் மாமல்லருக்கும் ஒரு பெரும் வாக்குப் போர் நடக்கலாயிற்று; படையெடுப்புச் சேனையோடு தானும் வாதாபி வருவதற்கு மானவன்மன் மாமல்லரின் சம்மதத்தைக் கேட்டுக் கொண்டிருந்தான்.

மாமல்லரோ வேறு யோசனை செய்திருந்தார். அதிதியாக வந்து அடைக்கலம் புகுந்தவனைப் போர்க்களத்துக்கு அழைத்துப் போக அவருக்கு விருப்பம் இல்லை. அதோடு அவர் மனத்தில் இன்னொரு யோசனையும் இருந்தது; தாமும் பரஞ்சோதியும் வாதாபிக்குச் சென்ற பிறகு, காஞ்சி இராஜ்யத்தைக் கவனித்துக் கொள்ளவும் அவசியமான போது தளவாடச் சாமான்கள், உணவுப் பொருள்கள் முதலியவை சேர்த்துப் போர்க்களத்துக்கு அனுப்பி வைக்கவும் திறமையுள்ள ஒருவர் காஞ்சியில் இருக்க வேண்டும். அதற்கு மானவன்மனை விடத் தகுந்தவர் வேறு யார்?

அன்றியும் மானவன்மனைக் காஞ்சியில் விட்டுப் போவதற்கு மாமல்லரின் இதய



அந்தரங்கத்தில் மற்றொரு காரணமும் இருந்தது.

வாழ்வு என்பது சதமல்ல; எந்த நிமிஷத்தில் யமன் எங்கே, எந்த ரூபத்தில் வருவான் என்று

சொல்ல முடியாது. அதிலும் நெடுந் தூரத்திலுள்ள பகைவனைத் தாக்குவதற்குப் படையெடுத்துப் போகும் போது, எந்த இடத்தில் உயிருக்கு என்ன அபாயம் நேரும் என்று யாரால் நிர்ணயிக்க முடியும்? புலிகேசியைக் கொன்று, வாதாபியையும் நிர்மூலமாக்காமல் காஞ்சிக்குத் திரும்பு வதில்லையென்று மாமல்லர் தம் மனத்திற் குள் சங்கல்பம் செய்து கொண்டிருந்தார். வெற்றி கிடைக்கா விட்டால் போர்க் களத்தில் உயிரைத் தியாகம் செய்யும்படி யிருக்கும். அப்படி ஒரு வேளை நேர்ந்தால் காஞ்சிப் பல்லவ இராஜ்யம் சின்னாபின்ன மடையாமல் பார்த்துக் கொள்வதற்கும், குமாரன் மகேந்திரனைச் சிம்மாசனத்தில் ஏற்றி ஸ்திரப்படுத்துவதற்கும் யாராவது ஒரு திறமைசாலி வேண்டாமா? அந்தத் திறமை சாலி தம்முடைய நம்பிக்கைக்கு முழுதும் பாத்திரமானவனாயும் இருக்க வேண்டும்.

காஞ்சி இராஜ்யத்தையும் குமாரன் மகேந்திரனையும் நம்பி ஒப்படைத்து விட்டுப் போவதற்கு மானவன்மனைத் தவிர யாரும் இல்லை. தம் மைத்துனனாகிய ஜயந்தவர்ம பாண்டியனிடம் மாமல்லருக்கு அவ்வளவாக நம்பிக்கை இல்லை. ஜயந்தவர் மனுக்கு ஒரு காலத்தில் தமிழகம் முழுவதை யும் ஒரு குடையின் கீழ் ஆள வேண்டு மென்ற ஆசை இருந்ததென்பது மாமல்ல ருக்குத் தெரியும்.

பாண்டியனிடம் தமக்கு உள்ளுக்குள் இருந்த அவநம்பிக்கையை மாமல்லர் வெளியே காட்டிக் கொள்ளாமல் வாதாபி படையெடுப்புக்கு அவனுடைய உதவியைக் கோரினார். ஜயந்தவர்மனும் தன்னுடைய மகன் நெடுமாறனின் தலைமையில் ஒரு பெரிய சைனியத்தை அனுப்புவித்தான். அந்தச் சைனியந்தான் வராக நதிக் கரைக்கு அப்போது வந்திருந்தது.

இப்படி மாமல்லர் பாண்டியனிடம் யுத் தத்துக்கு உதவி பெற்றாரெனினும், தம் ஆருயிர்த் தோழனான மானவன்மனிடமே முழு நம்பிக்கையும் வைத்து, அவனைக் காஞ்சியில் இருக்கச் சொல்லி விட்டுத் தாம் வாதாபி செல்வதென்று தீர்மானித்தார்.

மானவன்மனோ, பிடிவாதமாகத் தானும்

## அருள்வாக்கு

வண்டானது எப்படிப் புஷ்பத்துக்கு வலி தெரியாமல் தேனை எடுத்துக் கொள் கிறதோ, அப்படித்தான் ராஜா பிரஜை களுக்குக் கொஞ்சங் கூட சிரமம் தெரியாமல், அவர்களுடைய மலர்ச்சி குன்றாமலே வரி வசூலித்து எடுத்துக் கொள்ள வேண்டு மென்பது சாஸ்திரம். இதை இன்னொரு உவமையால் இன்னும் அழகுபடுத்திச் சொல்லியிருக்கிறான் உவமைக்கே பெயர் பெற்ற காளிதாஸன். "ஸூர்யன் எப்படி முதலில் பூமியிலிருந்து ஜலத்தை உறிஞ்சிக் கொண்டு, அப்புறம் அதை பூமிக்கே மழை யாய்ப் பொழிகிறானோ, அப்படி திலீபன்

வாதாபிக்கு வரவேண்டுமென்று சொல்லிக் கொண்டிருந்தான். மேற்படி விவாதம் அவர்களுக்குள் இன்னும் முடியாமலே இருந்தது.

மாமல்லர் ரதத்திலிருந்தும் மானவன்மன் குதிரை மீதிருந்தும் கீழே குதித்தார் கள். ஒருவரையொருவர் ஆலிங்கனம் செய்து கொண்டு மகிழ்ந் தார்கள். பிறகு, மானவன்மன் ரதத்திலிருந்த ஆயனரைச் சுட்டிக்காட்டி, "அண்ணா! இந்தக் கிழவரை எதற்காக அழைத்து வந்தீர்கள்? படையெடுக்கும் சைனியத்தைப் பார்த்து விட்டுப் போவதற்கா? அல்லது ஒரு வேளை யுத்தத்துக்கே அழைத்துப் போக உத்தேசமா?" என்று கேட்டான்.

அதற்கு மாமல்லர், "அதை ஏன் கேட்கிறாய், தம்பி! ஆயனக்கிழவர் எல்லார்க் கும் முன்னால் தாம் போருக்குப் போக வேண்டும் என்கிறார். அவருக்குப் போட்டி யாகக் குமாரன் மகேந்திரன் தானும் யுத்தத்துக்குக் கிளம்புவேனென்கிறான். 'அண்ணா யுத்தத்துக்குப் போனால் நானும் போவேன்' என்கிறாள் குந்தவி. இதோடு போச்சா? நமது சாரதி கண்ணன் மகன் சின்னக் கண்ணன் இருக்கிறான் அல்லவா? அவன் நேற்றுக் கையிலே கத்தி எடுத்துக் கொண்டு தோட்டத்துக்குள் புகுந்து, 'சளுக்கர் தலையை இப்படித்தான் வெட்டு

பிரஜைகளிடமிருந்து வசூலித்ததைப் பிறகு அவர்களுடைய நலனுக்கேயான காரியங்களில் செலவிட்டான்'' என்கிறான். லோகத்துக்கு ஒரு பிரயோஜனமுமில்லாமல் எங்கேயோ ஸமுத்ரத்தில் இருக்கிற உப்பு ஜலத்தை ஸூரியன் இழுத்து, அப்புறம் உலகுக்குப் பயனாகிற சுத்த ஜலமாக அதை வர்ஷிக்கிறானல்லவா? இப்படித்தான் ஸமுதாய க்ஷேமத்துக்கு வராத செல்வத்தை ராஜா வரியாய் வசூல் செய்து, பிறகு அதன் க்ஷேமத்துக்கே செலவிட்டான் என்று அர்த்தம்.



'ராஜா' என்ற வார்த்தைக்குக் காளிதாஸன் கொடுக்கிற டெஃபினிஷனே அவன் ஜனங்கள் மீது யதேச்சாதிகாரம் பண்ணாமல், ஸர்வ ஜனங்களுக்கும் பரமப் பிரியனாக இருந்தானென்பதுதான். ராஜா ப்ரக்ருதி ரஞ்ஜநாத் என்பதுதான் அந்த டெஃபினிஷன். 'ப்ரக்ருதி' என்றால் 'பொது ஜனங்கள்'; 'ரஞ்ஜநாத்' என்றால் 'மகிழப் பண்ணுவதால்'. பொது மக்களை மகிழப் பண்ணுவதாலேயே, 'ரஞ்ஜ்' என்ற 'ருட்'டிலிருந்து 'ராஜ்' என்ற வார்த்தை உண்டானதாகக் காட்டியிருக்கிறான்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

வேன்' என்று சொல்லிக் கொண்டே அநேகச் செடிகளை வெட்டித் தள்ளிவிட்டானாம்!'' என்றார்.

மானவன்மன் குறுக்கிட்டு, "ஆயனக் கிழவர், சின்னக் கண்ணன், குமார சக்கரவர்த்தி, குந்தவி தேவி ஆகிய வீரர்களைப் போர்க்களத்துக்கு அழைத்துப் போங்கள். என்னைப் போன்ற கையாலாகாதவர்களைக் காஞ்சியில் விட்டு விடுங்கள்!'' என்றான்.

"அப்படியெல்லாம் உன்னைத் தனியாக விட்டுவிட்டுப் போக மாட்டேன். மாமா காஞ்சியில் இருந்தால் தானும் இருப்பதாக மகேந்திரன் சொல்கிறான்; மகேந்திரன் இருந்தால் தானும் இருப்பதாகக் குந்தவி சொல்கிறாள்'' என்றார் மாமல்லர்.

உடனே மானவன்மன், குமார சக்கரவர்த்தியைத் தூக்கிக் கொண்டு, 'நீ ஒரு குழந்தை! நானும் ஒரு குழந்தை, நாம் இரண்டு பேரும் காஞ்சியில் இருப்போம். மற்ற ஆண் பிள்ளைகள் எல்லாம் யுத்தத்துக்குப் போகட்டும்!'' என்றான்.

அப்போது குந்தவி, "ஏன் மாமா! உங்கள் அப்பாவுக்கு நீங்கள் குழந்தைதானே?'' என்று வெடுக்கென்று கேட்டாள். மானவன்மன் குமார மகேந்திரனைத் தரையில் விட்டு விட்டுக் குந்தவியின் முன்னால் வந்து கைகட்டி வாய் புதைத்து நின்று, "தேவி! தாங்கள் இருக்குமிடத்தில் யாரும் வாயைத் திறக்கக் கூடாதல்லவா? நான் பேசியது பிசகு! மன்னிக்க வேண்டும்!'' என்று வேடிக்கையான பயபக்தியோடு சொல்லவும், ஆயனர் உள்பட அனைவரும் நகைத்தார்கள்.

அன்று சாயங்காலம் மாமல்லரும் மானவன்மனும் தனிமையில் சந்தித்தபோது, "அண்ணா! உண்மையாகவே ஆயனரை வாதாபிக்கு அழைத்துப் போகப் போகிறீர்களா?'' என்று கேட்டான்.

"ஆமாம், தம்பி! இரண்டு முக்கிய காரணங்களுக்காக அவரை அழைத்துப் போகிறேன். முதலாவது, நம் படை வீரர்கள் தூர தேசத்தில் இருக்கும் போது காலொடிந்த கிழவரைப் பார்த்தும் அவருடைய புதல்வியை நினைத்தும் மன உறுதி கொள்வார்கள். அதோடு, யாருக்காக இத்தகைய பெருஞ்சேனை திரட்டிக் கொண்டு படையெடுத்துச் செல்கிறோமோ, அவளை ஒருவேளை உயிரோடு மீட்க முடிந்தால், உடனே யாரிடமாவது ஒப்புவித்தாக வேண்டுமல்லவா? அவளுடைய தந்தையிடமே ஒப்புவித்து விட்டால் நம் கவலையும் பொறுப்பும் விட்டது'' என்றார் மாமல்லர்.

அப்போது அவர் விட்ட பெருமூச்சு மானவன்மனுடைய இருதயத்தில் பெரு வேதனையை உண்டாக்கியது.

(தொடரும்)




சென்னை அண்ணா ஆதர்ஷ் கல்லூரியில் பயிலும் ஜனனி, சங்கீதா, பிரேமலதா, கௌசல்யா அடங்கிய மகளிர் அணி, பிரசாந்தின் அலுவலகத்தில் காத்திருந்தது. இவர்களோடு சந்திருவும் சுதர்ஷனும் சேர்ந்து கொள்ள, 'வின்னர்' படத்துக்காக கிரணோடு டான்ஸ் ஆடிவிட்டு வந்த பிரசாந்துடன், கம்ப்யூட்டரும் இன்டர்நெட்டும் இல்லாத 'ஜாலி சாட்' ஆரம்பமானது.

# "பசங்க கொஞ்சம் திருந்தணும்!"

**ஜனனி:** *நிஜ வாழ்க்கையில் பிரசாந்த், தம், தண்ணியெல்லாம் அடிக்க மாட்டார்னு கேள்விப்பட்டிருக்கோம். அப்புறம் ஏன் படத்துல இந்தப் பழக்கமெல்லாம் இருக்கிற மாதிரி நடிக்கறீங்க?*

**பிரசாந்த்:** எடுத்த எடுப்பிலேயே தாக்குதல் தொடுக்க ஆரம்பிச்சுட்டீங்க! இதுக்கு எதிர்த் தாக்குதல் தொடுக்கிறதைவிட, நான் தெரிஞ்சுகிட்ட சில உண்மைகளை உங்களோடு பகிர்ந்துகிட்டு, அப்புறம் கேள்விக்கான பதிலைச் சொல்றேன். புகையிலை ஒரு கொடிய விஷம்ங்கிற விழிப்புணர்வு ஓரளவு ஏற்பட்டிருக்கு. புகை, பான்பராக் மூலமா இந்தியாவில் மட்டும் வருஷத்துக்கு ஏழு லட்சம் பேர் இறந்து போறாங்க... உலகம் முழுக்க ஆண்டுக்கு நாற்பத்து ஒன்பது லட்சம் பேர் இறந்து போறாங்க.

இன்னொரு அதிர்ச்சியான செய்தி என்னன்னா, தெற்காசிய நாடுகளிலேயே பதிமூணுலேர்ந்து, பதினைஞ்சு வயசுக்கு உட்பட்ட பள்ளிச் சிறுவர்கள் அதிக அளவில் புகைபிடிக்கிறது தமிழ்நாட்டில் தானாம்! சிறுவர்கள் எப்படிக் கத்துக்கிறாங்கன்னு பார்த்தா, மீடியா ஒரு காரணம் கிறதை ஒப்புக்கிறேன். ஆனால் வீட்டில் இருக்கிறவங்க புகை பிடிக்காம இருந்தால், சிறுவர்கள் புகைபிடிக்க நிச்சயம் தயங்குவாங்க. அதனாலே பெரியவங்க முதல்லே திருந்தணும். சினிமா, மீடியாவைப் பொருத்த வரைக்கும், முதல்லே சிகரெட் பிடிக்கிற மாதிரி காட்சிகளை, என் படத்தில் வைக்கிறதில்லேன்னு தயாரிப்பாளர்கள் உறுதி எடுத்துக்கணும்.

அடுத்து நம்ம ஹீரோவைத் தேவையில்லாமல் ஏன் புகை பிடிக்க வைக்கணும்னு இயக்குனர் யோசிக்கணும்,



என்னைப் பொருத்த வரை இயக்குனர் சொல்லி, கதைக்கும், பாத்திரத்திற்கும் தேவையிருந்தால் மட்டுமே புகைக்கிற மாதிரி காட்சியில் நடிக்கிறதுன்னு முடிவு பண்ணி, அதை ஃபாலோ பண்றேன்... என்னோட படங்களைத் தொடர்ந்து பார்க்கிற ரசிகர்களுக்கு இது தெரியும்.





**சந்துரு:** *சமீபத்தில் மதுபானம் தொடர்பான ஒரு விளம்பரப் பலகைகளில் பிரசாந்தைப் பார்த்தோமே?*

**பிரசாந்த்:** 'எஸ்எஸ் மியூசிக்' என்ற இசைச் சேனல் நிகழ்ச்சியில் கலந்துகிட்டேன். அதற்கான விளம்பரப் பலகைகளைத்தான் நீங்க பார்த்திருப்பீங்க. அந்த நிகழ்ச்சியை ஸ்பான்ஸர் செய்த மதுபான நிறுவனத்தின் பிராண்ட் படத்தையும் விளம்பரத்தில் போட்டதால் எல்லோருக்கும் இப்படியொரு சந்தேகம். இது தவறான உத்திதான்.

**பிரேமலதா:** *அப்போ எதிர்காலத்தில் நீங்க மதுபான விளம்பரத்தில் நடிக்க மாட்டீங்கன்னு எடுத்துக்கலாமா?*

**பிரசாந்த்:** ஒரு மதுபான விளம்பரத்தில் நடிக்கிறதுனால, நூறு கேன்சர் நோயாளிகளுக்கு உதவ முடியுமானா, நிச்சயமா நடிப்பேன்.

**சுதர்ஷன்:** *நீங்க ஐந்து தடவை பிளாக்பெல்ட் வாங்கின கராத்தே வீரராமே?*

**பிரசாந்த்:** அப்பா ஏழு வயதிலிருந்து எனக்கு 'வூசு' (wushu) சொல்லித்தர ஏற்பாடு பண்ணினார். ஜூடோ, கராத்தே, இதுக்கெல்லாம் பல மடங்கு உயர்வான கலை இந்த 'வூசு'. உண்மையான குங்ஃபூ கலை இதுதான். இந்தக் கலை உடலையும் மனத்தையும் உறுதி செய்யுது. என் மாஸ்டர்கள் உதவியோடு இது வரை நான்கு கறுப்புப் பட்டைகள் வாங்கியிருக்கேன்.

**கௌசல்யா:** *அப்போ படத்துல வர்ற மாதிரி நிஜத்திலும் பத்துப் பேரை சமாளிக்கிற தைரியம் இருக்கா?*

**பிரசாந்த்:** நாலு பேரை நிச்சயமா சமாளிப்பேன். ஆனால் மார்ஷியல் கலைகளைக் கத்துக்கிட்டு, சக மனிதனைத் தாக்குவதற்குப் பயன்படுத்தினால், நாம் அந்தக் கலைகளின் நோக்கத்துலே கரியைப் பூசுறோம்ன்னு அர்த்தம்.

**ஜனனி:** *ஈவ் டீசிங்லேர்ந்து தப்பிக்க சிம்பிளா ஏதாவது கராத்தே டெக்னிக் சொல்லிக் கொடுங்களேன்?*

**பிரசாந்த்:** எதுக்கும் ஒரு எல்லை இருக்கு. பசங்களைப் பார்த்து ரொம்ப சிரிக்காதீங்க. அதுக்காக நீங்க சிரிக்க மறந்துட்டா ஆண்களுக்கு லைஃபே இல்லை. உங்க சிரிப்பில் நிறைய சினேகம் இருக்கட்டும். ஆரம்பத்துலயே அலர்ட்டா இருந்துட்டா ஈவ் டீசிங்ன்னு அலட்டிக்க வேண்டியதில்லே. நாட்டு நடப்பைப் பார்த்து



## விரட்டுகிறார் நோரா!

சமீபத்தில் பல கிராமி விருதுகளை அள்ளிக் கொண்ட நோரா ஜோன்ஸ் பற்றித் தெரிந்திருக்கும். இந்திய இசை மேதை ரவிசங்கரின் மகள் என்பதோடு "என் அப்பா, என் வெற்றிக்கு எந்த விதத்திலும் காரணமில்லை" என்று கூறியதால் பரபரப்பாகச் செய்திகளில் இடம் பெற்றவர். அவரது வாழ்வு குறித்த பல பரபரப்புச் செய்திகளை வெளியிடத் துடித்து பல பத்திரிகை நிருபர்கள் அவரைத் தொடர்பு கொண்டிருக்கிறார்கள். "வாழ்க்கை என்பது சிக்கலானது. அது பத்திரிகையில் அச்சிடுவதற்கு உகந்ததல்ல" என்று கூறி அவர்களைத் திருப்பியனுப்பியிருக்கிறார் நோரா ஜோன்ஸ்.

– குல்லூ

ஆம்பளைப் பசங்களும் கொஞ்சம் திருந்தணும்.

**சந்துரு:** ஒரு பத்து படம் நடிச்சதும் கல்யாணம் பண்ணிக்கிட்டு இளம் ஹீரோக்கள் செட்டில் ஆயிடறாங்க. நீங்க மட்டும் இன்னும் பேச்சிலராகவே இருக்கீங்களே?

**பிரசாந்த்:** அப்பாவும், அம்மாவும்தான் என்னை உருவாக்கியிருக்காங்க... அவங்க எனக்காக வாழறாங்க. அப்படிப்பட்டவங்களுக்கு நான் என்ன செய்ய முடியும்? என்னோட மனைவியைத் தேர்ந்தெடுக்கிற பொறுப்பை அவங்ககிட்டே விட்டுட்டேன். பெண் தேடிக்கிட்டு இருக்காங்க.

**பிரேமலதா:** உங்களைத் தேடி வந்த காதல் ஜோடிக்குக் கல்யாணம் பண்ணி வெச்சீங்கன்னு பத்திரிகையிலே படிச்சிருக்கோம். அப்படிப்பட்டவர் காதல் கல்யாணம் பண்ணிக்கிறதுலே என்ன கஷ்டம்?

**பிரசாந்த்:** காதல் ரொம்ப நல்ல விஷயம். அதுவே கல்யாணத்துக்கு அப்புறம்னா நிபந்தனையற்ற காதலா மலருது. தொண்ணூற்று ஒன்பது சதவீதம் இந்தக் காதலுக்குத் தோல்வி கிடையாதுங்கிறது பெரிய ப்ளஸ் ஃபாயிண்ட். கல்யாணத்துக்கு முந்தி, காதலில் ஆளுக்கொரு பாதுகாப்பு வளையத்தைப் போட்டுகிட்டு அதுக்குள்ளேயே இருப்பாங்க. இதைத் தப்புன்னு சொல்ல வரலே, கல்யாணத்துக்கு அப்புறம் உருவாகிற காதல்ல இந்த மாதிரி 'ரிங் மாஸ்டர்' விளையாட்டெல்லாம் இருக்காதுனு சொல்ல வர்றேன்.

**கௌசல்யா:** அப்போ வரப்போற மனைவி இப்படியெல்லாம் இருக்கணும்ன்னு நிபந்தனைகள் விதிச்சிருக்கீங்க போல இருக்கு?

**பிரசாந்த்:** நிச்சயமா இல்லை. எதிர்பார்ப்புகள் இருந்தாலே பிரச்னைதான்.

**சந்துரு:** பிரசாந்த் வித்தியாசமான பாத்திரங்களை ஏற்று நடிக்கிறதில்லைன்னு நினைக்கிறேன், சரியா?

**பிரசாந்த்:** இதை நான் ஒப்புக்க மாட்டேன். 'கல்லூரி வாசலில்', ஜீன்ஸ், 'தமிழ்', 'விரும்புகிறேன்' எல்லாமே வித்தியாசமான கேரக்டர்தானே?

**சுதர்ஷன்:** 'ஆணழகன்' படத்தில் அத்தனைக் கச்சிதமா பெண் வேடம் உங்களுக்குப் பொருந்துச்சு! அதே மாதிரியொரு முயற்சியை ஏன் இப்போ பண்ணக் கூடாது?

**பிரசாந்த்:** அப்போ எனக்கு இருபது வயசுதான். மொழு மொழு இளமையோட இருந்தேன். பொம்பளை வேஷத்துக்கு அந்த வயசுதான் பொருத்தமா இருக்கும்.



• சுதர்ஷன்



• சந்துரு

இப்போ சிரிப்புதான் வரும்.

*சந்துரு: ரசிகர் மன்றங்கள் தேவையான்னு இப்போ குரல் கொடுக்க ஆரம்பிச்சுருக்காங்க... இதைப் பத்தி என்ன நினைக்கிறீங்க?*

**பிரசாந்த்:** ரசிகர் மன்றம் வைங்கன்னு யாரும் சொல்றது கிடையாது. அவங்களே முன் வந்து அன்பு காட்டுறாங்க. அதுக்கு விலையே கிடையாது. இந்த அன்பு பெரிய ஆயுதம். அதை முறையா பயன் படுத்தினா ஏழை எளிய மக்களுக்கு எவ்வளவோ செய்யலாம். என்னோட ரசிகர்கள் அதைத்தான் செஞ்சுக்கிட்டு இருக்காங்க. அப்படிச் செய்யற எந்தக் காரியத்துக்கும் விளம்பரம் தேடிக்கக் கூடாதுங்கிறதைக் கொள்கையாவே கடைப்பிடிக் கிறேன்.



• ஜனனி



• கௌசல்யா

*ஜனனி: அரசியல் கட்சியில் மகளிர் அணி வெச்சிருக்காங்க, ஆனால் ரசிகர் மன்றத்தில் மகளிர் அணிகள் இல்லையே ஏன்?*

**பிரசாந்த்:** அம்மா தாயே! நீங்க ஆட்டோகிராப் வாங்குங்க, அதிக பட்சம் கை குலுக் குங்க போதும். நமக்குன்னு கல்ச்சர் இருக்கு. அதைக் காப்பாத்த அவங்க அவங்களால முடிஞ்சதைச் செய் யணும். ரசிகையா இருக்கலாம். ஆனால் ரசிகர் மன்றம் அளவுக்கெல்லாம் பெண்கள் வரக் கூடாது?



• பிரேமலதா



• சங்கீதா

*பிரேமலதா: பிரசாந்துக்கு மெயில் அனுப்பினா கண்டிப்பா ரிப்ளை வரும்டின்னு என் ஃப்ரெண்டு சொன்னா... ஈமெயிலுக்கெல்லாம் நீங்களே பதில் அனுப்பு வீங்களா, இல்லை உங்க உதவியாளரை விட்டா?*

**பிரசாந்த்:** அந்த விஷயத்தில் நான் மற்றவர்களை நம்புறதே இல்லை. நானே பதில் அனுப்புவேன்.

*ஜனனி: எங்களை மாதிரி இளைஞர்களுக்கு ஒரு உற்சாக குட்டிக் கதை சொல்லுங்களேன் பார்ப்போம்?*

**பிரசாந்த்:** 'ஏ', 'பி'ன்னு இரண்டு விறகு வெட்டிகள். இரண்டு பேருக்குமே வேலை கிடைச்சது. 'பி'க்கு மட்டும் அதிக சம்பளம் கொடுத் தாங்க. கோபமான 'ஏ' முதலாளிகிட்டே போய் காரணம் கேட்டார். இரண்டு பேரும் ஒரே கோடாலியால் மரத்தை வெட்டுறீங்க... எட்டு மணி நேரம் தான் வேலை செய்றீங்க. ஆனா 'பி' மட்டும் உங்களை விட அதிகமா மரம் வெட்டுறார்ன்னு பதில் சொல்லியிருக்கிறார். உடனே 'ஏ' என்ன பண்ணினார் தெரியுமா? 'பி'யை எதிரியா நினைக்காமல் அவர்கிட்டே போய் எப்படி உன்னால மட்டும் முடியுதுன்னு கேட்டார். 'பி'யும் தொழில் ரகசியம்ன்னு மறைக்காமல் சொன்னார். "நான் ஒரு மரத்தை வெட்டி முடிச்சுட்டு, அடுத்த மரத்தை வெட் றதுக்கு முன்னாடி கோடாரியை நல்லா, கூர்மையா தீட்டு வேன்'னு. இந்தக் கதைக்கு விளக்கம் தேவையில்லே... ஆனால் நிஜ வாழ்க்கையிலே தயவு செஞ்சு ஒரு மரத்தைக்கூட வெட்டிடா தீங்க.

— ஆர்.சி.ஜெயந்தன்,

படங்கள் : டிஜிட்டல் சண்முகம்




'காப்பி'யங்களுக்குப் பஞ்சமில்லாத கோடம்பாக்கத்தின் லேட்டஸ்ட் காதல் 'காப்பி'யம் இது. இதற்காக படத்தின் இயக்குனருக்கு 'ஜெராக்ஸ் செம்மல்' என்றெல்லாம் பட்டம் தந்து சபிக்க முடியாது. காரணம், அஜித்தும் - தேவயானியும் ஒன்று சேர மாட்டார்களா? என்று ஏங்க வைத்து, இதயத்துடிப்பை எகிறவும் வைத்த காதல் கோட்டை படத்தின் அதே அசத்தல் டெம்போவை, வேறுகளம், வேறுகாட்சிகளோடு இந்தப் படத்திற்கு இடம் பெயர்த்திருப்பதில் வெற்றிபெற்றிருக்கிறார்

கல்யாணம் செய்து கொண்டால், நாம் பிரிய வேண்டிய அவசியமில்லை என்ற முடிவோடு, பால்ய காலத்தில் பிரிந்து போன நாயகன், நாயகி இருவரும் பெரியவர்கள் ஆனதும் சந்திக்கிறார்கள். ஆனால் தாங்கள் யார் என்பது தெரியாமல் தீக்குச்சி மாதிரி அடிக்கடி உரசிக் கொள்ள, இருவருக்குமிடையில் நெருப்பாய்ப் பற்றிக் கொள்கிறது வெறுப்பு. 'அட! என்னப்பா விவரம் புரியாமல் விரோதத்தை வளர்த்துக்கிறீங்க' என்று முன்வரிசை தொடங்கி கடைசி வரிசை ரசிகர் வரையிலும் கவலையோடு கன்னத்தில் கைவைத்து உட்கார்ந்திருக்க, சிறுவயதில் பிரியும்போது நாயகன் கம்போஸ் செய்து வாசித்த 'மாண்டலின் மியூசிக் பிட்' இருவரையும் பெவிக்கால் ரேஞ்சுக்கு ஒட்ட வைத்து விடுகிறது. ஆனால் இதை மட்டுமே படத்தின் க்ளைமாக்ஸ் என்று சொல்ல முடியாதபடி, ஒரு கணம் சிலிர்க்க வைத்து

# அன்பே அன்பே

**தா**த்தா – பாட்டி, அப்பா – அம்மா,
அண்ணன் – தம்பி, அக்கா – தங்கை, பேரன் – பேத்தி, கூடுதலாக
அரை டஜன் குட்டீஸ்கள், போனஸாக ஒரு பொமரேனியன் நாய் என்று
மூச்சு வாங்கும் அளவுக்குத் திரை முழுவதும் நிரம்பி வழியும் உறவுகள்.
உறவுகளை இயக்க அன்பு, பாசம், சென்டிமெண்ட், காதல், சூழ்ச்சி போன்ற
உணர்ச்சிகளைக் கொண்டு சூப்பராய் ஃபிலிம்காட்டி, இறுதியில் சுபம் என்று,
இரண்டரை மணி நேர ஏவி.எம்.பாணி குடும்பத் திருவிழா நடத்துகிறார்கள்.
இதற்கு பரத்வாஜின் ஃபார்முலா இசை கைகொடுத்திருக்கிறது.
கதையென்று பார்த்தால் பதினாறு வருஷத்திற்கு முந்தி வந்த 'வருஷம்
பதினாறு' படத்தின் கதை. தாத்தா பாட்டியின் சதாபிஷேகத்திற்கு வரும்
அக்காள் மகள் ஷர்மிளியை, ஷாம், யுகேந்திரன் இருவருமே காதலிக்கிறார்கள்.
ஷர்மிளியோ ஷாமுக்கு மனத்தையும், யுகேந்திரனுக்கு நட்பையும் கொடுக்
கிறார். இதைத் தவறாகப் புரிந்து கொள்ளும் உறவுகள், ஷர்மிளி - யுகேந்திரன்
இருவருக்கும் திருமண ஏற்பாடு செய்ய, முகூர்த்த நேரத்தில் ஒரு திருப்பம்.
ஷர்மிளியின் செல்ல நாய் தலையிட்டு, பக்கம் பக்கமாய் வசனம் பேசி
போரடிக்காமல், பிரச்னையைச் சுமூகமாகத் தீர்த்து வைக்கிறது. (ராம
நாராயணன் தோற்றார் போங்கள்!)
படத்தின் ஹீரோ ஷாம்தான் என்று காட்டுவதற்காகவே இரண்டு டூயட்,
ஒரு ஃபைட் என அவருக்கு இருட்டடிப்பு இல்லாத இட ஒதுக்கீடு செய்தி
ருக்கிறார்கள். ஆனால் ஏற்றுக் கொண்ட பாத்திரத்தை இயல்பான நடிப்பின்
மூலம் கௌரவித்திருக்கும் யுகேந்திரன்தான், பிரம்மாண்டமாய்த் தெரிகிறார்.
இனி யுகேந்திரன் தைரியமாய் ஹீரோ வேஷம் கட்டலாம்.
ஷர்மிளி முகத்தில் காட்டும் உணர்ச்சிகள்தான் இம்சை

# இன்று முதல்

விடுகிறது. உணர்வு பூர்வமான முடிவை வடித்திருக்கிறார்கள்.

குஜராத் பூகம்பத்தைப் பதிவு செய்யாத பாலிவுட் சினிமா 'இன்று முதல்' தலை குனிந்து வெட்கப்படலாம். திரைக்கதையின் முக்கியத் திருப்பத்தை உண்டு பண்ணும் பகுதியாக, அந்தக் கொடூர மணித் துளிகளைப் பயன்படுத்திக் கொண்டிருக்கும் இயக்குனரைப் பாராட்டியே தீரவேண்டும். முக்கியமாய், பூமி விழுங்கிய குஜராத் பகுதிகளை அப்படியே விழுங்கி வந்து, நமக்குள் அதிர்வுகளை உண்டு பண்ணி விடுகிற எம்.எம்.ரங்கசாமியின் கேமரா அபாரம். அறிமுக நாயகன் மிதுன் ஆகட்டும், அறிமுக நாயகி டெய்சி ஆகட்டும், ஏமாற்றம் அளிக்காத புது வரவுகள்.

எப்போதும் வயாகரா சாப்பிட்ட அவஸ்தையோடு அலைவது மாதிரி வடிவமைக்கப்பட்டிருக்கும் நந்திதா பாத்திரத்துக்குக் கவலைப்படாமல் கத்திரி வைத்திருக்கலாம்.

எதற்குமே டென்ஷன் ஆகமாட்டேன் என்று வார்த்தைக்கு வார்த்தை சொல்லி விட்டு டென்ஷாகிவிடும் கே.எஸ்.ரவிகுமாரும், திடீர் நிஜக் குருடாகி, பிளாக் அண்ட் ஒயிட் பார்வையால் தர்ம அடிகளை அள்ளும் ரமேஷ் கண்ணாவும், போட்டி போட்டு காமெடியில் கலக்குகிறார்கள்.

தேவாவின் இசையில் பா. விஜய் எழுதியிருக்கும் 'யார் கண்டதோ' பாடலில் கொடைக்கானலின் குளிர்.

'கதை பழசாயிருந்தாலும், காட்சிகள் புதுசாயிருப்பதால் தப்பிக்கிறது படம்.

● ஆவரேஜ்



நம்பர் ஒன்! இந்த பேஜாரில் அவருக்கு குளோசப்களை வாரி வழங்கி இருப்பது மன்னிக்க முடியாதது.

எஃப் டீ.வி ஃபேஷன் கலாசாரத்தைக் இண்டலடிக்கும் விவேக், படத்திற்கு அடிக்கடி ஆக்ஸிஜன் கொடுத்து விடுகிறார்.

குடும்பத்தோடு பார்க்கிற மாதிரியான கதையம்சம் கொண்ட ஒரு படத்தில் அபிநயஸ்ரீ, ரம்யாகிருஷ்ணன் ஆபாச ஆட்டங்களைத் திணித்திருப்பது பெரிய நெருடல் என்றாலும், இறுதி வரை உட்கார வைக்கிறது மணிபாரதியின் விறுவிறுப்பான இயக்கம்!

— விஷுவல்தாசன்

● ஜஸ்ட் பாஸ்

# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம் :** ராசிநாதனாகிய செவ்வாய், 10ம் இடத்தில் உச்சம் பெற்றிருக்கிறார். கூடவே 4ம் இடத்தில் உச்சம் பெற்ற குருவின் பார்வையையும் பெற்று சஞ்சரிக்கிறார். அப்ப என்னென்ன பலன்கள் என்று பார்த்துடலாமா? உடல் ஆரோக்கிய மேன்மை, உற்சாகமான மனநிலைமை, எடுத்த காரியங்களில் வெற்றி என டாப்டக்கர் பலன்கள்தாம். உத்தியோகஸ்தர்களும் அநாவசியமாய்க் கவலைப்படத் தேவையில்லை. இதுவரையிலிருந்துவந்த குழப்பநிலை மாறி அலுவலகத்தில் எல்லாருடைய ஆதரவும் கிடைக்கும். பெண்களுக்கு மங்களகரமான நிகழ்ச்சிகள் நடக்கும்.

**ரிஷபம் :** எவ்வளவு சிக்கலான காரியத்தையும் சாமர்த்தியமாகச் செயல்பட்டு நிறைவேற்றி வெற்றி கொள்வீர்கள். அதற்குக் காரணம் யார் தெரியுமா? உங்கள் ராசியில் உள்ள ராகு மற்றும் சூரியனின் சஞ்சாரம் தான். சுயதொழில், வியாபாரத்தில் இதுவரை இருந்து வந்த, மந்த நிலை அகலும். பொருளாதார மேன்மை உண்டாகும். அரசாங்க விவகாரம் அனுகூலமாகும். சிறு சிறு உடல் உபாதைகள் ஏற்படலாம். உஷார்! கிரக வழிபாடு மன அமைதி தரும்.



**மிதுனம் :** குடும்பத்தில் கணவன் - மனைவி உறவு இனிமையாக இருக்கும். குரு பலம் நிறைந்திருப்பதால், சுப மங்கள காரியங்கள் நடக்கும். திருமணம் ஆகாதவர்களுக்கு, கெட்டிமேளம் கொட்டுவதற்கான வாய்ப்புகள் கூடி வரும். புதிய பொருள் சேர்க்கை, மனை, வீடு, சொத்து இந்த வகையில் அனுகூலம் உண்டாகும். உறவினர்கள், நண்பர்கள் வருகை மகிழ்ச்சி தரும். பெண்களுக்கு எல்லாவிதத்திலும் அனுகூலம் உண்டாகும். கலைத் துறையைச் சார்ந்தவர்கள் கவனிக்கத் தக்க வகையில் சிறப்புப் பெறுவார்கள். தெய்வப் பிரார்த்தனைகள் நிறைவேறும்.

**கடகம் :** ஜீவனஸ்தானாதிபதியான செவ்வாய்க்கு ஒரு 'ஜே' போடுங்க. அவரால்தான்தானே குரு மங்கள யோகமே கை கூடி வந்திருக்கிறது. குடும்பத்தில் ஒற்றுமை, மாணவர்களின் முன்னேற்றம், பெண்களுக்கு அதிர்ஷ்டம் என சகலமும் சந்தோஷம் தருவதாக அமைந்திருக்கிறது. எவ்வளவு ஜாக்கிரதையாக இருந்தாலும், சின்னச் சின்ன பிரச்னைகள் ஏற்பட்டு மனசஞ்சலம் தரலாம். எனவே, வார்த்தைகளில் இனிமை தேவை. புதிய உத்தியோக முயற்சிகளில் நிதானம் இருக்கட்டும்.

**சிம்மம் :** "வேலைக்குப் போகவே வெறுப்பா இருக்கு. என்ன செஞ்சாலும் ஒரு பாராட்டு உண்டா? ஒரு பதவி உயர்வு உண்டா"ன்னு வெறுத்துப் போய், புலம்பிக்கிட்டிருந்தீங்க இல்லையா? உத்தியோகச் சூழலில் பதவி உயர்வு, ஊதிய மேன்மை, விரும்பிய இடமாற்றம் ஆகியவை உண்டாகும். உத்தியோகம் சம்பந்தமாக வெளியூர் செல்ல முயற்சி செய்து வருபவர்களுக்கு அனுகூலமான பலன்கள் உண்டாகும். சுயதொழில் வியாபாரத்திலும் பொருளாதார அபிவிருத்தி உண்டாகும். பெண்களுக்குச் சுமாரான வாரம்.

**கன்னி :** புதியவர்களின் அறிமுகம், குறிப்பாக முக்கியஸ்தர்களாக இருந்தால், அது உங்களுக்கு மிகவும் பயனுள்ள நட்பாக அமையும். எனவே, இந்த வாரம் நீங்கள் சந்திக்கவிருக்கும் பிரமுகர்கள் தனவான்களின் ஆதரவை நாடவும். பிரச்னைகளிலிருந்து நிவாரணம் கிடைக்கும். கலைத் துறையினர் 'ஓஹோ' என உயர்வார்கள். பொன், வெள்ளி, நவரத்தினம், ஆபரணம் ஆகிய வகையில் முன்னேற்றம் உண்டு. பெண்களுக்கு ஆரோக்கிய மேன்மை உண்டாகும். மாணவர்கள் எதிர்பார்த்த நல்ல செய்தி இப்போது வந்து சேரும். தாராளமான பணநடமாட்டமிருக்கும். இருந்தாலும், எதிலும் அகலக்கால் வைப்பது நல்லதல்ல.

**அக்னிசர்மா பக்கம்**

**துலாம் :** போக்குவரத்து, வாகனம், டிராவல்ஸ், ரசாயனம், உலோகம், தோல் சம்பந்தப்பட்டவை கொள்ளை லாபத்தை அள்ளி வந்து சேர்க்கும். குறிப்பாக, வெளிநாட்டுத் தொடர்புள்ள வியாபாரம் மிகவும் அனுகூலமாக இருக்கும். திருமணம் போன்ற சுபகாரியங்கள் நிறைவேறும். பெண்களுக்கு, தெளிவான மனநிலை இருந்து உதவும் என்பதால், பதற்றமில்லாமல் காரியங்களைச் சாதித்துக் கொள்வார்கள். ரியல் எஸ்டேட் விவகாரங்களில் மிதமான போக்கைக் கடைப்பிடிப்பது நல்லது.

**விருச்சிகம் :** திறமையையும், கடின உழைப்பையும் இரு கண்களாகக் கொண்டு இயங்கி வருவது விருச்சிக ராசிக்காரர்களின் தனித்தன்மை. அந்த நல்ல இயல்பு, இந்த வாரம், உங்களுக்கு ஏற்றமிகு வாழ்க்கையைத் தந்து, உயர்த்தப் போகிறது. உத்தியோகம், சுய தொழில், வியாபாரம் என எதைச் செய்தாலும் மிகுந்த சிரத்தையுடன் ஈடுபட்டு, பாராட்டு பெறுவீர்கள். கணவன் - மனைவி ஒற்றுமை, குடும்ப அபிவிருத்திக்குத் துணை செய்யும். மாணவர்கள் உழைப்புக்கேற்ற பலன் பெறுவார்கள்.

**டி.வி. நடிகை உமா மகேஷ்வரி (மெட்டி ஒலி விஜி - துலாம்) பதற்றம் இல்லாமல் தெளிவாகக் காரியம் சாதிப்பாராமே!**

**தனுசு :** பெண்களுக்கு உன்னதமான வாரம். குறிப்பாக இளம் பெண்கள் இனிமையான மனநிலையோடு வலம் வருவார்கள். திருமணமாகாதவர்களுக்கும், பிள்ளைப்பேறு தள்ளிச் செல்பவர்களுக்கும், சுபமங்கள காரியங்கள் நிறைய நடக்கும். பிதுரார்ஜித சொத்துக்களின் மேல் நடந்து வந்த கோர்ட்டு, கேஸ், வியாஜ்ஜியங்கள் சுமுகமாகத் தீர்வாகும். பங்கு பரிவர்த்தனையில் அதிகம் எதிர்பார்க்க வேண்டாம். நல்லவர்கள் சகவாசம் நன்மை தரும்.

**மகரம் :** இளைஞர்களுக்கும், மாணவர்களுக்கும் துடிப்பான வாரமாக அமையவிருக்கிறது. வாழ்த்துக்கள்! இயந்திரம், இரும்பு, எஃகு, கன்ஸ்ட்ரக்ஷன்ஸ், கமிஷன் ஏஜண்ட், உணவுப் பொருள், டிராவல்ஸ் சம்பந்தப்பட்ட இனங்கள் வெற்றிகளைக் கொண்டு வரும். கலைத் துறை சம்பந்தப்பட்ட பெண்கள் புகழ் அடைவார்கள். குடும்பத்தில் கணவன் - மனைவி உறவு நிலை இனிமையாக இருக்கும். ஸ்தல யாத்திரை, தெய்வீக வழிபாடு என ஈடுபாடு அதிகரிக்கும்.

**கும்பம் :** 'புதிய தொழில் முயற்சி' என்ற பெயரில் நீங்கள் தொட்டது துலங்கும். பட்டது பளபளக்கும். கூட்டுத் தொழிலில் நீங்கள் பட்ட இன்னல்கள் கொஞ்சமா நஞ்சமா? வியாபாரமும் புதிய வழிகளில் மேம்படும். குடும்ப விஷயத்திலும் சண்டை, சச்சரவு, பிரிவு என்று மனம் கசந்து போயிருந்தீர்கள் அல்லவா? இனி, விரோத மனப்பான்மை மறைந்து, உறவு நிலை சீராகும். திருமணம் போன்ற சுப காரியங்கள் 'ஜாம் ஜாம்' என்று நடக்கும்.

**மீனம் :** 'சத்ருக்களால் வந்த சங்கடங்கள் தீரும்' என்று ஒரு வரி பலன் சொன்னாலே, உங்களுக்கு வயிற்றில் பால் வார்த்தது போல 'ஜில்' என்று ஆகிவிடும் என நம்புகிறேன். மறைமுக எதிரிகளால் நீங்கள் அனுபவித்து வந்த சிக்கல்களும், சிரமங்களும் இனி தவிடு பொடியாகி விடும். உத்தியோகம், வியாபாரம் காரணமாக நீங்கள் மேற்கொள்ளும் பயணங்களும் பாராட்டுக்குரியவையாகவே அமையும். புனித ஸ்தல யாத்திரை செல்லக்கூடிய வாய்ப்பிருக்கிறது.

**மே 14 முதல் 20 வரை**

# 4

# தலைநகரில் பூதம்

நகரம் முழுக்க மரங்கள் அடர்ந்திருந்தன. இருளில் எல்லோரும் உறங்க ஆரம்பித்து விட்டிருந்தார்கள். எங்கோ சில வீடுகளில் மட்டும் அகல் ஒளி கசிந்து கொண்டிருந்தது. தூரத்தில் குதிரைகள் ஓடுகிற சப்தம் விட்டு விட்டுக் கேட்டுக் கொண்டிருந்தது. ஷிவா தனது அட்ரீனல் படபடப்புடன் அந்த மையத்தை அடைந்தான்.

மேலேயிருந்து விழுகிற சந்திர ஒளியில் அந்தப் பெரிய, நீளமாக நிறுத்தி வைக்கப்பட்டிருந்த கல் தெரிந்தது. அதில் வலுவான கயிறுகளைக் கொண்டு சரவணனைக் கட்டி வைத்திருந்தார்கள். இவன்தான் சரவணனா? ஷிவா சுற்றும் முற்றும் பார்த்தான். சற்றுத் தள்ளி ஒரு தீப்பந்தம் சுவரில் செருகப்பட்டு எரிந்து கொண்டிருக்க, அதன் கீழ் ஒரு காவலாளி ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தான். ஷிவா மெல்ல நகர்ந்து சரவணனை அடைந்தான். தளர்ந்து மயக்கமடைந்திருந்தவனைத் தட்டி எழுப்பினான். விழித்த சரவணன், ஷிவாவைப் பார்த்து அலற வாயைத் திறக்க, பாய்ந்து, அவன் வாயைப் பொத்திய ஷிவா, "நான் ஷிவாடா பாவி. உன்னைக் காப்பாத்தறதுக்காக குரோம்பேட்டையி லிருந்து வந்திருக்கேன். கத்தி காட்டிக் கொடுத்துடாத. ரெண்டு பேர் தலையும் போயிடும்.." என்றான்.

சரவணன் இயல்படைந்தான். "இவர்கள் என்னைப் பத்து தினங்களாகப் பிணைத்து வைத்திருக்கிறார்கள். அவிழ்த்து விடுங்கள். அதோ அந்தப் புரவியில் ஏறித் தப்பி விடலாம்.."

ஷிவா கோபமாகி அவன் முகத்தை நோக்கி குத்துவது போல பாவனை செய்து, "தோ... புரவிகிரவியெல்லாம் எங்கிட்ட வச்சுக்காத... ஒழுங்கான தமிழ்ப் பேசு..." என்றான்.

சரவணன், "ஸார்... கழட்டுங்க ஸார். எஸ்கேப் ஆகலாம்.." என்றான்.

"அப்படி வா வழிக்கு." என்ற ஷிவா சுற்றிலும் பார்த்தான். தீப்பந்தத்தின் கீழே உறங்கிக் கிடந்த காவலாளியின் அருகில் அவனுடைய வாள் இருந்தது. பூனைப் பாதத்தில் நடந்த ஷிவா, அதை எடுத்து வந்து, சரவணனைக் கட்டியிருந்த கயிறுகளை அறுத்தான். "சரவணா. எந்த நூற்றாண்டுலயும் காவல்காரன் இப்படித்தான் தூங்குவான் போலிருக்கு... நல்ல வேளை தப்பிச்சோம்.." என்ற ஷிவா அவனைப் பார்த்து, "கையில அந்த மஞ்சத்தண்ணி இருக்கா?" என்றான்.

"புடுங்கிட்டாங்க ஸார்.."

ஷிவா தன் ஜீன்ஸின் பின் பாக்கெட்டில் வைத்திருந்த பிளாஸ்டிக் புட்டியை எடுத்துத் திறந்தான்.

"ஷிவா ஸார்.. இளவரசி திவ்யதேவியையும் கூட்டிட்டு

வஸந்த் செந்தில்

ஓடிடலாமா?..."

முறைந்த ஷிவா, "வேணாம் விட்டுடு.. அங்க ஆட்சி செய்யறதுக்கு அம்மா இருக்காங்க." என்றான்.

"ஸார், இளவரசி என் நினைப்பாவே இருப்பாங்க."

ஷிவா, "பாவி. சீதாவையும் உதயம் தியேட்டர் வாசல்லேயே விட்டுட்டு வந்துட்டேன். உன்னைக் கூட்டிட்டுப் போகலேன்னா, கவுசல்யாவையும் குரு அறிமுகப்படுத்தமாட்டான். ஒழுங்கா குடி. நீ இந்த டிசம்பர்ல தீஸிஸ் சப்மிட் பண்ண வேணாமா?" என்றான்.

சரவணன் எல்லாம் ஞாபகம் வந்தவனாக, "அய்யோ. ஆமா ஸார்.." என்று அந்த வெளிர் மஞ்சள் நிற திரவத்தைக் குடித்தான். பிறகு ஷிவாவும் குடித்தான்.

"ஏய் கயிதே. வூட்ல சொல்லிகினு வந்துக்கினியா. இந்தாமே, இவனை ஒரு எத்து எத்திட்டு வா.." என்று



அவன் சொல்ல, அவன் கூடவே வந்தவள் உருண்டு கிடந்த ஷிவாவை தன் இடது காலால் எத்திவிட்டுப் போனாள்.

ஷிவா தடக்கென்று நினைவு வந்து எழுந்தான்.

"ஹையா. மெட்ராஸ் வந்தாச்சு..." என்று கத்தியவன், அருகில் கிடந்த சரவணனைத் தட்டி எழுப்பினான். எழுந்து மலங்க மலங்க விழித்த சரவணன், ஷிவாவை அப்போது தான் புதிதாகப் பார்ப்பது போலப் பார்த்தான்.

"யார் நீங்க? நான் எப்படி இங்க வந்தேன்?"

ஷிவா அதிர்ச்சியாகி, "நான்தாண்டா ஷிவா.. உன்னை சிரச்சேதத்திலிருந்து காப் பாத்திக் கூட்டியாந்திருக்கேன்." என்றான்.



சரவணன் 'புரியவில்லை' என்றான். புரபஸர் சோழராஜாவைக் கேட்டபோது, தெரியும் என்றான். மை காட்.. இவனுக்கு எல்லாம் மறந்து விட்டது. ஆனால் எனக்கு எதுவும் மறக்கவில்லை. முதலில் இவனை புரபஸர் வசம் கொண்டு போகலாம். பிறகு மற்றதைப் பார்த்துக் கொள்ளலாம். வழியில் சென்ற ஆட்டோவை நிறுத்தி ஏறினான். ஆட்டோக்காரனிடம் வெட்டும்கிளி தீப் பெட்டி வாங்கி சிகரெட் புகைத்தான். கிண்டி தாண்டும்போது குருபிரசாத்தை தொலைபேசியில் அழைத்தான்.

புரபஸர் சோழராஜா, "அதெப்படி? உங் களுக்கு எல்லாம் ஞாபகமிருக்கு. இவனுக்கு மட்டும் மறந்து போச்சு?" என்றார்.

ஷிவா, "இதைப் பத்தி மறுபடியும் அந்த சாமியார் கிட்டப் போய்க் கேளுங்க..." என்றான்.

புரபஸர், "நந்தா பீரியடுக்கு போவான்னு நினைச்சா, இவன் பாண்டியர் காலத்துக்குப் போயிட்டான். தனநந்தர் புதையல் என்ன ஆச்சன்னே தெரியலையே? ஸார், உங்களுக் குத்தான் எல்லாம் ஞாபகம் இருக்கு. நீங்களா வது தலையானங்காலத்து நெடுஞ்செழிய னைப் பாத்தீங்களா?..." என்றார்.

ஷிவா, "புரபஸர்... இவனுக்கு ஏதாவது கஷாயம் கலக்கிக் கொடுத்து கேளுங்க. என்னை விட்டுடுங்க. இவங்கப்பாவுக்கு ஃபோன் பண்ணி வரச் சொல்லிட்டீங் களா?..." என்றான்.

"சொல்லிட்டேன் ஸார். அந்த பீரியட்ல எந்த மகளிரையாவது பாத்தீங்களா? குழை, தொடி, கிங்கிணி எல்லாம் போட்டிருப் பாங்களாமே? சென்ட் கூட அப்ப பயன் படுத்தியிருக்காங்கன்னு ஸ்டிரோபோ தன் ஆய்வுக் கட்டுரையில எழுதி இருக்காரே? ஸார்... ஸார்.. கொஞ்சம் யோசிச்சு சொல் லுங்க. நான் இதை வச்சுகிட்டு ஒரு பேப்பர் ப்ரஸன்ட் பண்ணுவேன்..."

---

"தலைவருக்கு 'மாலை'க்குப் பதிலா 'பொருள' கொடுங்கன்னு சொன்னது தப்பா போச்சு..."

"ஏன்?"

"சைக்கிள் செயின், கத்தி, நாட்டுத் துப்பாக்கின்னு குவிஞ்சிருச்சு!"

– நாமக்கல் பாலு

---

ஷிவா, "கடிக்காதீங்க... கம்னு இருங்க..." என்றான்.

புரபஸர் விடாமல், "ஆ... 'கடி'ன்னதும் ஞாபகம் வருது... ஒவ்வொரு மன்னனும் கடிமரம்னு ஒண்ணு வச்சிருப்பாங்களாமே? அதையாவது பாத்தீங்களா?..." என்றார்.

ஷிவா தலையில் கை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டான்.

புரபஸர் தயக்கமாக அவன் அருகில் வந்து, "ஸார்... அப்ப பத்மதங்கம்னு ஒரு நாணயம் வழக்குல இருந்துதாமே. அதை யாவது பாத்தீங்களா?..." என்றார்.

ஷிவா கடுப்பாகி எழுந்து, "புரபஸர். நான் அந்த ஊர்ல ஒரு காபி கூட குடிக்கல. ராத் திரி கும்மிருட்டு... போதுமா? ஆளவிடுங்க..." என்றான்.

புரபஸர் சோழராஜா அலுப்பாக தன் இருக்கையில் உட்கார்ந்து கொண்டு, 'ஜிய்ஜர் புக்ல தப்பு கண்டுபிடிச்சா ஹிஸ்டரில எம் பேரு வரும்..." என்றார்.

ஷிவா அவரை வெறுத்துப் போய் ஒரு பிராணியைப் போல பார்த்துக் கொண் டிருந்தபோது, குருபிரசாத் உள்ளே

நுழைந்தான்.

ஷிவா மலர்ந்து, "வா குரு. நல்ல நேரத்தில வந்தே. இன்னும் கொஞ்சம் விட்டிருந்தா இவரைக் கொலை பண்ணியிருப்பேன்." என்றான்.

"இவர்தான் சரவணனா?" என்ற குரு பிரசாத், சரவணனைப் பார்த்து, "உங்கப்பா இப்ப வந்துடுவாரு..." என்றான்.

"தாங்ஸ் ஷிவா."

புரபஸர் மட்டும் கவலையாக உட்கார்ந்து இருந்தார்.

ஷிவா, குரு பிரசாத் அருகில் வந்து, "குரு இந்தக் கதையைக் கேளு..." என்று நடந்த விஷயங்களை விரிவாகச் சொன்னான்.

பொறுமையாகக் கேட்ட குருபிரசாத், ஷிவா முடித்ததும், "நல்லாத்தானே இருந்த ஷிவா. என்ன ஆச்சு உனக்கு. பல்லாவரம் மலைக்கடியில நீங்க விழுந்து கிடந்ததா

"வட்டாட்சியர் அலுவலகம் முன்பு ஆர்ப்பாட்டம் நடத்திக்கிட்டிருக்காங்களே! எதுக்குடா?"

"ரேஷன் கார்டுக்குக் குடிநீர் வழங்க ஏற்பாடு செய்யணுமாம்."

- உ. ராஜாஜி

மீனம்பாக்கம் போலீஸ் தகவல் கொடுத்திருக்காங்க. நீ என்ன உளர்றே?..." என்றான்.

ஷிவா, "குரு... என்னையே நம்பலையா? புரவிகள் ஓடுற சப்தம் இப்பவும் என் காதில கேட்குதுடா..." என்றான்.

குருபிரசாத், 'விடு... போகும்போது காதுக்கு டாக்டர்கிட்ட காட்டிட்டுப் போகலாம். ரெண்டு நாள்ல சரியாயிடும்...' என்றான்.

ஷிவா, "இல்ல குரு... அந்த இரண்டாவது இளவரசி எத்தனை ஜென்மம் எடுத்தாவது இந்தச் சரவணனைக் கல்யாணம் பண்ணிக்க வருவாளாம்." என்றான்.

குருபிரசாத் அவனை அலட்சியம் செய்துவிட்டு சரவணனை நோக்கி, "உங்க வீடு மாம்பலம்தானே. உங்கப்பா வர ஏன் இவ்வளவு லேட்டாகுது?" என்றான்.

"வந்துருவார் ஸார்..."

ஷிவா அடிபட்ட பார்வையுடன் புரபஸரை நோக்கி, "நீங்களாவது உண்மையைச் சொல்லுங்க." என்றான்.

புரபஸர் கடுப்பாக, "தஞ்சை நந்தர் புதையலே போச்சு. அப்புறம் என்ன உண்மை? நான் பத்து மணிக்கு களப்பிரர்கள் ஆட்சியின் விளைவுகள் பத்தி க்ளாஸ் எடுக்கணும். ஸ்டூடண்ட்ஸ் வெயிட் பண்ணுவாங்க...."

என்றார்.

ஷிவா அதிர்ச்சியாக அவரை விரோதமாகப் பார்த்தபடியே நின்று கொண்டிருக்க, சரவணனின் அப்பா அவசரம் அவசரமாக உள்ளே நுழைந்தார். வந்த வேகத்தில் சரவணனைக் கட்டிக் கொண்டு குருபிரசாத்தைப் பார்த்து 'தாங்ஸ் ஸார்' என்றார். அவருடன் ஒரு பெண் வேறு வந்திருந்தாள். மிக ஒயிலாக இருந்த அவளை ஷிவா உற்றுக் கவனித்தான். பெரிய ராஜ குடும்பத்துக் களை அவள் முகத்தில் இருந்தது. அவள் மையமாக சரவணனையே பார்த்துக் கொண்டு நின்றாள்.

குரு பிரசாத், "எல்லாம் நல்லபடியாக முடிஞ்சுது. சரவணன் பத்திரமா இருங்க.




போகலாமா ஷிவா..." என்றான்.

ஷிவா, குருபிரசாத்தைக் கவனிக்காமல் அந்தப் பெண்ணையே பார்த்துக் கொண்டு "யார் இவங்க?" என்றான்.

"எங்க ஃபிளாட்லதான் குடியிருக்காங்க. கிரவுண்ட் ஃபிளோர். பத்து நாளா சரவணனைக் காணோம்னு இந்தப் பொண்ணும் தவிச்சுப் போயிட்டா. சரவணன் கிடைச்சாச்சுன்னு தகவல் தெரிஞ்சதும் கூடவே ஓடி வந்துட்டா" என்றார் சரவணனின் அப்பா.

ஷிவா விநோதமாக அவளைப் பார்த்துக் கொண்டிருக்க, குருபிரசாத், "ஏய். ஷிவா என்ன இது?" என்று தட்டினான்.

"இரு குரு..." என்று ஷிவா தீவிரமாக அவளை உற்று நோக்கினான்.

"உங்களுக்குச் சொந்த ஊர் எது?"

"மாங்குடி..."

"உங்கப்பா பேர் என்ன?"

"நெடுஞ்செழியன்..."

"உங்க பேர் என்ன?"

"திவ்ய தேவி..." என்றாள் அவள்.

அவள் முடிக்கும் முன் ஷிவா மயக்கமடைந்து விழுந்தான்.

முற்றும்

# மியான்மரில் ஒரு தஞ்சாவூர்!

மியான்மருக்குச் சென்று வந்திருக்கிறார்கள், சாந்தா - தனஞ்சயன் தம்பதியினர். பழைய பர்மாவான மியான்மரில் தங்கள் அனுபவங்கள் பற்றிச் சொல்கிறார்கள் இருவரும்.



★ காலை ஆறு மணிக்கு, ஏராளமான புத்த பிட்சுக்கள் காவியுடைதரித்து, வரிசையாக, கையில் பிட்சைப் பாத்திரத்துடன் வீடு வீடாகப் போகிற காட்சியைப் பார்த்தோம். அவர்கள் வருவதற்காகவே அவரவர் வீட்டு வாசலில் காத்திருக்கிறார்கள். அவர்களுடைய பிட்சைப் பாத்திரத்தில் உணவு பரிமாறிவிட்டுத்தான் உள்ளே போகிறார்கள். பிட்சுக்களின் விடுதிகளில் அவர்கள் அந்த உணவைக் கொண்டு சென்ற பிறகு எல்லோரும் பகிர்ந்து கொள்ளுவார்களாம். பணம் கொடுத்தால் அதை அப்படியே புத்த மடாலயத்தில் கொண்டு சேர்த்து விடுகிறார்கள்.



• ஷ்வேதகோன் பகோடா

★ மியான்மரில் இப்போது இராணுவ ஆட்சிதான் நடைபெறுகிறது. ஆனால் மக்கள் எல்லோரும் மிகுந்த மகிழ்ச்சியுடன் இருக்கிறார்கள். ஒருவரிடம்கூட அதிருப்தி என்பதே இல்லை. நகரங்கள் எல்லாமே அமைதியாக இருக்கின்றன. இந்தியர் என்றால் அவர்களுக்கு மிகுந்த பிரியம். அப்படி ஒரு நட்புடனும், மரியாதையுடனும் பழகுகிறார்கள்.



★ ஐராவதி நதியை வடக்கிலிருந்து தெற்கே முழுதுமாக இணைத்திருக்கிறார்கள். அதனால் தண்ணீர்ப் பஞ்சம் என்பதே இல்லை. இரண்டு வேளையும் ஆனந்தமாகக் குளிக்கிறார்கள்.

★ ஷ்வேதகோன் பகோடா என்ற தங்கத்தால் ஆன புத்தர் கோயிலைப் பார்த்து வியந்து போனோம். இதைச் சுற்றித்தான் ரங்கூன் நகரமே அமைந்திருக்கிறது. கோயிலின் ஒவ்வொரு மூலையிலும் ஒரு நாளைக்கு ஒரு கிரகமாக, நவக்கிரகங்களை வைத்திருக்கிறார்கள். பகோடா எனப்படும் புத்தர் கோயில்கள் நிறைய இருக்கின்றன. நம் இந்துக் கடவுள்களின் கோயில்களும் உண்டு.

• தனஞ்சயன் - சாந்தா







★ தனஞ்செயனுடன் சென்ற டீம்

★ சுற்றுலாத்துறை விடுகிற பிரம்மாண்டமான படகில் மாண்டலேயிலிருந்து பகான் என்ற நகருக்குப் பயணமானோம். புறப்பட்ட அரைமணி நேரத்தில் படகு மணலில் தரைதட்டி நின்று விட்டது. அதை நகர்த்தப் படாத பாடு பட்டார்கள். சுமார் நாலு மணி நேரம் அதற்குள்ளேயே இருந்தோம். பிரான்ஸ், இத்தாலி, அமெரிக்க, ஜெர்மன் டூரிஸ்ட்டுகள் நிறைய இருந்ததால், பேசிக் கொண்டிருந்ததில் நேரம் போனது தெரியவில்லை. சாதாரணமாக அவர்கள் இதுபோல் ஏதானும் நடந்து விட்டால் கோபத்தில் குதிப்பார்கள். ரகளை பண்ணுவார்கள். ஆனால் அப்படி எதுவுமே நடக்க வில்லை. "'இப்படியும் நடக்கலாம்' என்று சுற்றுலா கையேட்டில்தான் அவர்களே சொல்லியிருக்கிறார்களே?" என்றார்கள்.

★ போலீஸ்காரர் முதற்கொண்டு பொது மக்களிடம் எல்லோருமே மரியாதையாக நடந்து கொள்ளுகிறார்கள். நாம் அர்ச்சனை செய்யும் போது இடது கை விரல்களை வலது முழங்கையில் பவ்யமாகத் தொட்டுக் கொள்ளுவோம் அல்லவா? அப்படித்தான் அவர்கள் எதையும் கொடுக்கவோ, வாங்கவோ செய்கிறார்கள். ஆரஞ்சு நிற சிக்னலில் கார் கடந்து விட்டபோது கூட, நிறுத்திய போலீஸ்காரர் அப்படித்தான், டிரைவிங் லைசன்ஸை வாங்கிப் பார்த்துவிட்டுத் திருப்பிக் கொடுத்தார்.

★ அவர்களுடைய தேசிய உடையான லுங்கியும் அரைக் காலர் சட்டையும்தான் அணிகிறார்கள். அரசாங்க அதிகாரிகள் முதற்கொண்டு அனைவருமே அப்படித்தான் அணிகிறார்கள். லுங்கியை லுஞ்சி என்கிறார்கள். எல்லோரும் வெற்றிலை போடுகிறார்கள். இந்தியாவிலிருந்து வருகிறதாம். ஹிந்தி திரைப்படங்களை அப்படி ரசித்துப் போய்ப் பார்க்கிறார்கள். சாலைகளில் போக்குவரத்து வெகு சீராக இருக்கிறது. விபத்து என்ற பேச்சுக்கே இடமில்லை.

★ எங்கள் மாணவி, அனிதா ஷண்முகநாதன் அரசு மூலம் ஏற்பாடு செய்த நிகழ்ச்சிகளை நடத்தத்தான் அங்கே போனோம். நம் நாட்டுத் தூதர் சுரேஷ் பாட்டியாவும் அவர் மனைவியும் மிகுந்த நட்புடன் எல்லா உதவிகளையும் செய்தார்கள். அதேபோல, அவர்கள் நாட்டுக் கலாசாரத் துறை அதிகாரி கூடவே கடைசிவரை இருந்தார். அவர் ஒரு கவிஞர்.

• ரங்கூனில் எங்கள் நடன நிகழ்ச்சி நேஷனல் தியேட்டரில் நடைபெற்றது. நம் ஊரில் அப்படி ஓர் அரங்கம் இல்லையே என்று வருத்தமாக இருந்தது. ஆயிரத்து நானூறு பேர் - அத்தனை பேரும் பர்மியர்கள். 'ராம நாடக கீர்த்தனை, ஏன் பள்ளி கொண்டீர் ஐயா' எல்லாம் அப்படி

ரசித்துப் பார்த்தார்கள்! மாண்டலேயிலும் நேஷனல் தியேட்டரில்தான் நிகழ்ச்சி. முதலில் எங்களை வரவேற்று கௌரவிப்பது போல அவர்கள் நிகழ்ச்சி நடத்தினார்கள். பிறகு எங்கள் நிகழ்ச்சி நடைபெற்றது. வனத்தில் பெண் மான் ஒன்று பிரசவ அவஸ்தையில் துடித்துக் கடைசியில் குட்டி போடும் கதையை, நான் நடனத்தில் வழங்கியபோது ஒவ்வொரு அபிநயத்துக்கும் கைத்தட்டல்.

★ பகோ என்ற ஊரில் ஏராளமான தமிழர்கள். ஹிந்து கலாசார சங்கம், முருகன் கோயில் எல்லாம் இங்கே இருக்கின்றன. அசல் தஞ்சாவூர் கிராமம்தான். சுமார் ஏழாயிரம் தமிழர்கள் கூடியிருந்தார்கள் அங்கே. கோயில் பூஜை முடித்து, ஏழு மணிக்கு மேல்தான் நடனம். அப்படி ஓர் அமைதியுடன் பார்த்து ரசித்தார்கள். இனிமையான தமிழில் பேசுகிறார்கள். ஓர் ஆங்கில வார்த்தை கூடக் கலப்பதில்லை. குழந்தைகளுக்குத் தமிழும், பர்மிய மொழியும் மட்டுமே சொல்லிக் கொடுக்கிறார்கள்.

★ அவர்களுடைய கரன்சியை 'கியாட்' என்று எழுதினாலும், 'சாட்' என்றே சொல்லுகிறார்கள். காய்கறிகள் முதற்கொண்டு அங்கே உள்ள மக்களுக்கு எல்லாமே ரொம்ப 'சீப்'. வெளிநாட்டவர் என்றால் டாலரில் கறந்துவிடுகிறார்கள். (சுமார் ஆயிரம் ரூபாய் வருமானம் இருந்தால் மகிழ்ச்சியாக அங்கே வாழலாம் என்கிறார்கள்.)

★ ஏப்ரல் 17 அவர்களது புத்தாண்டு. அதை வாட்டர் ஃபெஸ்டிவல் என்று நாடு முழுதும் கொண்டாடுகிறார்கள். (ஹோலி மாதிரி) வெறும் தண்ணீரை ஹோஸ் பைப்பில் வைத்து, போகிற வருகிற எல்லார் மீதும் பீய்ச்சி அடிக்கிறார்கள். ஆனால் ஆர்ப்பாட்டம் கிடையாது. அறுபத்து மூவர் விழாவின் போது அங்கங்கே தண்ணீர்ப் பந்தல்கள். அரசாங்கமே இலவசமாக லாரி லாரியாகத் தண்ணீர் வழங்குகிறது. முந்தைய வருஷத்திய பாவத்தை எல்லாம் கழுவி விட்டுவிடுவதாக ஓர் ஐதீகம்!

★ ஓட்டலில்கூட ஐஸ்க்ரீம் கிடைப்பதில்லை. குழந்தைகளுக்கும் ஐஸ்க்ரீமை அறிமுகப்படுத்தவில்லை.

★ அரசியல் ஆர்ப்பாட்டங்களோ, கூட்டங்களோ எதுவும் இல்லாமல் அமைதியாக இருக்கிறது மியான்மர்.

சந்திப்பு : **சாருகேசி**

# காத்திருக்கும் அண்ணாவின் வரலாறு!

**பி**.சி. கணேசன் ஆங்கிலத்தில் எழுதியுள்ள அறிஞர் அண்ணாவின் வாழ்க்கை வரலாற்றை! இந்திய அரசின் பதிப்புத் துறை வெளியிட இருக்கிறது. புத்தகங்கள் தயாரான நிலையில் கடந்த பிப்ரவரி மூன்றாம் தேதி அப்போதைய செய்தித் துறை அமைச்சர் சுஷ்மா ஸ்வராஜ் தலைமையில் வெளியீட்டு விழா நடப்பதாக இருந்தது. டி.ஆர்.பாலு, பி.ஹெச்.பாண்டியன் ஆகியோர் கலந்து கொள்வதாக ஏற்பாடு. ஆனால் விழாவிற்கு இரண்டு நாள் முன்பு சுஷ்மா ஸ்வராஜ் வேறு துறைக்கு மாற்றப்பட, விழாவைத் தள்ளி வைத்து விட்டார்கள். இன்னமும் வெளியீட்டு விழாவிற்கான மாற்றுத் தேதி அறிவிக்கப்படவில்லை.



• பி.சி. கணேசன்

"அண்ணா வாழ்க்கை வரலாற்றை விழா வைத்துத்தான் வெளியிட வேண்டும் என்று பிரதமர் மிகவும் குறியாக இருந்தார். சுஷ்மா ஸ்வராஜ் இல்லாவிட்டாலும் அந்தத் துறைக்கு வேறு ஒருவரை நியமித்த நிலையில், புது அமைச்சரை வைத்து விழா நடத்தியிருக்கலாம். ஆனால் அதைச் செய்யவில்லை. 'அண்ணா' புத்தகத்துக்குப் பிறகு தயார் ஆன ஆர்.எஸ்.எஸ். தலைவர் ஹெக்டேவார் புத்தகம் பிரதமர் தலைமையில் வெளியிடப்பட்டுவிட்டது. விழா நடக்காததால் 'அண்ணா' புத்தகம் அச்சடிக்கப்பட்டு விற்பனைக்குப் போகாமல் தூங்குகிறது" என்றார் பி.சி. கணேசன்.

பாலுவிற்கும் பி.ஹெச்.பாண்டியனுக்கும் இதைப் பற்றியெல்லாம் விசாரிக்க நேரமில்லாததால், கணேசனே இப்போது பிரதமரின் செயலருக்குக் கடிதம் எழுதி இருக்கிறார்.

- **சஞ்சயன்**



# கபடி கபடி

விடியற்காலை மூன்று மணிக்கெல்லாம் எழுந்து கொள்ளும் அந்த இளைஞர் கூட்டம், மீன் வலை, கட்டு மரத்தோடு நடுக்கடல் வரை மீன் பிடிக்கச் செல்கின்றது. வலையில் அகப்படும் மீன்களோடு காலை எட்டு மணிக் கெல்லாம் கரையேறுகின்றது. அதிகம், குறைவு என்ற பாகு பாடு இல்லாமல் ஏறக்குறைய சரிசமமாகப் பிரித்துக் கொள் கிறார்கள். மாலையில் 'கபடி' பயிற்சி!

"இருபது வருஷங்களாக, கடற்கரை வாழ்க்கையோடு கபடியையும் இப்படித்தான் பழகிக் கொண்டோம்' என்கிறார் கள் இந்த மீனவ இளைஞர்கள்!

சென்னை 'வெட்டுவாக்கேணி' பக்கத்திலுள்ள 'சின் னாண்டிக்குப்பம்' என்ற மிகச்சிறிய மீனவ கிராமம். அக்கம், பக்கம் ஊர்களிலுள்ள பலரிடம், இந்த ஊரைப் பற்றி கேட் டால், இவர்கள் கபடி விளையாடுவதைத்தான் பெருமையாகச் சொல்கிறார்கள். 'அலை ஓசை' அணியின் பெயர். கேப்டன் துரை நம்மிடம் பேசினார்.

"எங்களோட தாத்தா காலத்துல இருந்து இங்கு கபடி விளையாடி வந்திருக்காங்க. அப்போ போட்டியில கலந் துக்கணும்னு யாருக்கும் தெரியாது. ஏன்னா மீன் பிடிக்கிறது தான் பிரதானமான தொழில், கபடி அவங்களுக்கு வெறும் பொழுதுபோக்கு.

ஆனா கடந்த இருபது வருஷமா நாங்க கபடி விளையாட ஆரம்பிச்சு, பல போட்டிகளில் கலந்து இருக்கோம். நிறைய 'கப்'புகளும் வாங்கி இருக்கோம்'' என்கிறார் கபடி டீம் கேப்டன் துரை.

"கிட்டத்தட்ட முந்நூறு மேட்ச்களில் ஆடி இருக்கோம். மாவட்ட அளவில் நிறைய ஆடி இருக்கிறோம். இதில் மண்டல அளவில் எட்டு போட்டிகளில் நாங்கள் தான் வின்னர். குண்டுச் சட்டிக்குள்ளே குதிரை ஓட்டற கதையா' எங்களோட திறமை என்னன்னு தெரியாம, ஆரம்பத்துல எங்களுக்குள்ளாவே விளையாடிகிட்டு இருந்தோம். அப்போ நிறைய 'கபடி' போட்டிகள் நடப்பது தெரியும். ஆனா கலந் துக்க நுழைவுக் கட்டணம், போய்வர போக்குவரத்து செலவு, இதுக்குப் பயந்துகிட்டே சும்மா இருந்துடுவோம். இந்தச்



# கபடி..!

சமயத்தில்தான் காஞ்சிபுரம் மாவட்ட அளவில் 'கபடி' போட்டியில் கலந்து கொள்ள அழைப்பு வந்தது. டீம்ல இருந்த எல்லோரும் இதுல அவசியம் கலந்துக்கணும்னு முடிவு செய்தோம். பணத்துக்கு என்ன செய்யறதுன்னு யோசனை. அப்பத்தான் நான் இந்த யோசனையைச் சொன்னேன். 'நாம எல்லோரும் வழக்கமா தனித்தனியா போய்தான் மீன் பிடிக்கிறோம். இந்த முறை எல்லோரும் ஒண்ணா சேர்ந்து மீன் பிடிச்சு, மொத்தமா வித்து அந்தப் பணத்தை வச்சு, போட்டியில கலந்துப்போம்னு முடிவு செய்தோம். அதே போல் கட்டு மரத்துக்கு ரெண்டு பேருன்னு கிளம்பி, மீன் புடிச்சு, அந்தப் பணத்துல பனியன், ஷார்ட்ஸ் வாங்கி மாவட்ட அளவுப் போட்டியில கலந்துகிட்டோம். மொத்தம் அறுபது டீம். இதுல எப்படியும் ஜெயிக்கணும்னு ஒரு வைராக்கியத்தை மனசுல வச்சு ஆடினோம். ஃபைனல்லே நாங்கதான் வின்னர். பரிசுத் தொகை மூவாயிரம் ரூபாய், ஒரு பெரிய கோப்பை. எங்களால இந்தச் சந்தோஷத்தைத் தாங்க முடியலை. நான் உணர்ச்சி வசப்பட்டு ஓ...ன்னு அழுதுட்டேன்'' என்று ஒரே மூச்சில் சொன்னார் துரை.

''இது மாதிரி போட்டியில் கலந்து கொள்ள யாரும் 'ஸ்பான்சர்' செய்வதில்லையா?'' என்ற நம் கேள்விக்கு இந்த டீமிலுள்ள மோகன் படபடப்பாகப் பேசினார்.

''கிரிக்கெட், 'டென்னிஸ்', 'ஹாக்கி'ன்னு அந்த விளையாட்டுகளுக்கு ஈசியா ஸ்பான்சர் கெடைக்குதுங்க, கபடியை மட்டும் இன்னும் பல பேர் ரோட்டோரம் விளையாடற விளையாட்டாவே நெனைக்கிறாங்க. எங்களுக்கு இன்டர்நேஷனல் கம்பெனியோ, பெரிய பெரிய நிறுவனமோ ஸ்பான்சர் பண்ணுங்கன்னு கேட்கலைங்க, லோக்கல் கம்பெனி, அவங்களால முடிஞ்ச அளவு செய்தா

• கபடி டீம்





போதும். உதாரணத்துக்குச் சொல்லணும்னா, விழுப்புரத்துல ஒரு கபடிப் போட்டி நடக்குதுன்னா, அங்கே போய்வர பஸ் செலவுக்குப் பயந்துகிட்டே சும்மா இருந்துடறோம். பெருமைக்காகச் சொல்றேன்னு நெனைக்காதிங்க, நாங்க கலந்துகிற பெரும்பாலான கபடி போட்டில வின்னர்' அப்படி இல்லைன்னா 'ரன்னர்'. இதுல கிடைக்கிற பரிசுத் தொகையை, அடுத்த மேட்சுக்குப் போற செலவுக்கு வச்சுப்போம். சில சமயங்களில் யாருக்காவது அடிபட்டுப் போச்சுன்னா, வைத்தியச் செலவுக்கும் இந்தப் பணம்தான். சமீபத்துல கபடி விளையாடும் போது எங்க டீம்ல ஒருத்தருக்கு தலையில அடிபட்டு, பத்து தையல் போட்டாங்க, ரெண்டு மாசத்துக்கு கடுமையான வேலை செய்யக் கூடாதுன்னு டாக்டர் சொல்லிட்டாரு. அவர் கடலுக்குப் போய் மீன் பிடிச்சாதான் அந்தக் குடும்பத்துக்குச் சாப்பாடு. இந்த மாதிரி நேரத்துல பரிசுப் பணம்தான் பெரிய உதவியா இருக்கு. இப்போதைக்கு மீன் பிடிச்சுட்டு வந்துதான் கபடி விளையாடுறோம். யாராவது ஸ்பான்சர் செய்தால் கபடி விளையாடிட்டு, அப்புறமா மீன் பிடிக்கப் போவோம்" என்றார் நம்பிக்கையோடு.

இவர்கள் கபடி டீமில் இதுவரை எந்தவிதமான பிரச்னையும் வந்ததில்லையாம். எதுவாக இருந்தாலும் ஒருத்தருக்கு ஒருத்தர் விட்டுக் கொடுத்து விடுவோம். 'இதற்குக் காரணம் எங்கள் டீம் கேப்டன் துரைதான்' என்கிறார்கள் ஒட்டு மொத்தமாக.

இவர்களது 'அலை ஓசை' கபடி அணியிலிருந்து ரவிகுமார், லட்சுமணன் இருவரும் மாநில அளவு போட்டிக்கு தமிழ்நாடு அணிக்காக விளையாடிவிட்டு வந்திருக்கிறார்களாம். "அதே போல் எங்கள் அணிக்கும் மாநில அளவில் மோதக் கூடிய ஒரு போட்டிக்கு வாய்ப்புக் கிடைத்தால், எங்களின் திறமையை ஒட்டு மொத்தமாகத் தெரிய வைப்போம்" என்று கட்டை விரலை உயர்த்திக் காட்டுகிறார்கள்.

– செய்யாறு வி. பாலு

படங்கள்: 'டிஜிட்டல்' சண்முகம்

அடுத்த இதழில்

பாரதிபாலன் எழுதும்

# சுவாசிக்கத் தெரிந்தவர்கள்...

மினி தொடர்

ஜாதகம் எப்படியிருப்பினும் தன்னை வணங்குபவர்களுக்கு நன்மையே செய்யும்

# நவக்ரஹ க்ஷேத்ரங்களில் உங்கள் ராசிப்படி ப்ரீதி செய்ய அன்னதானம் செய்வோம் வாருங்கள்!



அன்புடையீர்! சித்திரபானு வருஷம் முடிந்து சுபானு ஆண்டு சித்திரையில் பிறக்க, நாடெங்கும் மாற்றங்கள் நடைபெறப் போகின்றன. வருகிற சனிப்பெயர்ச்சியின் போது ஒவ்வொரு ஜாதகருக்கும் கிரஹ மாற்றங்கள் மிகப்பெரிய அளவில் நிகழும். ஒவ்வொரு ஜாதகரின் வாழ்விலும் நவக்கிரஹங்கள் முக்கிய பங்காற்றி வாழ்வில் கஷ்டத்தைப் போக்கி சுபீக்ஷத்தை உண்டாக்குகின்றன. ஜாதகரின் அசுப ஸ்தானங்களில் இருக்கும் நவக்ரஹங்கள் கூடத் தன்னை வழிபடும் அனைவருக்கும் நற்பலனையே அளிக்கின்றனர். இது பிரம்மதேவனின் ஆணை. கிரஹங்கள் ஒரு ஸமயம் பிரம்மதேவனை வணங்கிப் பிரார்த்தித்தனர். ஐயனே! ஒரு ஜாதகனின் அசுப ஸ்தானத்தில் இருக்கும் நாங்கள் அவனுக்குத் தீய பலனையே அளிக்கும்படி தாங்கள் கட்டளையிட்டுள்ளீர்கள். அவ்வாறே நாங்களும் செய்கிறோம். ஆயினும் தீமையை அனுபவிப்பவர்கள் எங்களைச் சபிக்கின்றனர். எனவே, எங்களுக்கு அபயமளியுங்கள் என்றனர். அப்போது, பிரம்மதேவன் கஷ்டங்களை அனுபவிப்பவர்கள் உங்களைப் பூஜித்து அன்னதானம் அளித்தால் அவர்களுக்கு நீங்கள் நற்பலனை அளியுங்கள் என வரமளித்தார்.

**"யஸ்ச யஸ்ச யதா துஸ்த: தத்தம் யத்னேன பூஜயேத்:!**
**ப்ரம்ஹணைஷாம் வரோதத்த: பூஜிதா: பூஜயிஷ்யத"**

என்று மாந்தாரு கர்மவிபாகம் கூறுகின்றது.

ஆகவே, உங்கள் ஜாதகத்தில் கிரஹ மாற்றங்களினால் ஏற்படும் கஷ்டத்தைப் போக்க, உரிய கிரஹங்களுக்கான ஸ்தலங்களில் அன்னதானம் செய்ய கோபுரதரிசனம் அன்னதான அறக்கட்டளை விரிவான ஏற்பாடுகளைச் செய்துள்ளது. அந்தந்த கிரஹங்கள் அமர்ந்தருளும் க்ஷேத்ரங்களில் அன்னதானம் செய்வதில் பங்கேற்று அற்புதமான பலன்களை அடைய பிரார்த்திக்கிறோம்.

| நவக்ரஹங்கள் | க்ஷேத்ரங்கள் |
|---|---|
| சூரியன் | - சூரியனார்கோயில் |
| சந்திரன் | - திங்களூர் |
| செவ்வாய் | - வைத்தீஸ்வரன் கோயில் |
| புதன் | - திருவெண்காடு |
| வியாழன் | - ஆலங்குடி |
| சுக்கிரன் | - கஞ்சனூர் |
| சனீஸ்வரன் | - திருநள்ளாறு |
| ராகு | - திருநாகேஸ்வரம் |
| கேது | - கீழப்பெரும்பள்ளம் |

★ *சிறிய தொகை மற்றும் அரிசி போன்ற உணவுப் பொருட்களும் ஏற்றுக் கொள்ளப்படும்.*
★ *ரூ.500 அனுப்பும் அன்பர்களுக்கு, கோபுர தரிசனம் மாத இதழ் ஒரு ஆண்டுக்கு அனுப்பி வைக்கப்படும்.*
★ *ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு, கோபுர தரிசனம் இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.*
★ *ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு, கோபுர தரிசனம் இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.*

நன்கொடையாளர்களின் இல்லங்களில் மகாலக்ஷ்மி நிரந்தரமாக வசிக்க ஸ்ரீகுபேர யந்திரம் வழங்கப்படும். அல்லது 'கிரிகோ'வின் ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம் புத்தகம் அல்லது கேசட் அனுப்பி வைக்கப்படும். நமது வாழ்வில் ஏற்படும் தீராத பிரச்சனைகள் பல. கடன் தொல்லை, குடும்ப வாழ்வில் குழப்பம் - மனக்கவலை - வேலைவாய்ப்பின்மை - கல்வியில் மந்தம் என ஜாதகக் கோளாறால், நவக்ரஹங்களின் மாறுபாட்டால் பல பிரச்சனைகளுக்குத் தீர்வு காண உங்கள் சார்பாக **கவி-ந்யாய-மீமாம்ஸ சிரோன்மணி ஸ்ரீமான் திருவெண்காடு டி.கே. முத்துஸ்வாமி சாஸ்திரிகள்** தலைமையில் அன்னதானம் செய்து பிரஸாதம் அனுப்பி வைக்கப்படும்.

**நன்கொடை அனுப்பும் அன்பர்கள் GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST, CHENNAI-41 என்ற பெயரில் CHEQUE/D.D./M.O. மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். லோக க்ஷேமார்த்தமாக அன்னமிடும் அரிய பணிக்கு உங்களது ஒத்துழைப்பை நல்கிட வேண்டுகிறோம்.**



*CHEQUE/D.D./M.O. அனுப்ப வேண்டிய முகவரி :*

## கோபுர தரிசனம் அன்னதான அறக்கட்டளை

## GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST

M-11/F-4, RAGAM APTS., I MAIN ROAD, THIRUVALLUVAR NAGAR,
THIRUVANMIYUR, CHENNAI - 600 041. SOUTH INDIA
☎: (044) 24900303, 24900603 Mobile: 94441 16300 E-mail: gopuradarshanam@yahoo.co.in

சிற்றுந்துகூட இதுவரை எட்டிப்பார்க்காத எளிய கிராமம் சாத்தன்குடி. மணலி அருகே பேருந்து தடத்திலிருந்து இரண்டு கி.மீ. தூரம் உள்ளடங்கியிருக்கிறது. இங்கு மொத்தம் நூற்றியிருபது குடும்பங்கள். இதில் அறுபதுக்கும் மேற்பட்ட குடும்பங்கள் பஞ்சம் பிழைக்க வெளியூருக்குச் சென்றுள்ளன. அவர்களது கீற்றுக் குடிசை வீட்டுக் கதவுகளின் பூட்டுகள், தொங்கிய முகத்துடன் நம்மை வரவேற்கின்றன.

ஊரிலிருந்த இளைஞர்கள், திருமணம் ஆகாத பெண்கள், என பத்து இருபது பேர் கொண்ட குழுக்களாகக் கிளம்பி வெளியூர் சென்றுள்ளனர். ஈரோடு, திருப்பூர், திருச்செங்கோடு பகுதிகளுக்கு ஒரு பிரிவினரும், கரும்பு வெட்டு வேலைக்குச் சிதம்பரம் பகுதிக்கு ஒரு பிரிவினரும் சென்றுள்ளனர். "முன்னெல்லாம் ஒவ்வொரு வருசமும் வயக்காட்டு வேலைக்குன்னு எங்கப் பக்கத்து ஆளுங்க பத்தாம, எங்க மூணு (தஞ்சை, திருவாரூர், நாகை) மாவட்டத்துக்கும் ராமநாதபுரத்துலேர்ந்து லாரி லாரியா கூலியாளுங்க வந்திறங்கி, தங்கி வேலை பார்த்துட்டுப் போவாங்க. போகும்போது சாப்பாட்டு நெல்ல எடுத்துகிட்டு சந்தோசமா போய்ட்டு வருவாங்க. இப்ப எங்க நெலமையே மாறிப் போச்சு. தண்ணிப் பஞ்சத்துல வெள்ளாமை இல்லாமப் போகவும் நாங்க இப்ப கேரளா, ஈரோடு, திருப்பூர்ன்னு பல ஊருக்கும் பிழைப்பைத் தேடிப் போற மாதிரி ஆயிடுச்சிங்க."


• ஜி. பழனிச்சாமி


• கா.சங்கரன் - ச.நாகம்மாள்

# "பிழைப்புக்கு வழியில்லை!"

## -வெளியேறும்



* ஆர்.சிவசாமி



* விவசாயத் தொழிலாளிகள்!



* வளையாபதி



* என். நாகூரான்

என ஆதங்கத்துடன் குறிப்பிடுகிறார் வளையாபதி என்கிற விவசாயத் தொழிலாளி.

"பத்து மாசமாவே இங்கிட்டு சரியா வேலை இல்லீங்க. எத்தினி நாளைக்குத் தாக்குப் பிடிக்க முடியும் சொல்லுங்க? அதான் ஊர்ல பாதிப் பேத்துக்கும் மேலே வெளியே கிளம்பிப் போய்ட்டாங்க. வறட்சி நிவாரணம் அது இதுங்கறாங்க. யாருக்கு வந்து சேருதுங்கிறீங்க. வேலைக்கு உணவு திட்டம்கறாங்க. அப்படீன்னா என்னங்க?" எனக் கேட்கும் ஆர். சிவசாமியின் மகனும், மருமகளும் திருப்பூருக்குச் சென்றுள்ளனராம்.

"எனக்கு நினைவு தெரிஞ்ச நாள்லேருந்து இந்தப் பகுதியில இப்படியொரு வறட்சி வந்ததில்ல. பாதிக்கப்பட்ட விவசாயத் தொழிலாளிகளுக்கு மாசம் முப்பது கிலோ அரிசி தர்றதாச் சொன்னாங்க. எங்க ஊர்ல எழுபது வீட்டுக்குப் பதிவு செஞ்சோம். திட்டம் அறிவிச்சு மூணு மாசம் ஆச்சு. ஒரு தபா பத்து கிலோ அரிசியும், இன்னொரு தபா பதினைஞ்சு கிலோ அரிசியும் தந்தாங்க. எல்லார்க்கும் அவ்வளவுதான். இப்ப ரெண்டு மாசமா அந்த அரிசியும் வந்தது சேரலை" என்கிறார் சாத்தன்குடி கிராம கமிட்டித் தலைவர் என். நாகூரான்.

**த**ஞ்சை, நாகை, திருவாரூர் மாவட்டங்களின் பாசனப் பகுதி, பதினாறு லட்சம் ஏக்கர். அதில் ஐந்து லட்சம் ஏக்கரில் மட்டுமே விளைச்சல் கண்டுள்ளது. மழையும், காவிரித் தண்ணீரும் வஞ்சித்து விட்டதால், பதினோரு லட்சம் ஏக்கரில் எவ்வித விளைச்சலும் இல்லை. விளைவு, விவசாயத் தொழிலாளர்கள் வேலையிழப்பு. மாற்று வேலையும் எல்லோருக்கும் கிடைத்து விடுவதில்லை. ஒரு பகுதியினர் வேதனை சுமந்து வேலை நாடி, வெளியூர் சென்றுவிட்டனர். கடந்த நான்கைந்து மாதங்களாக, கத்திரி வெயிலில் காய்ந்து போன நதிக்கரையோர நாணல் புதர்கள் மாதிரி, சோர்ந்து கிடக்கின்றன காவிரிப் பாசன விவசாயத் தொழிலாளர்களின் குடும்பங்கள்.

# விவசாயக் கூலிகள்!

முக்கால் ஏக்கர் சொந்தமாக இருந்த போதிலும் கா. சங்கரனும் அவரது மனைவி நாகம்மாளும் தங்களை விவசாயக் கூலிகள் என்றே சொல்லிக் கொள்கின்றனர். சாத்தன் குடி வாசிகளான அவர்கள், காட்டில் கருவேல முள்ளை வெட்டிக் கொண்டிருந் தனர். வெடித்துக் கிடக்கும் தமது வயலுக்கு நம்மை அழைத்துச் சென்று, வேதனை வெளிப்பட புலம்பித் தள்ளினர்.

"மாரி மழை பெய்யவில்லை. எங்க மக்கப் பஞ்சம் தீரவில்லை. ஆளுறவங்க அறிவிச்ச அரை வயிறு நிவாரணமும் எங்க ஆண்ட பாண்டைங்க யாருக்கும் வந்து சேரவில்லை" எனப் பெருங்குரலெடுத்துப் பாடிய நாகம் மாள், கவலை தோய்ந்த முகத்துடன் கன்னத் தில் கை வைத்து வயல் நடுவே அமர்ந்துவிட் டார். சங்கரனோ நிலத்தையே வெறித்துப் பார்த்தபடி வெகு நேரமாய் குத்துக் காலிட்டு அமர்ந்திருந்தார். அமைதியை நாடிய அவரது மௌனத்தைக் கலைக்க விரும்பா மல் அங்கிருந்து நகர்ந்தோம்.

பேருந்து தடத் துக்கு வந்து சேர்ந்தபோது, வேலைக்கு உண வுத் திட்டத்தில் பங்கெடுத்து திரும்பிக் கொண் டிருந்தனர் மணலி கிராமத்து தொழி லாளிகள்.

"ஒரு நாளைக்கு ஏழு கிலோ அரிசியும், கையில பதினைஞ்சு ரூபாயும் தர்றதா சொன் னாங்க. பதினைஞ்சு நாளா போய்ட்டு இருக் கோம். ரூபா மட்டும் தந்துட்டு வர்றாங்க. அரிசி இன்னும் தரவே இல்லை. மத்த ஊர்ல எல்லாம் ஆளுக்கு ஐம்பத்திரெண்டு ரூபாய் பணமாவே தர்றாங்க. இவுங்க எங்களுக்கு மொத்தமா அரிசி எப்ப தருவாங்கன்னு தெரி யலை. முந்தி கேட்டதுக்கு லாரி ஸ்டிரைக் குன்னாங்க. ஸ்டிரைக் முடிஞ்சும் அரிசி கெடைக்கலே. இன்னும் அஞ்சாறு நாளைக்கு இந்த வேலை இருக்கும்ன்னு சொல்றாங்க. அதுக்கப்புறம் என்ன செய்யறதுன்னுதான் ஒண்ணும் புரியலை" என்றனர் கோரஸாய்.

வேலைக்கு உணவுத் திட்டம் என்பது பொதுப்பணித்துறை மூலமாக நடைமுறைப் படுத்தப்பட்டு வருகின்றது. தஞ்சைக்கு இருபத்தியொரு கோடி ரூபாய், நாகைக்கு பதினைந்து கோடி ரூபாய், திருவாரூருக்கு பதிமூன்று கோடி ரூபாயென மாவட்ட வாரியாக நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது. இதன் பணிகள் பெரும்பகுதி நிறைவாகியுள் ளன. ஆனால், இத்திட்ட ஒதுக்கீட்டுத் தொகை யில் எழுபத்தைந்து சதவிகிதம் கூட, விவசா யத் தொழிலாளிகளுக்குப் போய்ச் சேரவில்லை எனக் கூறுகின்றனர் விவரம் அறிந்தவர்கள்.

"எங்கள் பகுதிக்கு (பட்டுக்கோட்டை) முப்பத்தியிரண்டு லட்ச ரூபாய் ஒதுக்கீடு செய்துள்ளனர். பெரும்பாலான திட்டப் பணிகள் முடிந்து விட்டன. பரவலாக இதன் மொத்த நிதி மதிப்பீட்டில் பத்து சதவிகிதம் மட்டுமே விவசாயத் தொழிலாளிகளுக்குப் போய்ச் சேருகிறது என்பது நெஞ்சைச் சுடும் நிஜம். உதாரணத்துக்கு, எங்கள் பகுதியின் காத்தான் ஓடை பராமரிப்புக்கு ரூபாய் எண்பத்தைந்தாயிரம் நிதி ஒதுக்கீடு. ஆனால் அந்த வேலைகளைச் செய்து முடிக்க பத்தாயிரம் ரூபாய்க்குள்தான் செலவாகி யுள்ளது. வேலைக்கு உணவுத் திட்ட நிதியில் ஆள்வோர், அதிகாரிகள், டெண்டர் எடுத்தவர் என்று பிரித்துக் கொண்டதுபோக, மீதி, பத்து சதவிகி நிதி மட்டும் ஏதோ போனால் போகிறதென்று தொழிலாளி



• வேலைக்கு உணவு திட்டத்தின் கீழ் வேலைக்குச் சென்று வரும் கூலிகள்!

• சி. பக்கிரிசாமி



களுக்கு வந்து சேருகிறது. இந்த உண்மைகளை புகார் மனு எழுதி, தஞ்சை மாவட்ட கலெக்டரிடம் தந்திருந்தேன். யார் மீதும் எவ்வித நடவடிக்கை எடுக்கப்படவில்லை." எனச் சொல்கிறார் பட்டுக் கோட்டையில் வசித்து வரும் சி. பக்கிரிசாமி. இவர் தஞ்சை மாவட்ட ஊராட்சி உறுப்பினராக உள்ளார்.

தஞ்சை மாவட்டத்தில் கடைமடைப் பகுதிகளாக அமைந்துள்ளன பட்டுக் கோட்டை, பேராவூரணி. நாகை மாவட்டத்தில் வேதாரண்யம், நாகப் பட்டினம், நன்னிலம், தரங்கம்பாடி, மயிலாடுதுறை, சீர்காழி ஆகியன. திருவாரூர் மாவட்டத்தில் திருத்துறைப்பூண்டி, திருவாரூர், முத்துப்பேட்டை, மன்னார்குடி. ஆகிய பகுதிகள் கடும் வறட்சியைச் சந்தித்துள்ளன. இங்குள்ள தொழிலாளிகள் மாற்று வேலைகளாக செங்கல் சூளை, கட்டிட வேலை போன்றவற்றுக்குச் சென்று வருகின்றனர். எந்த வேலையும் கிடைக்காதோர், வெளியூர், சென்றுவிட்டனர்.

பூதலூர் ஒன்றியத்தில் உய்யக்கொண்டான் ஆறு, கட்டணிக் கால்வாய் ஆகியன சீர் செய்யப்படாமல் இருக்கின்றன. சற்றே மேட்டுப் பகுதியான இங்கு, சரிவர சாகுபடி எதுவும் நடைபெறாததால் பூதலூர், ஆச்சாம்பட்டி, ஆலக்குடி, வீரமரசன் பேட்டை, செங்கிப்பட்டி போன்ற கிராமங்களிலிருந்து தொழிலாளிகள், வேலை தேடி வெளி மாவட்டங்களுக்குச் சென்றுள்ளனர்.

தண்டாங்கோயிலிலிருந்து பிரிந்து சென்று திருத்துறைப்பூண்டி வழியாக நடுத்திட்டு வாய்க்காலில் சேரும் முள்ளியாறு, கோட்டூரில் பிரிந்து தலைஞாயிறு வரை சென்றடையும் அடப்பாறு, கடைமடைப் பகுதியின் முக்கிய ஆறான அரிச்சந்திர நதி (நீடாமங்கலத்திலிருந்து பிரிந்து நாகை, திருவாரூர் மாவட்ட வழியாக வேட்டைக் காரன் இருப்பு பகுதியில் கடலில் சேருகிறது) ஆகியவை தூர் வாரப்பட வேண்டிய முக்கிய நதிகள் என அப்பகுதி விவசாயிகள் கூறுகின்றனர். "பண்ணைக்குட்டை வெட்டிக் கொள்வதற்கு நிதி அளிப்பது வறட்சி நிவாரணப் பணிகளில் ஒன்றாகும். இதற்கு அங்கீகாரம் தரும் தாசில்தாராக அந்தந்தப் பகுதியின் ஆளுங்கட்சி ஒன்றியச் செயலாளர்களே செயல்பட்டு வருகின்றனர்'' என்று குற்றம் சாட்டுகிறார் திருத்துறைப் பூண்டி சட்டமன்ற உறுப்பினர் ஜி. பழனிச்சாமி.

"தஞ்சை, நாகை, திருவாரூர் மாவட்டங்களின் பத்து லட்சம் விவசாயத் தொழிலாளிகளில், சுமார் ஒரு லட்சம் பேராவது வெளி மாவட்டங்களுக்குச் சென்றிருக்கலாம் என எண்ணுகிறோம். காவிரி டெல்டா மாவட்டங்களைப் பொறுத்தவரைக்கும் இது செயற்கையாய் உருவாக்கப்பட்ட வறட்சி. மேட்டூர் அணையில் போதுமான அளவு நீர் இருப்பு இல்லாததால், சென்ற ஆண்டு அணை, குறிப்பிட்ட நாட்களுக்குத் திறந்து விடப்படவில்லை. காவிரி நடுவர் மன்ற தீர்ப்பின்படி இருநூற்றி ஐந்து டிஎம்சி தண்ணீரை கர்நாடகம் தமிழகத்துக்குத் தந்திருந்தால் இந்த நிலை வந்திருக்காது. இதுபோன்ற பற்றாக்குறைக் காலங்களில் இரு மாநிலங்களும் எந்த விகிதத்தில் தண்ணீரைப் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்கிற வழிகாட்டுதல் நெறிமுறையை, காவிரி நடுவர் மன்றம் வகுத்துத் தந்துள்ளது. இதனையும் கர்நாடகம் நிறை வேற்றவில்லை. இந்த இரண்டு விஷயங்களிலும் கர்நாடகாவை எதிர் கொண்ட தமிழக அரசின் அணுகுமுறை ஆக்கபூர்வமாக இல்லை. எப்பொழுதும் கர்நாடகா தமிழக காவிரி பாசனப் பகுதியினை ஒரு வடிகால் பிரதேசமாகவே கருதி செயல்பட்டு வருகிறது. இந்த ஆண்டு ஏற்பட்டுள்ள வறட்சிக்கு தமிழகம், கர்நாடக மாநில அரசுகள் மற்றும் மத்திய அரசின் முரண்பட்ட போக்கே முக்கிய காரணம்'' என்கிறார் தமிழ் மாநில விவசாயத் தொழிலாளர் சங்கத்தின் மாநில பொதுச் செயலாளர் இரா. முத்தரசன்.

கட்டுரை, படங்கள் :
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

6

# ஜீவநதி

பிரபஞ்சன்

காட்சி : 21
பகல் / பாங்க் அலுவலகம்.
பாத்திரங்கள்: கண்ணன், சேது, மானேஜர்.

ஆட்டோவை ஓரமாக நிறுத்தி கண்ணனும், சேதுவும் வங்கிக்குள் நுழைகிறார்கள். மானேஜர் என்று போட்டிருக்கும் அறைக்குள் நுழைகிறார்கள். நேரம் சரியாகப் பதினொன்று. மானேஜர் நடுவயதுக்காரர். கடுகடுத்த முகம் இல்லை என்பது ஆறுதல்.

**சேது:** வணக்கம் சார். என் பெயர் சேது. வரச் சொல்லி இருந்தீங்களே... இவர் என் ஃபிரண்ட். கண்ணன்.

**மானேஜர்:** எஸ்... உக்காருங்க... ஆட்டோ லோன் விஷயம்தானே?

**சேது:** ஆமாம் சார்.

**மானேஜர்:** இவர்?

**கண்ணன்:** நான் கண்ணன். இவனோட பால்ய கால சினேகிதன். நான் ஷ்யூரிட்டி தர்றேன்... சார். ஒரு கேள்வி. இவனுக்கு நான் இருக்கேன். தர்றேன். இல்லாதவங்களுக்கு?

**மானேஜர்:** நியாயம்தான். ஆனா, எங்களுக்கு சில பொறுப்பு இருக்கு, கண்ணன். மக்கள் பணத்தை 'டீல்' பண்றோம். கொடுத்த கடன், பத்திரமா திரும்பி வரும்கிறதுக்கு உத்திரவாதம் வேணுமில்லையா?

**கண்ணன்:** நீங்க கொடுத்த பணம் எல்லாம் சரியான உத்திரவாதத்து மேலத்தான் கொடுக்கப்பட்டிருக்குன்னு சொல்றீங்களா?

**மானேஜர்:** சில வேளைகள்லே இந்த விதி மீறப்பட்டிருக்கலாம். பெரும்பாலும், இதுதான் விதி.

**கண்ணன்:** உங்க பாங்க்கே கொஞ்ச காலத்துக்கு முன்னே முழுகப் போகுதுன்னு பேச்சு அடிபட்டதே, எப்படி?!

**மானேஜர்:** பல ஆயிரம் கோடி கடன் வெளியில தங்கிடுச்சு. இப்ப நிலைமையைச் சீர் பண்ணிட்டோம்.

**கண்ணன்:** சார், தப்பா இருந்தா மன்னிக்கணும்... நூறு, ஆயிரம்னு கடன் வாங்கிற ஏழைகள், நாணயமா பணத்தைத் திரும்பக் கொடுத்திடறாங்க சார். கடன் வாங்கிறதும், வாங்கினதைக் கொடுக்காமே இருக்கிறதும் பாவம்னு நினைக்கிறவங்க, நாம. ஏமாத்தறவங்க பெரும்பாலும் பணக்காரங்க. நீங்க, ஐ மீன் பேங்க், பணக்காரங்ககிட்ட ஏமாறத் தயாரா இருக்கு. ஆனால், நாணயமான ஏழையை நம்பத் தயாரா இல்லை.

(இடையிடையே மானேஜர் ஃபோன் பேசுகிறார். வருகிறவர்களுக்கு கையெழுத்து போட்டுக் கொடுக்கிறார்)

(மானேஜர் சிரிக்கிறார்.)

**மானேஜர்:** நீங்க சொல்றது உண்மைதான், கண்ணன். தப்பு, எல்லா மட்டத்திலும். எல்லா

# தொலைக்காட்சித் தொடர்



நிலையிலும் நடக்கத்தான் செய்யுது. தவறுகளிலிருந்து நாங்களும் பாடம் படிக்கிறோம். யாருக்குத் தரலாம், யாருக்குத் தரக் கூடாதுன்னு. தெளிவான விதி இருக்கு. காய்கறி, மீன் கடை, பெட்டிக் கடைக் காரங்க மாதிரி நாணயஸ்தர்கள், பணக்காரர்களிடையே இல்லை. சரி. நாம் விஷயத்துக்கு வருவோம். சேதுவுக்கு நானே என் சொந்தப் பொறுப்பில் தரலாம். நீங்க வந்து இருக்கலைன்னாலும், அவருக்கு 'லோன்' கிடைக்கும். அவர் திருப்பி அடைக்கலைன்னா, நான் பதில் சொல்ல வேண்டியவன் ஆயிருவேன். உங்க ஷ்யூரிட்டி எனக்காக இல்லை; இந்த வங்கிக்காக. அவர் கடனை அடைக்கலைன்னா, நீங்களும் பாதிக்கப்படுவீங்கன்னு அவருக்குத் தெரியணும்...

**சேது:** அந்த தப்பு நடக்காது சார். நான் ஒழுங்கா கடனையும், வட்டியையும் கட்டிடுவேன்....

*(தலையசைத்தபடி)*

**மானேஜர்:** நாம் நல்லதையே நினைப்போம். நீங்க எங்க வேலை செய்யறீங்க. கண்ணன்?

**கண்ணன்:** ஹோம் லேண்ட் கம்பெனியில சார்.

**மானேஜர்:** அவங்களும் நம்ம பேங்க் கஸ்டமர்தான்... காலண்டரைப் பார்க்கிறார்...

அடுத்த செவ்வாய்க்கிழமை வரணும். கண்ணன் நீங்க, 'பே சர்ட்டிபிகேட்' கொண்டு வரணும். இங்க, ஒரு கையெழுத்துப் போடணும்...

**கண்ணன்:** போடலாம், சார்.

**மானேஜர்:** ஓ.கே. ஆல் தி பெஸ்ட்.

*(இருவரோடும் கை குலுக்குகிறார். இருவரும் வெளியே வருகிறார்கள். வெளியே வந்தவுடன்)*

**சேது:** இப்படி சில பேர் இருக்கிறதால தான், நாடு பிழைச்சுக்கிட்டு இருக்கு.

**காட்சி : 22**

**பகலிரவு தெரியாத ஏ.சி. அறை / கம்பெனியின் முக்கியஸ்தர்கள் 4 அல்லது 6 பேர். பாதி பெண்கள் உரையாடுகிறார்கள். அவர்களுடன் கண்ணன் இருக்கிறான், அம்சா இருக்கிறாள்.**

*வட்டமேஜை, தலைமை தாங்குபவள் போல, ஸ்மிதா இந்திரேசன் அமர்ந்திருக்கிறாள். சுமார் 35 - 40 வயது. ஒப்பனை சற்றுத் தூக்கலாக இருக்கிறது. நல்ல தன்மையைக் காட்டும் முகம். காட்சி துவங்குகிறது.*

**ஆண் 1 :** சிவப்பழகு தரும் கிரீம்னுதான் எல்லாரும் விளம்பரம் பண்றாங்க. நாம வேற மாதிரி செய்யலாம்.

**ஸ்மிதா:** எப்படி?

**ஆண் 1 :** ஆறு மாசத்தில் சிவப்பு. கறுப்பெல்லாம் சிவப்பு.

**பெண் 1 :** நம்புவாங்களா? முடியுமா? நம்ம கம்பெனி கிரீமை நான் பயன்படுத்தி இருக்கேன். நான் அப்படியேதான் இருக்கேன்.

**பெண் 2:** நம் சோப்பை போட்டா, சினிமா நட்சத்திரங்கள் மாதிரி ஆகலாம்னு சொன்னோம். யாராவது ஆகியிருக்காங்களா? சினிமா நடிகைகள்தான், நம்ம சோப்பை உபயோகிக்கிறார்களா?

**அம்சா:** நானும் நம்ம கம்பெனி சோப்பைத்தான் பத்து வருஷமா யூஸ் பண்றேன். அலுப்பு வந்துடுச்சு. அழகும் வரல்லை. மண்ணாங்கட்டியும் வரலை. பொய் எடுபடாது மேடம். நாம், வாங்கி விற்கிற பார்ட்டிதான். உருவாக்குகிற பார்ட்டி இல்லை. எதுக்கு பொய்யும் புளுகும்?

*(ஸ்மிதா சிரிக்கிறாள்)*

**ஸ்மிதா:** சரி. என்ன செய்யலாம்? கம்பெனி அறம் எந்த அளவுக்கு அனுமதிக்குதோ, அந்த அளவுக்கு பொய் சொல்லித் தானே பொருளை விக்க வேண்டி இருக்கு... அவங்க, நம்மை நம்பி, விளம்பரப் பொறுப்பை நம்மகிட்ட விட்டிருக்காங்க. நாம ஏதாவது செய்யணுமே. என்ன, கண்ணன், உங்களுக்கு ஒன்றும் தோணலையா?

**கண்ணன்:** மேடம். கறுப்புத் தோலும், பழுப்புத் தோலும்தான், நம் உடம்போட நிறம் எதுக்கு சிவப்பா மாறணும்? மாற முடியுமா? அவசியம் என்ன? நம்ம சிந்தனையே அடிமைப் புத்தியா எத்தனைக் காலம் இருக்கிறது? நம்மை ஆட்சி செய்தவங்க வெள்ளைக்காரங்கன்னா, நாம் வெள்ளையாவும், சிவப்பாவும் என்னத்துக்காக மாறணும்?

**அம்சா:** ஏம்பா. நீ கறுப்புப் பெண்ணைக் கட்டிக்குவியா?

*(சிரிப்பு)*










— சீர்காழி ரேவதி

**கண்ணன்:** கறுப்பு என்கிறதுக்காக ஒரு பெண்ணை நான் மறுக்க மாட்டேன்.

**ஸ்மிதா:** சரி. என்ன விளம்பரம், எப் படிப் பண்ணலாம்னு சொல்லுங்க.

**கண்ணன்:** சோப் குளியலோட சம்பந் தம் உடையது. குளியல் சுத்தத்தோட சம்பந் தம் கொண்டது. அதனால, சுத்தம்கிற கருத்தை இணைச்சு, 'சுத்தம் தரும், சுகம் தரும், வாழ்க்கைக்குச் சுகந்தம் தரும்' மாதிரி விளம்பரம் பண்ணலாம்.

**ஆண் 2:** மேடம், யாராவது மாடலைக் குளிக்க வச்சிடலாம். விஷுவலாக, ரொம்ப கேட்சிங்காக இருக்கும்.

**கண்ணன்:** பெண்கள் குளிக்கட்டும். நாகரிகம் அனுமதிக்கிற உடையோட. அது போல, ஆண்களும் குழந்தைகளும் குளிக் கணும். நம்ம விளம்பரங்கள்ல, எத்தனைக் காலம் பெண்ணே குளிச்சுகிட்டு இருப்பா?

**ஸ்மிதா:** எப்படியும், அந்த கிரீமை விற்றே ஆகணும். அந்த விளம்பரத்துக்கு ஏற்ற சந்தர்ப்பம், கேட்சிங்கா வார்த்தைகள் கண்டுபிடிங்க...

*(காட்சி முடிகிறது)*

**காட்சி : 23**

**பகல் / தெரு மற்றும் வீடு - வீட்டின் தெருப்பக்கம்**

*பாத்திரங்கள்* : **கண்ணன், சேது, புரோக்கர் துரைசாமி, வீட்டு உரிமையா ளர்கள் - பெரியவரும், பெண்மணியும், ரேணுகா**

*ரேணுகாவுக்காக வீடு தேடி அலைகிறார் கள் கண்ணனும், சேதுவும். புரோக்கர் துரைசாமி, பல இடங்களை அவர்களுக்குக் காட்டுகிறார். மத்தியதர மக்கள் வாழும் பகுதி எனத் தெரிகிறது. சின்ன கேட்டைத் திறந்து கொண்டு முதலில் துரைசாமி, கண்ணன், சேது, வீட்டுக்குள் நுழைகிறார்கள். சின்னத் தோட்டம். தோட்டத்தின் முடிவில் வாசலில் சுமார் அறுபது வயதுப் பெரியவர், சாய்வு நாற்காலியில், 'இந்து' பத்திரிகையைப் பிரித்துப் படித்துக் கொண்டிருக்கிறார்.*

**துரைசாமி** : நமஸ்காரம் சார். மாடிப் போர்ஷனுக்கு பார்ட்டியை அழைச்சு வந்திருக்கேன்.

*பெரியவர், வந்தவர்களைக் கூர்ந்து கவனிக்கிறார்.*

**பெரியவர்** : நீங்கள்ளாம் யாரு, தெரிய லையே.

**கண்ணன்** : எப்படித் தெரியும்? நாங்க புகழ்பெற்ற, பெரிய மனுஷங்க இல்லையே சார். என் பேர் கண்ணன். ஒரு விளம்பரக் கம்பெனியில வேலை. இவர் சேது, ஆட்டோ ஓட்டுநர்.

**பெரியவர்:** யாருக்கு வீடு?

**சேது** : எங்க அக்காவுக்கு.

**பெரியவர்:** எத்தனை பேர் பெரியவங்க? குழந்தைகள் எத்தனை?

**சேது:** தனி மனுஷி. அவங்க ஒருத்தர் தான் இங்க இருப்பாங்க.

**பெரியவர்** : தனி அப்படீன்னா? கல்யா



''உங்க பொண்ணை தங்கத் தாம் பாளத்துல வச்சி, தாங்க வேண்டியது எங்க பொறுப்பு!''

''ரொம்ப நன்றிங்க சம்பந்தி!''

''நன்றி கிடக்கட்டும்; வரதட் சணைப் பணத்தோட தங்கத் தாம் பாளம் ஒண்ணு வாங்கிக் கொடுத் துடுங்க!''

- நெய்வேலி அ. கௌஞ்சி

ணம்?

**சேது** : பண்ணிக்கலை. பண்ணிக்க விரும்பலை.

**பெரியவர்** : *(அதிர்ச்சியுடன்)* ஏன்?

**கண்ணன்** : நல்ல மனுஷன் கிடைக்க வில்லையாம். கெடைச்சா, கல்யாணம் பண்ணிக்குவாங்களா இருக்கும்.

**பெரியவர்** : அப்போ, தனியா இருக் குமா அந்தப் பொண்ணு? நீங்க எல்லாம் வந்து வந்து போவீங்களாக்கும்.

**சேது** : ஆமா.

**பெரியவர்** : அது சரிப்படாது. தனி பொம்பளைக்கு வீடு தரமுடியாது.

**கண்ணன்** : தனி ஆம்பிளைக்கு தருவீங்களா?

## செருப்புக்குக் காவல்!

படத்தில் நீங்கள் பார்க்கும் இரண்டு போலீஸ்காரர்களும் கண்கொத்திப் பாம்பாய் காவல் காக்கும் வஸ்து என்ன தெரிகிறதா? செருப்பு. ஆமாம்



அதேதான். காவல் காக்க காரணம் இருக்கிறது. இந்த செருப்பு சாதாரண செருப்பில்லை. அதன் மதிப்பு ஏழு கோடி ரூபாய். லண்டனின் ஹாரோட்ஸ் ஸ்டோரில் விலைக்கு வைக்கப்பட்டிருக்கும் இந்த செருப்புக்கு ஒரு டிசைனர் வேறு! ஸ்டூவர்ட் வெயிட்ஸ்மேன் என்கிற பிரபல டிசைனர் வடிவமைத்த ஜொலிக்கும் செருப்பு இது. பிளாட்டினத்தில் நெய்யப்பட்ட இந்த 'மகாகனம்' பொருந்திய செருப்பில் 120 காரட் மதிப்புள்ள 642 மாணிக்கங்கள் பதிக்கப்பட்டுள்ளன.

இதை வாங்கப்போகும் பெண்மணி யார் என்று லண்டனே ஆவலாய் செருப்பு மேல் விழி வைத்தபடி பார்த்துக் கொண்டிருக்கிறது. அந்தப் பெண்மணி, யார் என்ன வம்பு செய்தாலும் அதைக் கழட்டி அடிக்கமாட்டார் என்பது நிச்சயம்!

— ஆனந்த்

*(பெரியவர் கோபமாகப் பார்க்கிறார்...)*

*காட்சி மாறுகிறது. ஒரு மத்திய வயது பெண்மணி. அவளுக்கு முன்னால், தரகர், கண்ணன், சேது மூவரும் நிற்கிறார்கள்.*

**பெண்மணி** : எங்க வேலை செய்யறாங்க அந்த அம்மா? தனியா எதுக்கு இருக்கணுமாம்?

**சேது** : பிரைவேட் கம்பெனியில...

**பெண்மணி** : பிரைவேட்டுன்னா? என்ன பேரு?

**கண்ணன்** : *(குறும்புடன்)* மன்னார் அன் கம்பெனி.

*(தரகர் விழிக்கிறார்)*

**சேது** : *(குறும்புடன்)* தங்கவேலுதான் கம்பெனி சேர்மன்.

**பெண்மணி** : ஓகோ.. என்ன விக்கிற கம்பெனி?

**சேது** : வாங்கற கம்பெனி.

**கண்ணன்** : பழம் புடைவைகளை வாங்கி, அலுமினியப் பாத்திரம் கொடுக்கிற கம்பெனி.

**சேது** : பேரிச்சம்பழம்கூடக் கொடுப்பாங்க.

**பெண்மணி** : என்னது?

**கண்ணன்** : மூட்டைக் கணக்குல பேரிச்சம்பழம், மரவள்ளிக் கிழங்கு, தக்காளி விக்கிற கம்பெனி.

**பெண்மணி** : என்னமோ. தனி பொம்பளைக்கு வீடு கொடுக்க முடியாதுப்பா.

*காட்சி மாறுகிறது. ரேணுகாவும், கண்ணனும் சேதுவும் ஒரு மொட்டை மாடியில் நிற்கிறார்கள்.*

**ரேணுகா** : *(சிரித்தபடி...)* ஸோ... வீடு தேடப் போய், தமாஷ் பண்ணிட்டு வர்றீங்க.. பரவாயில்லை, நமக்கு வேண்டிய 'மேடம்' ஒருத்தர், போர்ஷன் தர்றதா சொல்லி இருக்காங்க. கிடக்கட்டும்... ஏன், தனி பொம்பளைக்கு வீடு தர மறுக்கிறாங்க?

**கண்ணன்** : தனி மனுஷியைக் குடும்பமா ஒப்புக்க முடியாமேதான். கணவன் மனைவி குழந்தைகள்னு இருந்தாதான் குடும்பம். தனி மனுஷி குடும்பமாக முடியாதுன்னு நினைக்கிறாங்க.

**ரேணுகா** : தனி ஆம்பிளை மட்டும் குடும்பமா?

**சேது** : வேறு ஒண்ணும் இல்லை. எங்களை மாதிரி மனசுக்கு ஒவ்வாதவனைக் கட்டிக்கிட்டு, ரெண்டு மூணு குழந்தைகளைப் பெத்துக்கிட்டு, கஷ்டப்படு. நாங்க உன்னை ஏத்துக்கிறோம்னு சமூகம் சொல்லுது. உங்களை மாதிரி தனியா, பிக்கல் பிடுங்கல் இல்லாமே வாழுறது அவங்களுக்குப் பொறாமையா இருக்கும் போல....

**ரேணுகா** : அடக் கஷ்டமே. என்னைப் பார்த்துக் கூட பொறாமைப் பட ஆளுங்க இருக்காங்களே....

— தொடரும்

● ஆர்.அப்துல் கலாம், திருச்சி □

***? '356 பாம்பு என்றால், 234 என்ற கிரிப் பிள்ளை முதலமைச்சர் ஜெயலலிதாவிடம் இருக்கிறது' என்று சட்டசபையில் எதிர்க் கட்சிகளுக்கு அமைச்சர் வளர்மதி சவால் விடுத்துள்ளது எதைக் காட்டுகிறது?***

! மோடி மஸ்தான் அரசியலில் வளர்மதி எக்கச்சக்கமாய் மாட்டிக் கொண்டு விழிப்பதை.

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

***2005ல் பா.ஜனதாவும் அ.தி.மு.க.வும் கூட்டணி அமைத்து பாராளுமன்றத் தேர்தலில் போட்டியிட வேண்டும் என்ற நடிகர் எஸ்.வி. சேகரின் ஆசை நிறைவேறுமா..?***

! 'அல்வா' கொடுத்து, 'காதுல பூ' சூட்டி, 'கண்ணாமூச்சி' ஆட 'வால் பையனு'க்குக் கற்றுத் தரவா வேண்டும்?

● எஸ்.தியாகராஜன், ஸ்ரீரங்கம்

***? பாரதியாரின் பாடல் வரியை தலையங்கத்துக்குக் கீழே போடுவதை விட மேலே போட்டால் சிறப்பாக இருக்குமே!***

! அந்த வரிகளின் பொருள் எமக்கு அஸ்திவாரம்.

● என். பாலகிருஷ்ணன், மதுரை

***? 'போதும் என்ற மனம்' சிலருக்கு வருவதில்லையே, ஏன்?***

! அதானே, தற்கொலை வரை கொண்டு விடுகிறதே! காரணம் ஒருவேளை, மீட்டர் அல்லது கந்து வட்டிக்காரர்களுக்குத் தெரிந்திருக்கலாம்!

● பி.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

***ஒரு செய்தியை பத்திரிகையில் படிப்பது, ரேடியோவில் கேட்பது, டீ.வி.யில் பார்த்துக் கொண்டே கேட்பது - எது சுவாரசியமானதுங்க?***

! பத்திரிகையில் செய்தியைப் படித்து விட்டு, பக்கத்திலிருப்பவரிடம் விவாதிப்பதில் இருக்கற சுவாரஸ்யமே அலாதிங்க. பக்கத்தில் யாரு மில்லாவிட்டாலும், நமக்கு நாமே யோசிச்சுப் பாக்கலாமுங்க. டீ.வி. அல்லது ரேடியோ நம்மை எங்கே சிந்திக்க விடுது? அடுத்தடுத்து அவசர அவசரமா, செய்திகளைத் திணிக்குதே!



* இம்சை

★ ரூ.50/- பரிசு பெறுபவர் : சுப்பாமி முத்தையா, வெற்றியாலங்குளம், வேலாயுதபட்டணம் (அஞ்சல்), பெரியகாரை (வழி), சிவகங்கை.

● டி. சுப்பிரமணியன், மேலையூர்

***? வாசகர் கேள்விகளுக்குப் பதில் சொல்லிச் சொல்லி போரடிக்கவே இல்லையா உமக்கு?***

! கேள்வி கேக்கற உங்களுக்கே போரடிக்காத போது, எனக்கு மட்டும் எப்படி?

● வசீகரன்,சென்னை

***? தலையெழுத்தின் மீது நம்பிக்கை உண்டா?***

! 'மாமயிலோன் கால் பட்டு அழிந்தது இங்கு

□ ரூ.100/- பரிசு பெறுபவர் : ஆர்.அப்துல் சலாம், ஏ37, மேடம் கியூரி தெரு, சேஷாமி நகர், கே.கே. நகர், திருச்சி.

என் தலைமேல் அயன் கையெழுத்தே' என்பதில் நம்பிக்கை உண்டு. (நன்றி : அருணகிரி நாதர்)

● கே.முரளிதரன், மதுரை

*? அமெரிக்காவில் செருப்பில் விநாயகர் படம் அச்சிட்டு விற்பனை செய்யப்படுவது பற்றி?*

! அடுத்தவர் நம்பிக்கைகளை அவமதிப்பதும், அடாவடியாய்ச் சண்டையிடுவதும் பணம், பலம், படைத்தவர் சுபாவம். அத்தகைய 'அமெரிக்கை'யான விஷயங்கள் இங்கேயும் நிறைய உண்டே!

● கா.மு.ஜக்கரியா, எலந்தங்குடி

*? சார்ஸ், பொடா - இரண்டிற்குமுள்ள ஒற்றுமை, வேற்றுமை என்ன?*

! இரண்டுமே அசந்தர்ப்பமாகத் தாக்கும். ஒன்றுக்கு முதல்வரே மருந்தைச் சொல்லுவார். மற்றொன்றுக்கு மருந்து இருந்தாலும் தரமாட்டார்.

● சுப்பாயி முத்தையா, வெற்றியாலங்குளம் ★

*? அமெரிக்க அண்ணாச்சி, ஈராக்*

# ஜெ.விடம் கீரிப்பிள்ளை இருக்கிறதாமே?



● கீரியும்...



● ... பாம்பும்!



● கற்கவா வேண்டும்?

நாட்டை ஆக்கிரமிப்பு செய்தாச்சு, ஓங்கி ஒலித்த எதிர்ப்புக் குரல் ஒடுங்கியே போயாச்சு. அடுத்து என்னாகும், சொல்லுங்க நீங்களாச்சும்...?*

! வரப் போவது - இடைக்கால பொம்மை ஆட்சி. கப்பலேறப் போவது ஈராக் எண்ணெய்க் கிணறுகள். வேடிக்கை பார்க்க விருப்பது - ஐ.நா.சபை.

● எஸ்.ராஜமழை, சின்னமனூர்

*? நடிகர் சிலம்பரசனுக்கு நடிப்பு வருகிறதா தராசுஜீ?*

! வருகிறது. ஆனால், அது அவரது அப்பா வழியில், ரஜினி ஸ்டைலில் வருவது தான் இம்சையாக இருக்கிறது. சொந்தமாக ஏதாவது தேறினால் புண்ணியமாகப் போகும்!

● சிவ. இராமலிங்கம், ஆத்தூர்

*? 'சந்தோஷம்' - பணம் சம்பந்தப்பட்டதா? இல்லை, மனம் சம்பந்தப்பட்டதா?*

! மாதத்தின் முதல் வாரம் முன்னது. அடுத்த மூன்று வாரங்கள். இரண்டாவது.

● சுதா, பொள்ளாச்சி

*? உழைப்பை மட்டும் வைத்துக் கொண்டு முன்னேற முடியுமா?*

! முடியும். அத்துடன் புத்தி சாதுர்யமும் சேர்ந்தால் வேகமாக முன்னேற முடியும்.

● எம்.இராசேந்திரன், சென்னை

*? தராசாரே! அக்ஷய திருதியைக்குப் புதுசா ஏதும் நகை வாங்கினீரா?*

! அக்ஷய திருதியையன்று, செய்யப்படும் காரியங்கள் விருத்தி பெறும் என்பது நம்பிக்கை. தானம் செய்தால் புண்ணியம் விருத்தியாகும். பூஜை செய்தால் பலன் விருத்தியாகும். உழவு செய்தால் தானியம் விருத்தியாகும். மஞ்சள், மலர்கள், காய்கனி என மங்களமாக எது வாங்கினாலும், மங்களம் பெருகும்தான். அதை விட்டுவிட்டு, நகை வாங்க எல்லோரும் புறப்பட்டால் தங்கத்தின் விலைதான் விருத்தியாகும்.

● எஸ்.சுவாமிநாதன், மன்னார்குடி

*? தீர்க்க முடியாத கடன் எது?*

'வளர்த்த' கடன்தான்!

பட்டறையை அடைக்க பதினொரு மணிக்கு மேலாகி விட்டது. பொன்னையா ஒரு வித அயர்ச்சியுடன்தான் நடைபோட்டார். வேலை மும்முரமாக இருந்தால் முகூர்த்த சமயங்களில் பட்டறையை அடைக்க பன்னிரண்டு மணி ஆகும். சில நேரம் விடிய விடியக் கூட வேலை நடக்கும். நகைப் பட்டறையில் வேலை பார்க்கும் இளவட்டங்கள், டேப்பில் பாட்டை அலற விட்டு ஜாலியாக வேலை பார்த்துக் கொண்டு இருப்பார்கள். இன்று கதை வேறு... வேலையின் காரணத்தினால் பட்டறை தாமதமாக அடைக்கப்படவில்லை. வேறு காரணம்... உயிரை வதைக்கும் காரணம்.

இரண்டு நாட்களுக்கு முன் பட்டறையில் ஐந்நூறு கிராம் நகைக் கட்டி திருடப்பட்டு விட்டது. பட்டறை இருப்பது ஒரு பழைய ஓட்டு வீட்டில்... ஓட்டைப் பிரித்து எவனோ உள்ளே இறங்கி மேஜைப் பெட்டியை உடைத்து, தங்கக் கட்டியை எடுத்துப் போய் விட்டான். காலையில் பட்டறையைத் திறந்த போது அதிர்ச்சி தான் காத்து இருந்தது. உடனே முதலாளி சண்முகத்துக்கு போன் அடித்தனர்.

சண்முகம் வந்ததும், போலீஸுக்குத் தகவல் சொன்னார்கள். போலீஸ் வந்து பார்த்தது, விசாரித்தது. இரண்டு நாளாகியும் எந்தத் துப்பும் கிடைக்கவில்லை. ஆனால் இரண்டு நாட்களுக்குள் போலீஸ் வழியில் ஆயிரம் ரூபாய்க்கு மேல் செலவானது தான் மிச்சம்.

ஐந்நூறு கிராம் தங்கத்தின் விலை இன்றைய தேதிக்கு கிட்டத்தட்ட இரண்டு லட்சத்துக்கு மேல். எல்லாம் கல்யாண ஆர்டர்களாக உள்ளது. எல்லாவற்றையும் செய்து பத்து நாளில் டெலிவரி செய்தாக வேண்டும்.

# இது வேறு உலகம்

**யோகி**

"அண்ணே... வீட்டுல அம்மாவோட நகையை எடுத்துக்கலாம்னு நினைக்கிறேன். அம்மாட்ட கேட்டேன்... சங்கடமா இருந்தது. கஷ்டத்துல உதவத் தான்ப்பா நகை... அழகு பார்க்க இல்லன்னாங்க" என்றான் சண்முகம் பொன்னையாவிடம்.

"அம்மா நகை பன்னிரண்டரை பவுன் இருக்கும்ணே... அது போக – வண்டியையும் வித்துடலாம்னு இருக்கேன்... இருபது ரூபாய்க்குப் போகும்... பட்டறைக்கு நடந்து வந்தா காலா தேய்ஞ்சு போகும்?" என்றான். "மிச்சத்துக்கு என்ன பண்றது?" என்று யோசித்தான். முன்னாடி கம்பெனில வேலை பார்த்தப்ப மிச்சம் பண்ணின பணத்தை ஃபிக்சட் டெபாசிட்ல போட்டு இருந்தேன். அதை எடுத்துடலாம். ஆனா வட்டி கட்டணும். நம்ம காசுக்கு நாமளே வட்டி கட்டணும்" என்றான்.

வீட்டிற்கு வந்தார் பொன்னையா. நள்ளிரவு. காமாட்சி சாப்பாடு எடுத்து வைத்தாள். சாப்பிட்டுக் கொண்டு இருந்தவர், தற்செயலாய் நிமிர்ந்து பார்த்தார். அதுவும் ஓட்டு வீடு தான். நிமிர்ந்து ஓட்டையே பார்த்துக் கொண்டிருந்தவருக்குச் சட்டென்று பொறி தட்டியது.

ஓட்டைப் பிரித்து தங்கத்தைக் களவாடியவன், பக்கத்துப் பட்டறைக்கெல்லாம் போகாமல், தங்கள் பட்டறைக்குள் மட்டும் ஏன் இறங்கினான்? தங்களின் பட்டறையைப் பற்றி நன்றாக அறிந்தவனின் வேலை தான் இது. ஒரு வேளை அப்படியும் இருக்குமோ... ஆயுத பூஜைக்கு ஓட்டைப் பிரித்து வேலை பார்த்த போது, அவர்களில் ஒருவன் ஜெயிலில் இருந்து வந்ததாக இன்னொருவனிடம் சொன்னான். அவர்கள் பேசிக் கொள்வதைப் பொன்னையன் தற்செயலாய்க் கேட்டார். பிறகு மறந்தே போனார்.

ஒரு வேளை அவனே திருடியுமிருக்கலாமே. காலையில் முதல் வேலையாக, ஓடு வேலை பார்த்தவனைப் பிடிக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டார்.

முதலாளியின் வீட்டுக்கு வந்தபோது – பெரியவரின் சம்சாரம் இருந்தார்கள். பெரியவர் இறந்த போது வீட்டுக்கு வந்தது– அப்புறம் வரவேயில்லை... 'வாங்கண்ணே' என்று அழைத்தான். எப்போதும் கழுத்தில், காதில் நகைகள் ஜிலுஜிலு என்று மின்னும்.



இப்போது எதையும் காணோம். எல்லாவற்றையும் சண்முகம் வாங்கியிருக்கக் கூடும்..! திருடப்பட்ட தங்கத்துக்கு ஈடு செய்ய.

"என்ன அண்ணே... அதுக்குள்ள வீட்டுக்கே வந்துட்டீங்க... காபி குடிங்க... அம்மா, பொன்னையண்ணே வந்திருக்கு, காப்பி கொடுங்க" என்றான் சண்முகம்.

"அதெல்லாம் வேணாம்ப்பா... எனக்கு ஒரு பிடிமானம் கிடைச்சிருக்கு. எவன் திருடினான்னு... அது எந்தளவுக்குச் சரின்னு தெரியல. நம்ம பட்டறையை ஒட்டி நாலு பட்டறை இருக்கு... நாலும் நம்ள மாதிரி, ஓடு போட்டதுதான். ஆனா அங்க எல்லாம் ஒண்ணும் எடுக்காம, நம்ம பட்டறையில் மட்டும் ஏன் கை வைச்சிருக்கான்? வந்தவனுக்கு நம்ம பட்டறையைப் பத்தி நல்லா தெரிஞ்சிருக்கணும்... நம்ம பட்டறைக்கு யாரும் அனாவசியமான வர்றது இல்லை. வரவும் நாம அனுமதிக்கிறதில்ல... அப்படி இருக்கும் போது, குறிப்பா நம்ம பட்டறைல திருட்டு எப்படிப் போகும்? நான் நெனைக்கிறேன், ஆயுத பூஜைக்கு ஓடு மாத்தினோம்ல... அப்பத்தான் எவனோ மோப்பம் பிடிச்சிருக்கான்."

"அப்ப ஓட்டை செம்ம பண்ண வந்தவன்தான் தங்கத்தை எடுத்திருப்பான்னு சொல்றீங்களா...?"

"ஆமாம் தம்பி... மராமத்து வேலை பார்க்கும்போது, ரெண்டு பேருல ஒருத்தன் பேசினதை நான் கேட்டேன். "ஜெயில்ல இருந்துட்டு இப்பதான் வந்ததா... என்ன தப்பு பண்ணிட்டு உள்ளப் போனானோ... இப்பவே நாம போய் அவனைப் பார்க்கிறோம் – இல்ல போலீஸ்ல போய்ச் சொல்லலாம்."

"போலீஸுக்கு இப்ப போக வேணாம்– போனா 'நீ போலீஸா, நா போலீஸா'ன்னு கேட்டு சண்டைக்கு வருவாங்க. அவன்தான் திருடினான்னு உறுதியா தெரிஞ்சா போலீஸ்ல சொல்லலாம். போலீஸ் இல்லாம நாம பொருளை வாங்க முடியாது..." என்றான்.

"வண்டில ஏறுங்க... போயிட்டு வந்துடுவோம்" என்றான். வண்டியைக் கிளப்பினான்.

"அண்ணே... மராமத்து பார்த்தவன் வீடு எங்கே?"

"ராஜா தியேட்டர் பக்கத்துல!" ஐந்து நிமிஷத்தில் ராஜா தியேட்டரைத் தொட்

டார்கள்.

தியேட்டரை ஒட்டி இருந்த பெட்டிக் கடைக்காரரிடம் போய் விசாரித்தார் பொன்னையா. சண்முகம் வண்டியை நிறுத்தி விட்டு வந்தான்.

பெட்டிக் கடையை ஒட்டி ஒரு சின்ன சந்து இருந்தது. அந்த சந்தைக் காட்டி, "இந்த சந்து கடைசில வரிசையா குடிசைங்க இருக்கு. அதுலதான் குடி இருக்கான் கனக ராஜ்" என்றார் பெட்டிக் கடைக்காரர்.

இருவரும் அந்த சின்ன சந்துக்குள் போனார்கள். ஒரு பெண், ஒரு குடிசை வாசலில் உட்கார்ந்து கோழி அறுத்துக் கொண்டிருந்தாள். "ஏம்மா... இங்க கனக ராஜ் வீடு எது?" என்று கேட்டார் பொன் னையா.

"சிவப்புக் கலர் சேலை தொங்குதுல்ல, அந்த வீடு தான்" என்றாள். அந்த வீட்டில் உள்ளே ஆள் இருப்பதே தெரியவில்லை. இருட்டாய் வேறு இருந்தது. 'யாரு..' சத்தம் மட்டும் கேட்டது முதலில்.... ஒரு பெண் வந்தாள். "கனகராஜ் இருக்காரா?"

கேட்டது தான் தாமதம் – பொரிந்து தள்ளி விட்டாள். "எங்கப் போனான்னு தெரியல... நான் மூணு புள்ளைகளை வைச்சுகிட்டு கைல காசு கூட இல்லாம லோல் பட்டுட்டு இருக்கேன். அவன் அந்த ஒத்தக் கடைக்காரிக்கூட ஜாலியா இருக் கான். எங்க வலுவா கைய வைச்சான்னு தெரியல... திருடிட்டு வந்ததை எல்லாம் கூத்தியாகிட்ட கொடுத்து அழிச்சப்புறம், கைல காசு இல்லாதப்பதான் பொண் டாட்டி ஞாபகம் வரும்... நீங்க யாரு? உங்க இடத்துல வேலைக்கு வந்து சமயத்துல எதையும் திருடிட்டு வந்துட்டானா?"

அவர்கள் கேட்க நினைத்ததை கேட் காமலே புட்டு, புட்டு வைத்து விட்டாள். கனகராஜே பெட்டியை உடைத்து திருடி யிருக்க வேண்டும்... போலீஸுக்குப் போக வேண்டியதுதான்... "குழந்தைக்கு உடம்புக்கு முடியலயா தங்கச்சி... மருந்து மாத்திரை வாங்கிக்கோம்மா" என்று பையிலிருந்து பத்து ரூபாயை எடுத்து அந்தப் பெண்ணி டம் கொடுத்தார் பொன்னையா... "யாரும்மா அந்த ஒத்தக் கடைக்காரி... எங்க இருக்கா?" என்று மெல்ல விசாரித்தார்.

"அதான், யானைமலை ஒத்தக் கடைன்னு இருக்குல... அங்கத்தான் அவள வைச்சிருக்கான் எம்புருஷன். ஒத்தக்கடை பஸ் ஸ்டாண்ட்ல இறங்கி புஷ்பா யாருன்னு கேட்டா ஊரே சொல்லும்" என்றாள்.

"பரீட்சையில முதல் கேள்விக்கும் கடைசிக் கேள்விக்கும் மட்டும்தான் விடை தப்பா எழுதினேன்னே, ஆனா பூஜ்ஜியம் மார்க் வாங்கியிருக்கியே?"

"மத்த கேள்விக்கெல்லாம் விடையே எழுதலையே!"

–மேல்மங்கலம் பத்ரா

---

**போ**லீஸ் ஸ்டேஷனில் எஸ்.ஐயிடம் விவரம் சொன்னார் பொன்னையன். எஸ்.ஐக்குக் கோபம் வந்தது. "இப்ப நீ போலீஸ்காரனா, இல்ல நான் போலீஸ் காரனான்னு சந்தேகமா இருக்கு... ஒத்தக் கடையிலதான் உறுதியா இருக்கிறானா...? அவன் சொன்னான், இவன் சொன்னான்னு போயி – ஏமாந்து வரக் கூடாது... வேலை வெட்டி இல்லாம நாங்க சும்மா இல்ல" என்றார்.

"அவன் ஏற்கெனவே ஜெயிலுக்குப் போனவனா... அப்ப ஒத்தக்கடை ஸ்டேஷன்ல விசாரிப்போம்... யோவ் ஒத்தக் கடை ஸ்டேஷன் நம்பர் என்னய்யா... ஃபோன் அடிய்யா..." என்றார் கான்ஸ் டபிளிடம்.

"ஸார்... ஒத்தக்கடை ஸ்டேஷன்" என்று காவலர் ரிஸீவரைக் கொடுத்தார். "ஹலோ ஒத்தக்கடைப் பகுதில கனகராஜ்ங்கிறவன் மேல் கேஸ் ஏதும் இதுக்கு முன்ன ஃபை லாகியிருக்கா?" என்று கேட்டார் எஸ்.ஐ. சில வினாடி இடைவேளைக்கு பின், 'ஆமாம்' என்று பதில் வந்தது. 'இப்போ அவன் அங்கத்தான் இருக்கானாம்... அவ னைப் பிடிச்சு ஸ்டேஷன்ல வைங்க... பத்து நிமிஷத்துல வர்றோம்" என்று ஃபோனை வைத்தார்.

எஸ்.ஐ. மற்றும் ஒரு கான்ஸ்டபிள் கிளம்பினார்கள். "யோவ்... ஆட்டோவை பிடிய்யா–" என்றார் எஸ்.ஐ. எப்படியும் நூத் தம்பது ரூபாய் கேட்பான் ஆட்டோவுக்கு. இங்கென்ன நோட்டு அடிக்கிற மிஷினா இருக்குது...' – ஏற்கெனவே பொருளை இழந்து நொந்து போய் இருப்பவனை மேற் கொண்டு, இம்சிக்கிறார்கள்....

"என்னய்யா... ஆட்டோன்னு சொன் னதும் வாயைப் பொளக்கிறே... தங்க வேலை பார்க்கிறேல்ல.... கொஞ்சம் எடுத்தா போது மய்யா..." என்றார் கான்ஸ்டபிள்.

"சரி வாங்க..." என்றான் சண்முகம்.



அவன் ரொம்பவும் நொந்து போயிருந்தான்.

சரியாக இருபத்தி ஐந்தாவது நிமிஷத்தில் ஒத்தக்கடை காவல் நிலையத்தில் ஆட்டோ நின்றது. நாத்தம்பது ரூபாயை எடுத்துக் கொடுத்தார். அவ்வளவு தான் காசு... போகும் போது பஸ்ஸில் தான் போக வேண்டும்.

உள்ளே நுழைந்தனர். எஸ்.ஐ. இருந்தார். "என்னய்யா... ஆளைப் பிடிச்சியா...?"

"பட்சி பறந்துடுச்சு... விடியக்காலைல எங்கேயோ போனானாம். எங்க போயிருக்கான்னு தெரியலையாம்."

"யாரு, அவன் சின்ன வீடு சொல்லுச்சா..? வீட்டை சோதனை போடுவோம், ஏதாவது சிக்கும்."

நாலு தெரு தள்ளிதான் அந்தப் பொம்பளையின் வீடு இருந்தது. இவர்கள் போன போது வாசல் கதவைப் பூட்டிக் கொண்டு இருந்தாள். கையில் மஞ்சள் பை... எங்கேயோ ஓடிப்போக ஆயத்தமாகியிருக்க வேண்டும் போலும்... "எங்கம்மா போற. கதவைத் திற.."

போலீஸைப் பார்த்ததும் அவளுக்கு வியர்த்துக் கொட்டியது. கதவைத் திறந்தாள். உள்ளே போனதும் மஞ்சள் பையை விசுக்கென்று அடுப்படியில் வைத்துவிட்டு வந்தாள். பையை மறைப்பதாய்த் தோன்றியது. "பையில என்னம்மா இருக்கு... எடுத்துட்டுவா... யோவ் நீ போய் எடுத்துட்டு வா..." என்று கான்ஸ்டபிளை விரட்டினார் எஸ்.ஐ.... கான்ஸ்டபிள் பையை எடுத்துக் கவிழ்த்தார்... இரண்டு சேலை, இரண்டு ஜாக்கெட், ஒரு மணிபர்ஸ் என்று எல்லாம் விழுந்தன. கடைசியில் ஒரு பொட்டலம்.

கான்ஸ்டபிள் எடுத்துப் பிரித்தார். ஒரு தங்கக் கட்டி... ஆனால் பாதியைக் காணோம். எஸ்.ஐ. சட்டென்று அவளை அறைந்தார்.

"என்னம்மா இது... எங்க அந்தக் திருட்டுப்பய...?"

"எனக்கொண்ணும் தெரியாது... இதக் கொடுத்து பத்திரமா வைச்சிருன்னு சொன்னார். ஒரு வாரம் கழிச்சு வர்றேன்.... போலீஸ்காரங்க ஒரு வேளை உன்னைத் தேடி வந்துட்டா, இந்தக் கட்டிய எடுத்துட்டு உன் சொந்த ஊருக்குப் போய் இருந்துட்டு வா..ன்னு சொன்னார்" என்றாள்.

சண்முகம் கட்டியை வாங்கிப் பார்த்தான். ஐந்நூறு கிராம் தங்கக் கட்டியில் பாதியைக் காணோம். இருப்பது மூன்னூறு கிராமுக்குள்ளாகத்தான் இருக்கும்... மிச்சத்தை அந்தக் திருட்டுப்பயல் எடுத்துக் கொண்டு இந்நேரம் அழித்தும் இருப்பான். இதாவது கிடைத்ததே என்று சந்தோஷப்பட வேண்டியதுதான்...

"இவளப் பிடிச்சுட்டுப் போய் ஸ்டேஷன்ல நாலு சாத்து சாத்தினா, திருட்டுப்பய எங்க இருக்கான்னு சொல்லிடுவா. அவன் வந்து 'உன் பட்டறைல தான் திருடினேன்னு சொன்னாதான் கட்டி உனக்கு... இது எவன் கிட்ட திருடிட்டு வந்த கட்டியோ... யாருக்குத் தெரியும்!" என்றார் எஸ்.ஐ.

பகீர் என்றது. கட்டி இப்போது கிடைக்காதா?

"ரெண்டு நாளில் பிடிச்சிடலாம். எங்கப் போயிடப் போறான். அப்புறம் கொடுத்துருவோம்" என்றார் எஸ்.ஐ. அவன் வேகமாகப் பிடிபட வேண்டுமே என்று பிரார்த்தித்துக் கொண்டார் பொன்னையா.... மூணு நாளாய்ப் பறிபோயிருந்த நிம்மதி இப்போதுதான் இலேசாய் மலர்ந்தது...

கான்ஸ்டபிள், சண்முகத்தைத் தனியாக அழைத்துப் போய், "அதான் தங்கக் கட்டி இடைச்சிருச்சுல... ஒயின் ஷாப்புக்குக் கூட்டிப் போய்யா" என்றார்... இந்தக் கண்றாவி வேறா...?

"யோவ்... என்னய்யா குசுகுசுன்னு... ஆட்டோவைப் பிடிய்யா... டைமாச்சு..." ஆட்டோவிலேயே பிறந்து ஆட்டோவிலேயே வளர்ந்த எஸ்.ஐ. மவராசன் ஆட்டோவைக் கூப்பிடச் சொன்னார்.

"சார்... பஸ்ல போகக் கூட காசு இல்ல..." என்றான் சண்முகம். ○



நூற்றியெட்டு டிகிரி வெயில் உச்சந்தலையில் இறங்கும் மதிய வேளை. மண்டைக் காய்ச்சலோடு மைலாப்பூர் பயணித்து, நெட்டிலிங்க மரங்கள் சுற்றிச் சூழ்ந்திருந்த அடுக்குமாடிக் குடியிருப்புக்குள் அடி வைத்து, அந்த ஃபிளாட்டின் அழைப்பு மணியை அழுத்தினால், குளிர்ச்சியான 'ஜில்' புன்னகையோடு கதவைத் திறந்தார் நந்தா!

கோவைத் தமிழில் கொஞ்சம் நக்கலாய்ப் பேசி, 'பேச்சிலர் கண்ணனாக' 'மௌனம் பேசியதே' படத்தில் கவனிக்க வைத்த இருபத்து நான்கு வயது இளமை எக்ஸ்பிரஸ்!

இப்போது 'புன்னகைப் பூவே' வெற்றிப்பட நாயகன்! வரவேற்பறை சுவர் நெடுகிலும், வண்ண வண்ண ஓவியங்கள் கண்ணாடிச் சட்டத்திற்குள் மின்னிக் கொண்டிருந்தன. எல்லாம் நந்தா வரைந்த ஓவியங்கள்!

"சின்ன வயசுலேர்ந்து ஓவியம் வரைவேன். நான் முழுநேர ஓவியனா வருவேன்னு வீட்டில் நினைச்சாங்க. எனக்கோ முழு நேர நடிகனாகணும்னு ஆசை. மிடில் ஸ்கூல் படிக்கும்போது ஓர் ஓவியம் வரைஞ்சா அம்மா ஒரு சாக்லேட் தருவாங்க. எம்.ஜி.ஆர், சிவாஜி, கமல் முகங்களை போர்ட்ரேய்ட்டாக வரைவேன். ஒருமுறை ரஜினியை வரைஞ்சு காட்டுன்னு சொன்னாங்க. பாட்ஷா ரஜினியின் முழு உருவத்தைப் போட்டு முகத்தை மட்டும் என்னுடையதா வரைஞ்சுட்டேன். ஓவியத்துக்கு கீழே 'சூப்பர் ஸ்டார் கோவிந்து'ன்னு டைட்டில் வேற எழுதினேன். இப்படி சாக்லேட் கொடுத்துக் கொடுத்து ஓவியனை வளர்க்கிறதா அம்மா நினைச்சுகிட்டாங்க... நான் மனசுக்குள்ளேயே நடிகன் கனவை வளர்த்துகிட்டு இருந்தேன். இப்போ உங்க முன்னால் நந்தாவா நிக்கிறேன்" என்று சாக்லேட் சிரிப்போடு பேச ஆரம்பித்தவருக்குத் திருப்பு முனையை உண்டு பண்ணியவர் தயாரிப்பாளர் தாணுவாம்.

"ஒரு குடும்ப விழாவில் தாணு சாரைச் சந்தித்தேன். அவரிடம் என் விருப்பத்தைச் சொன்ன அடுத்த வினாடி, 'உன்னை நான்தான் அறிமுகப்படுத்துவேன். அதற்கு முன்னால் நடிப்பைப் பற்றி கொஞ்சம் தெரிந்து கொள்' என்றார். அவரே தமிழ்நாடு அரசு திரைப்படக் கல்லூரி நடிப்புத்துறையில் சேர உதவினார். அட்மிஷன் கிடைத்ததும் பி.எஸ்ஸியை பாதியில் விட்டுவிட்டு நடிப்புப் பயிற்சியில் சேர்ந்தேன். பாடி லாங்வேஜ், வாய்ஸ் – ஸ்பீச் டிக்ஷன், இம்ரோவைசேஷன் இந்த மூன்று அடிப்படை பயிற்சிகளும் எனக்கு நம்பிக்கைக் கொடுத்திச்சு. ஒரு வருஷ பயிற்சி முடிஞ்சதுமே நீதான் ஹீரோன்னு 'புன்னகைப் பூவே' படத்தை எனக்காகவே தாணு சார் ஆரம்பித்தார். அம்மாதான் நந்தாங்கிற பெயரைச் சூட்டினாங்க'' எனும் நந்தா, மௌனம் பேசியதே படத்தின் பூஜைக்குச் சூர்யாவை வாழ்த்தச் சென்றிருந்த போது, படத்தின் இயக்குனர் அமீர்

பார்த்து விட்டு, கண்ணன் பாத்திரத்தில் நடிக்க வாய்ப்புக் கொடுத்ததால் முதல் படம் 'மௌனம் பேசியதே' ஆகிவிட்டதாம்.

''பேச்சிலர் தான். அப்பப்போ அம்மா கோயமுத்தூர்லேர்ந்து வந்து போவாங்க. இங்கே பக்கத்துல இருக்கிற எல்லா வீட்டிலேயும் ஆரோக்கியமான பழக்கம் இருக்கு. சமைக்கிறவங்க லீவு போட்டுட்டா, ஒவ்வொரு வேளைக்கும் ஒரு வீட்டி விருந்து சாப்பாடு வரும். என்னை எல்லாருக்கும் அவ்வளவு பிடிக்கும்" என்று சந்தோஷப் படுகிறார். "நான் தேர்வு பண்ற ஒவ்வொரு கேரக்டரும்,

# சாக்லேட் கனவுகள்!

ரசிகன் மனசைப் பண்படுத்துறமாதிரி இருக்கனும்ன்னு நினைக்கிறேன்'' என்று சொல்லும் இவருக்கு ஹீரோயிசம் மீது நம்பிக்கை கிடையாதாம்!

"இங்கே ஒரு படம் ஓடினா அதுக்குக் காரணம் கதைதான்; ஹீரோ இல்லேன்னு புரிஞ்சு வெச்சிருக்கேன். பிலி ஹீரோவான பிறகு, 'ஒரு சின்ன கேரக்டர் இருக்கு. கதையோட்டத்தில் அது ரொம்ப முக்கியமான கேரக்டர்'ன்னு சொன்னால் நிச்சயமா பண்ணுவேன். இமேஜ் ஒரு மாயை. அதை அடிமையா வெச்சிருக்கணுமே தவிர, அதுகிட்டே நாம அடிமையா இருக்கக் கூடாது" என்று தெளிவாகப் பேசும் நந்தா, அமைச்சர் வீட்டுப் பேரன். மரபு சாரா எரிசக்தித் துறையின் மத்திய இணையமைச்சர் மு. கண்ணப்பன் இவரது தாய் வழித் தாத்தா.

— ஜெய்




# என்ன பேசினாரோ?

ஸ்ரீ காஞ்சி காமகோடி மஹாஸ்வாமிகள் காஞ்சிக்குப் பக்கத்தில் "சிவாஸ்தானம்" என்ற கிராமத்தில் அப்போது தங்கியிருந்தார்கள். ஒரு நாள் மஹாஸ்வாமிகள், இரவு பத்து மணி அளவில் வீதி உலா வரும் காமாக்ஷி அம்மனைத் தரிசிக்க விரும்புவதாகக் கூறி, கிளம்பினார். சிஷ்யர்கள், தாங்கள் தங்கியுள்ள கிராமத்திலிருந்து காமாக்ஷி அம்மன் கோவில் ஐந்து மைல்களுக்குக் குறையாமல் இருப்பதாகவும், எனவே தற்சமயம் கிளம்பி அம்மன் வீதி உலாவைப் பார்ப்பது சாத்தியம் இல்லை எனவும் தெரிவித்தார்கள்.

தங்கிய இடத்திலிருந்து கிளம்பிய மஹாஸ்வாமிகள் கிடுகிடுவென நடந்து, பக்கத்தில் அமைந்திருந்த ஒரு விநாயகரைச் சற்று நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டே ஏதோ மனத்திற்குள் பேசுவது போல், பேசி பிறகு நேரே காமாக்ஷி அம்மன் கோவில் அமைந்துள்ள மார்க்கமாகக் கிளம்பி விட்டார்கள். வேறு ஏதும் தோன்றாமல் சிஷ்யர்களும் கூடவே கிளம்பினார்கள். அரை மணி நேரத்திற்குள் ஸ்வாமிகளும் சிஷ்யர்களும் காமாக்ஷி அம்மன் வீதி உலா வரும் இடத்திற்கு வந்து சேர்ந்து, அம்மனைக் கண் குளிர தரிசித்தார்கள். வீதி ஊர்வலம் அரை மணி நேரமாக ஒரே இடத்திலேயே இருந்திருக்கிறது! நகரவே இல்லை! சிஷ்யர்கள், வீதி உலாவோடு வந்த கோவில் சிப்பந்திகளை, 'தாமதம் ஏன்? அம்மன் அரை மணிக்கு மேல் ஒரே இடத்தில் நிற்கக் காரணம் என்ன?' என்று வினவினார்கள். கோவில் சிப்பந்திகள் சொன்ன பதில் அவர்களை வியப்பில் ஆழ்த்தியது.

"யானை முன்பாகச் செல்ல, உற்சவ மூர்த்தி அம்மன் அலங்காரங்களுடன் பின்னே வந்து கொண்டிருந்தது. இந்த இடம் வந்தவுடன் என்ன காரணமோ தெரியவில்லை, யானை நகர மறுத்தது. அம்மன் உள்ள பல்லக்கைத் தூக்குபவர்கள் நகர்ந்தால் "பிளிறி" ஆர்ப்பாட்டம் செய்தது. அவர்கள் சும்மா இருந்தால் யானையும் அமைதியாக இருந்தது" என்று சொன்னார்கள். ஸ்வாமிகளும், சிஷ்யர்களும் அம்மனைத் தரிசனம் செய்த பிறகு ஸ்வாமிகள் யானையைத் தொட்டு நமஸ்கரித்து, யானை தின்பதற்குப் பழங்கள் கொடுக்கச் சொன்னார்கள். பழங்களைத் தின்றதும் யானை அமைதியாக முன்னே செல்ல, உற்சவ மூர்த்தி ஏதும் விக்னமில்லாமல் கோவில் வந்தடைந்தது.

இன்றும் சிஷ்யர்களுக்குத் தாங்கள் தங்கியுள்ள கிராமத்தில் அமைந்துள்ள விநாயகர் சிலையைப் பார்த்து பரமாசார்ய ஸ்வாமிகள் என்ன பேசினார் என்பது தெரியாது. ஆனால் யானை, அம்மன் வீதி உலாவை பரமாச்சார்யாள் வந்து தரிசிக்கும் வரை தடுத்து நிறுத்தி வைத்தது என்பது தெரியும்!

— ஸ்ரீ முரளிதர ஸ்வாமிகள் கூறக் கேட்டு எழுதியவர்: **கைலாசம்**

(வைகாசி அனுஷம் - பரமாச்சார்யர் ஜெயந்தி)

# VAT-ன்னா என்ன?

• சொக்கர்



"மதிப்புக் கூட்டு வரி விதிப்பு முறையில் சில சாதகமான அம்சங்களும், அச்சப்படக் கூடிய பாதக மான அம்சங்களும் கலந்தே இருக்கின்றன'' என்கிறார் முன்னாள் எம்.எல்.ஏ.வும், விற்பனை வரி சீர்திருத்தக் குழுவின் உறுப்பினராகவும் பணி யாற்றிய ஆர். சொக்கர்.

"ஒரு பொருளின் உற்பத்தி விலை நூறு ரூபாய் என்று வைத்துக் கொள்வோம். உற்பத்தியாளர் முதலில் மொத்த வியாபாரியிடம் விற்கும்போது மூலப் பொருளுக்கு, தான் செலுத்திய பத்து சதவிகித வரி போட்டு நூற்றுப் பத்து ரூபாய் வசூல் செய்து விடுவார். அதற்கடுத்த படி மொத்த விற்பனையாளர் அடுத்த வியாபாரியிடம் விற் கும்போது, போக்குவரத்துச் செலவு, இதர செலவு பத்து ரூபாய் ஆகும் என்று வைத்துக் கொண்டால், நூற்றுப் பத்து ரூபாயுடன் தாம் கட்டிய பத்து ரூபாய் வரியையும் சேர்த்து நூற்றி இருபது ரூபாய்க்கு விற்பார். அப் போது அவர் செலுத்த வேண்டிய வரி பன்னி ரண்டு ரூபாய். இப்படி ஒவ்வொரு கட் டத்திலும் பொருளின் மதிப்பு கூடிக் கொண்டே போகும். இதனால் கிடைக்கும் வரி வசூல் அரசு கஜா னாவை நிறைக்கும். ஒவ் வொரு கட்டத்திலும் ஒருவர் கொடுக்கிற வரியை, ஏற்கெனவே கட்டிய வரியிலிருந்து கழித்து மிச் சத்தை அரசுக்குக் கட்டினால் போதும்."



• த.வெள்ளையன்

"அது சரி! மக்களுக்கு என்ன லாபம்?"

"ஒவ்வொரு கட்டத்திலும் தான் கட்டிய வரியை கழித்துக் கொள்ளும் வசதி இதில் இருப்பதால், எல்லா மட்டத்திலும் பில் போட்டு வணிகம் செய்யும் சூழல் உருவாகும்."

"வியாபாரிகள் இதை எதிர்ப்பதேன்?"

"முதலில் எல்லா சில்லறை வியாபாரிகளும் வரி செலுத்தும் வணிகர் என்ற வலையில் வந்தாக வேண்டும். சோதனை என்ற பெயரில் அதிகாரிகள் வியாபாரிகளிடம் சற்றுக் கறாராக நடந்து கொள்ளும் வாய்ப்பு உண்டு. அத்து மீறல் தவிர்க் கப்பட வேண்டும். அடுத்ததாக எழுபத்து மூன்றா வது பிரிவில், கணக்கைச் சமர்ப்பிப்பதில் தாமதம் ஏற்பட்டாலோ, அல்லது தவறான விவரங்கள் தந்த தாகக் கருதினாலோ, கடும் தண்டனை என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இது மறு பரிசீல னைக்கு உரியது. சிறு வியாபாரிகளுக்கு Vat முறையிலிருந்து விதி விலக்கு அளிக்கலாம்'' என்கிறார் சொக்கர்.

இந்த வரி விதிப்பு முறையைக் கடுமையாக எதிர்க்கிறார் தமிழ்நாடு வணிகர் கூட்டமைப்பின் தலைவர் வெள்ளையன். "நமது நாட்டில் சிறு வணிகர் ஐந்து விதமான கணக்குப் புத்தகங்களையோ அல்லது கம்ப்யூட்டரோ வைத் துக் கொள்ள முடியாது. இந்த மதிப்புக் கூட்டு வரியில் இறுதி யாக மக்கள் தலையில்தான் சுமை ஏறுமே தவிர, வேறு ஒன்றுமில்லை. எதிர்காலத்தில் நாட்டில் சில்லறை வியாபாரமே செய்ய முடியாத நிலை ஏற் படும். நுகர்வோர், பன்னாட்டு ஏக போகங்களில் சிக்கித் தவிப் பார்கள்"என்கிறார்.

— ஸ்ரீநிவாசன்
படம் : ராஜன்

6

# சில்லுக் கருப்பட்

தாமரை மணாளன்

## எந்த வலைக்குள் யார்?

தேரியூரின் 'தேரடி வீதி'யான சந்து பொந்துகள் 'பெரிசு'கள் முதுகு தேய்த்துக் கொண்டு சீட்டாடுவதற்கு வசதியாகக் கட்டிப் போடப்பட்டிருந்த ஓலை சக்குரி, இடிந்த கட்டிடங்கள் எல்லாவற்றிற்குமே உற்சாகம்.

"பட்டணத்து மொதலாளி' பலவேசமுத்தும் நம்ம ராசலிங்கமும் சேர்ந்து ஒரு கடையில் இருந்தாங்களாம். அவன் இறந்த சேதி கேள்விப்பட்டு இப்ப துக்கம் விசாரிக்க வந்திருக்காங்களாம். சொகுசு சொன்னா" என்று பரப்பப்பட்ட தகவலின் பேரில்தான், "அவியளைப் பார்க்கணும். எம்புட்டு நல்ல மனசு" என்று பாமரப் பரபரப்பு.

அவர்களின் கார் பவனி நடந்தபோது தண்டபாணியின் 'கண்பவனி' காயப்படுத்திய பெண்களைத் தன் மனத்திற்குள் பதிவு செய்து கொண்டான் சொகுசு. எதற்கும் உதவுமே! தண்டபாணிப் பயல் சிலிர்த்துக் கொண்டால், அவனுடைய பல்லைக் குத்த உதவுமே!

ராமக்கனி அம்மாள் வீட்டுக்குள் பெண்கள் எல்லாரும் அடங்கியிருந்தனர். வாசல் பக்கம் யாரும் தென்படவில்லை. மாறாக கண்ணன் மட்டும் வாசலில் வி.ஜி.பி.யில் விறைத்துக் கொண்டு ஆடாமல் அசையாமல் நிற்கும் கல்லுளி மங்கனைப் போல் - நின்று கொண்டிருந்தான். அவன் பார்வை, 'வாங்க' என்று வரவேற்கவுமில்லை, 'போங்க' என்று துரத்தவுமில்லை.

பலவேசமுத்துவுக்கும் ஒருக்கண கணக்கம். 'நம்மை அவமானப்படுத்துகிறார்களோ!' அரசியல்வாதியாகி விட்டாரே, மானத்துக்கு ஏற்படும் கரீர் இன்னல்களைச் சட்டென்று விழுங்கிவிட்டார். 'இப்படி நம்மாளுக்கு சங்கடங்கள் ஏறிக் கொண்டிருந்தால், நம் தேவை இருந்து கொண்டேயிருக்கும், என்று உள்ளூர உற்சாகப்பட்ட சொகுசு அக்கா, அத்தனை பேரின் பார்வையில் படும்படி பலவேசமுத்துவின் கையைப் பிடித்து, அவரை செண்பகத்தின் வீட்டுக்குள் நடத்தினான். 'நான் தான் இந்தக் குடும்பத்துக்கெல்லாமே!' என்று மனோதத்துவத் தாக்கத்தை நிற்கும் 'ஆ!'க்களுக்கு உருவாக்கத்தான். உள்ளே - கண்ணனின் தாயாரான பூமணி அம்மாள்தான், பலவேசமுத்து கோஷ்டிக்குத் 'தாகத்துக்குக் கொடுத்துவிட்டு, கொறித்துக் கொள்ளவென்று, சிறு பயிற்றுச் சுண்டலைக் கொண்டு அவர்கள் முன்னால் வைத்தாள். 'அந்தக் குடும்பத்தையே கொறிக்க வந்தவருக்கு, இதிலெல்லாம் பெரிதாக ஆர்வம் இல்லை.

வாசற்புறத்தை ஒட்டியுள்ள சின்ன உட்புற ஓலைப் புறவடை வாசற்படியில், கதவோடு சாய்ந்து எங்கோ வெறித்து நோக்கிச்



கொண்டிருந்தாள் ராமக்கனி. உட்புறமாக இருட்டுக்குள், செண்பகம்.

ராமக்கனியை நோக்கி, "அக்கா, வீடு தேடி வந்திருக்கேன். 'வா'ன்னு ஒரு வார்த்தை சொல்லப்படாதா!" என்றார் பலவேசம்.

"பிறத்தியார் வீடு தேடிப் போறது உனக்குப் புதுசா என்ன? நீ ஒரு தடவை நுழைஞ்சே. அப்பாவியா 'வா'ன்னு சொன்னோம். அதினால நாங்க பட்டபாடு..." குரல் கம்மியது.

"அக்கா, உங்க வீட்டை அன்னிக்கும் இன்னிக்கும் பிறத்தியார் வீடா நான் நெனைக்கலை. ராசலிங்க அண்ணாச்சி குடுத்த உரிமை அது..."

"அதான் அந்தத் தர்மவானையும் உரிமையோட முதுகிலே குத்துனே..."

"அக்கா, ராசலிங்க அண்ணாச்சி தர்மவான்ங்கிறது ஊர் உலகத்துக்கே தெரியுமே! ஆனா பொழைக்கத் தெரியாத தர்மவான். சம்பாதிக்கும்போது, தர்மநாயம் பார்க்காம துட்டைச் சேக்கணும். அப்புறம் அதில ஒரு பங்கு தர்மத்துக்கு அள்ளி விட்றது. வேணும்னா திருப்பதி பெருமாளைப் பங்காளியாக்கிக்கிடலாம். அவரைவிட பெரிய தர்மம் எது? நாம ஏதாவது தப்புத் தண்டா பண்ணினாலும், 'பார்ட்னர்' என்கிற முறையில

# சினிமா ஜோடி!

ஆங்கில வார இதழ் ஒன்று நடத்திய பாலிவுட் கருத்துக் கணிப்பில் கேட்கப்பட்ட கேள்வி இது : "சினிமா நட்சத்திரங்களின் வாரிசுகள், நடிப்பைத் தவிர வேறு ஏதாவது துறைக்குப் போகலாம் என்று நினைக்கிறீர்களா?" இந்தக் கேள்விக்கு எழுபத்திரண்டு சதவிகித வாக்காளர்கள் "ஆமாம். ஏனென்றால் அவர்களில் மிகப் பெரும்பாலானவர்களுக்கு அடிப்படை நடிப்புத் திறமைகூட இல்லை" என்று பதிலளித்திருக்கிறார்கள். மிகச் சிறந்த நடிகராக யாரைக் குறிப்பிடுவீர்கள்? என்ற கேள்விக்கு, ஐம்பத்தாறு சதவிகித வாக்காளர்கள் அமிதாப்பச்சனைத் தேர்வு செய்திருக்கிறார்கள். அடுத்த இடம் திலீப் குமாருக்கு. மூன்றாவது இடத்தைப் பிடித்திருப்பது சஞ்சீவ் குமார். மிகச் சிறந்த சினிமா ஜோடி என்று பெரும்பாலான வாக்காளர்கள் கருதுவது ஷாருக்கான் - கஜோலைத்தான்.

- குல்லு

• கஜோல்



பெருமான் நம்ம பாவத்தைக் கேன்சல் பண்ணிடுவாரு" என்று பலவேசமும் தர்மோபதேசம் செய்து கொண்டிருந்தபோது....

வீட்டுக்குள்ளிருந்து ஆவேசப் புயலாய் வெளிப்பட்டாள், செண்பகம். வந்த வேகத்தில், "எங்க அப்பா, 'ஒவ்வொருத்தர்' மாதிரி, தங்கமும் ஈயமும் சேர்ந்த 'தகிடுதத்தம்' இல்லே. அவங்க சுத்தமான தங்கம். அவங்களைப் பற்றி நீங்கள்லாம் பேசாம இருப்பது நல்லது, 'தலைவரே'" என்றாள்.

"'தலைவரே'ன்னு என்னைச் சொல்லாதம்மா. நீ படிச்சவ. 'அங்கிள்'னு கூப்பிடு. அதுக்கு சித்தப்பான்னு பொருள் உண்டு. "மாமா"ன்னும் அர்த்தம் உண்டு. சும்மா சித்தப்பான்னு வெளியில் சொல்லிக்கலாம். மனசு விளையும்போது, அது மாமாவா விளையட்டும்."

"நீங்க சாதாரண தலைவர் இல்லே, மாபெரும் தலைவர். ஒரு சின்ன வார்த்தைக்குள்ளே, எவ்வளவு கலப்படம் இருக்குன்னு கரைச்சுக் குடிச்சிருக்கீங்களே. உங்களை கலப்படச் சக்கரவர்த்தின்னு ஒப்புக் கொள்றேன். கலப்படக் கச்சேரியை விட்டு வெளியே வந்து, வந்ததைப் பத்திப் பேசுங்க."

"கலப்படக் கச்சேரியை விட்டா, கல்யாணக் கச்சேரியை ஆரம்பிக்கலாம். ஆனா அதுக்கு இன்னும் வேளை வரலை. எல்லார் மனத்திலும் நல்லெண்ணம் ஏற்படும். அது மெதுவாப் பாக்கலாம். இப்போ கவனிக்க வேண்டியது 'காசுக் கச்சேரி'. நான் செஞ்ச தப்பால, ராசலிங்க அண்ணாச்சி குடும்பம் சீரழிஞ்சு போச்சு. அந்தக் கொடுமையை நான்தான் சரிக்கட்டணும்." என்று உணர்ச்சி வசப்பட்டவர் போல் சொல்லிக் கொண்டிருந்தவர் - அவ்வப்போது மேல் துண்டால் ஒற்றிக் கொண்டவாறே, சுற்றி தன் பேச்சுக்கு ரியாக்ஷன் எப்படி என்று கண்காணித்தார். கண்ணன்தான் சரியில்லை. முறைக்கிறான்.

பின் உடனே, தன் பேச்சை கண்ணன் பக்கமாகத் திருப்பினார். "ராசலிங்க அண்ணாச்சி தங்கச்சி மகன் கண்ணன் இவன் தானா? அவனையும் ஒரு நெலைக்குக் கொண்டாரணும்..." என்றவர், சொகுசு அக்கா பக்கம் திரும்பி, "சொகுசு, நான் இந்தக் குடும்பத்துக்கு என்னென்ன செய்யணும்னு சொல்லிருக்கேன்..." அவர் அப்படி எதுவும் கூறவில்லை. ஆனால் "ம்ம்" என்று வாயில் குதப்பிய வெற்றிலை அலுங்காமல், கண்ணை மட்டும் பெரிதாக உருட்டி ஆமோதித்தாள் சொகுசு.

செண்பகத்துக்கு எரிச்சல் ஏறியது. "தலைவரே, உங்க உயர்ந்த மனசை தெரிஞ்சுகிட்டோம். இப்ப என்ன, உங்களுக்கு முந்தி பிச்சை போட்ட வீட்டுக்குப் பிச்சை போட்டு, அதைத் தீர்க்க வந்தீங்களா?"

"பிச்சையா... அவசரம்! உதவி... அதுகூட தப்பு... உரிமையோட நீங்க எடுத்துக்கலாமே."

"உரிமையோட எடுத்துக்கலாம்னு சொன்னீங்களே, அந்த உரிமையை எடுத்துக்கலாமா?" என்று மடக்கினாள் செண்பகம்.

"எதைச் சொல்றேம்மா." பலவேசம் குழம்பிப் போனார்.

"எந்தப் பிரதிபலனும் எதிர்பார்க்காம, சென்னையில உள்ள பலசரக்குக் கடையின் உரிமையை எங்களுக்குத் தர முடியுமா? உங்களுக்குத் தேவையில்லாததா இருந்தா...! கொஞ்ச காலத்துக்கு விட்டுத் தந்தா போதும். ஒருத்தருக்குத் தேவைப்படுது..." என்றாள் செண்பகம்.

"ஒருத்தருக்குன்னா, யாருக்கு?"

"எங்க கண்ணன் அத்தானுக்கு. இப்ப அவங்களுக்குச் சரியான பிழைப்பு இல்லை. ஒழைக்கறதுக்கு ஒரு வழி கிடைச்சா குடும்பம் பொழைச்சுடும்" என்றாள்.

செண்பகம், கண்ணனை 'எங்க அத்தான்' என்று நெருக்கம் கொண்டாடிப் பேசியது தண்டபாணிக்கு அறவே பிடிக்கவில்லைதான். ஆனாலும் இப்படிப் 'பாசப்பசை' கொண்டு ஒட்டித் திரிபவர்களால் என்றுமே ஆபத்து. பட்டணத்துக்கு அனுப்பி முடித்துவிடலாம்! மனத்துக்குள் கணக்குப் போட்டு, தகப்பனிடம் கூற - பலவேசமுத்து பகிரங்கமாகவே கூறி விட்டார்.

"அந்தக் கடை சம்பந்தமான எல்லா உரிமையும் கண்ணனுக்குத்தான். நானே அவனை சென்னைக்கு அழைத்துச் சென்று ரிக்கார்டுகளையும் மாற்றிக் கொடுத்துவிட்டுவிடுகிறேன். சரிதானே செண்பகம்?"

"இறைவன் அருளால் எல்லாம் சரியா இருக்கணும்" என்றாள் செண்பகம் அமைதியாக.

உடனடியாக பலவேசமுத்து, "தம்பி, பெட்டி படுக்கைகளைக் கட்டு. சாயங்காலமே புறப்படணும்" என்று கண்ணனைத் துரிதப்படுத்தினார். கூடவே, "செண்பகம், நம்ம வீட்டு விஷயங்களையும் சொல்லு. என்ன ப்ராப்ளம், எப்படி சால்வ் பண்றது?"

"நம்ம குடும்பத்துப் பிரச்னை, ரொம்பச் சின்னது. உழைச்சாக் காசு. குடும்பத்துக்குப் போதும். நான் ஏற்கெனவே கம்ப்யூட்டர் படிச்சிருக்கேன். வேலை தேடிக்குவேன். பிறகென்ன?"



## அங்கேயும் இப்படித்தான்!

"நம் அரசியல்வாதிகள் சட்டசபையில் எப்படி நடந்து கொள்கிறார்களோ அதற்குச் சமமாய் வெளிநாடுகளிலும் நடக்கிறது. ஒரே வித்தியாசம் உடை. நம்மூரில் வேட்டி சட்டை. அங்கே கோட் பேண்ட். படத்தில் நீங்கள் பார்ப்பது ரஷ்யப் பாராளுமன்றத்தின் இரண்டு கனவான்கள். கட்சித் தலைவரைப் பற்றி கிண்டலாய்ச் சொன்ன ஒரு எதிர்க்கட்சி ஆசாமியோடு சண்டை போடுகிறது ஆளுங் கட்சி. இந்தப் படம் ரஷ்யாவின் என்.டி.வி. சானலில் ஒளிபரப்பானது. நம் அரசியல்வாதிகள் பார்த்து மன நிம்மதி அடையலாம்.

- ஆனந்த்

"கண்ணு, உன் உழைப்பால உன் வீட்டை முன்னுக்குக் கொண்டு வந்து, நாங்க நடத்தறதுபோல கோயில் திருப்பணியில உன் பங்கு இருக்கணும். யாரோ ஒருத்தரைப் போல கண்டுக்காம போறதைவிட, இந்த ஊரைச் சேர்ந்த குடும்பத்துப் பெண் பொறுப்பில இருந்தா, சாமியே சந்தோசப்படும்." என்றார் பலவேசமுத்து, நவரசத்துடனும்.

"ரெண்டு நாள் கழிச்சு அம்மாகிட்டே கேட்டுச் சொல்றேன். நீங்களும் சென்னைக்குப் போயிட்டு வரணுமே." என்றாள் செண்பகம்.

சந்திப்பு முடிந்து எல்லாரும் கிளம்பினர்.

யார் வலைக்குள் யார் சிக்கினார் என்பது, பார்த்துக்கொண்டிருந்தவர்களின் புரியாத குழப்பம்.

(தொடரும்)



# குல்லு மல்லு

— கதிர்


ஹாய் குல்லு!


என்ன ஆச்சரியமா இருக்கு? 'ஜாக்கிங்'லாம் பண்ண ஆரம்பிச்சிட்ட!
எல்லாம் உடலைக் குறைக்கலாம்னுதான்.


ஹாய் ஷோபனா!
ஜாக்கிங் போய் குறையற உடம்பா இது?


'ஜாக்கிங்'தான பண்ற? அந்தப் பொண்ணை ஏன் பார்க்கிற?
அழகான பெண்ணைப் பாத்தும் பாக்காம போனா, அடுத்த ஜென்மத்துல ஒரு லொள்ளு.. பொண்ணுதான் 'கேர்ல் ஃபிரண்டா' வருவா


எப்படிச் சொல்ற?
உன்னைப் பாத்துதான்!


கவலைப் படாத, ஓடாமலே நீ இளைச் சுடுவே...
எப்படி?
இந்த மாதிரி ஏங்கிஏங்கித் தான்!


கல்கி
18.5.2003 இதழுடன்
இலவச இணைப்பு
கதை கேளு
கதை கேளு!




"ஒரு ஊருல" என்று சும்மா பேச்சுக்காக ஆரம்பித்துப் பாருங்களேன்... "உம்" கொட்ட ஒரு டஜன் பேராவது தயாரா இருப்பாங்க... கதை கேட்பது அவ்வளவு பெரிய த்ரில்! இந்த இலவச இணைப்பும் அந்த த்ரில்லை உங்களுக்கு வழங்கவிருக்கிறது.

"ஒரே ஒரு ஊருல ஒரே ஒரு நரியாம்... அத்தோட கதை சரியாம்..." என்ற பேஜார் கதையெல்லாம் சொல்லி ரீல் விடுவதாயில்லை... ரசிக்கத்தக்க சுவையான கதைகள்தாம்... கோ ஆன், என்ஜாய்!

# மூன்று சல்லடைகள்!

ஓர் ஆசாமி சாக்ரடீசின் வீட்டுக்குள் நுழைந்தான் ஒரு நாள்.

சாக்ரடீஸை அழைத்து "செய்தி தெரியுமா?" என்று ஆரம்பித்தான்.

சாக்ரடீஸ் அவனைத் தடுத்தார். "நிறுத்து உன் பேச்சை. முதலில் நீ கொண்டு வந்த செய்தியை மூன்று சல்லடைகளில் சலித்து எடுத்து வந்தாயா?" என்று கேட்டார்.

வந்தவன் "மூன்று சல்லடைகளா?" என்று விழித்தான்.

"முதலில் நீ சொல்ல வந்தது உண்மையான செய்தியா என எண்ணிப் பார்க்க வேண்டும். அது முதல் சல்லடை.

"இரண்டாவதாக நீ சொல்லப் போவது அடுத்தவருக்கு மகிழ்ச்சி அளிக்கக் கூடியதா? அல்லது நன்மை செய்யக் கூடியதா? என்று எண்ணிப் பார்க்க வேண்டும். அது இரண்டாம் சல்லடை.



"மூன்றாவதாக அந்தச் செய்தி யாருக்கும் தீங்கு இழைக்காததா? கெடுதல் இல்லாததா? என எண்ணிப் பார்க்க வேண்டும். அது



மூன்றாம் சல்லடை.

"இப்படி சலித்து எடுக்காமல், என்னிடம் அதைச்சொல்லி உன் நேரத்தையும் என் நேரத்தையும் வீணாக்க வேண்டாம்" என்றார். வந்தவன் திகைத்து நின்றான்.

''வீண் வதந்தியையும் ஊர்க் கதையும் பேசுவதை விட்டு, உருப்படியாக ஏதாவது செய்" என்று சாக்ரடீஸ் விரட்டினார்.

## உருளைக் கிழங்குத் தத்துவம்!

அது ஒரு மலைக் கிராமம். அங்கு அனைவரும் விவசாயிகள். விளைவிப்பது உருளைக் கிழங்கு. அதை விற்கும் முன், சிறியது பெரியது, மீடியம் என்று பிரிப்பார்கள். அளவை வைத்துத் தான் விலை நிர்ணயிக்கப்படும்.

ஆனால் ஒருவன் கவலையில்லாமல் எல்லாவற்றையும் அள்ளி ஒரு டிராக்டர் 'ட்ரக்'கில் போட்டுக் கொண்டு சந்தைக்குப் புறப்பட்டான். அதைக் கண்ட மற்றவர்கள், "என்னப்பா இப்படி பண்ணுகிறாய்? பைத்தியமா?" என்று கேட்டார்கள்.

"நான் சந்தைக்குப் போகும் பாதை மேடு பள்ளம் நிறைந்தது. அதில் வண்டி போகும் போது, சின்ன உருளை தானாகவே கீழே போய் விடும். மீடியம் சைஸ் நடுவில் நிற்கும். பெரியது மட்டுமே மேலே நிற்கும். பிரிப்பதற்கு ஏன் வீணாக நேரத்தைச் செலவிட வேண்டும்" என்றான் அவன்.

மேலும் அவன் சொன்னான்: "உருளைக் கிழங்கு ஒரு தத்துவத்தைச் சொல்கிறது. துன்பமான நேரங்களில் மனிதர்கள் உலுக்கப்படும்போது, பலவீனமானவர்கள் கீழே போய்விடுகிறார்கள். ஓரளவு சமாளிப்பவர்கள் நடுவில் சிக்கிக் கொள்கிறார்கள். உறுதியானவர்களே மேலே நின்று போராடுகிறார்கள்!"

## மாயை

ஒருவன் சந்தையில் இருந்து ஆடு வாங்கிக் கொண்டு ஊருக்குத் திரும்பிக் கொண்டிருந்தான். அப்போது எதிரே வந்த மூன்று பேர், எப்படியாவது அவனது ஆட்டைப் பிடுங்கிக் கொண்டு போய் விட நினைத்தார்கள். அடாவடியாகப் பிடுங்க மனமில்லை. எனவே ஒரு தந்திரம் செய்தனர்.

முதலாமவன், "அய்யா, ஏன் நீங்கள் இப்படி நாயைச் சுமந்து செல்கிறீர்கள்?" என்றான்.

அதற்கு அவன், 'நீ குருடனா? இது நாய் அல்ல ஆடு" என்று சொல்லிவிட்டு நடந்தான்.

கொஞ்ச தூரம் போனதும், இரண்டாம் ஆள் வந்து, "என்னப்பா, எதற்காக இறந்த



கன்றுக் குட்டியைத் தூக்கிச் செல்கிறாய்?" என்று கேட்டான்.

அதைக் கேட்டு ஆத்திரமடைந்த அவன், "நான் கொண்டு செல்வது உயிருள்ள ஆடு" என்று பதில் சொல்லிவிட்டு நடந்தான்.

கொஞ்ச தூரம் போனதும் மூன்றாமவன் வந்தான். "இது அநியாயம், கழுதையை மனிதன் சுமக்கலாமா?" என்று கேட்டான்.

ஆடு வாங்கி வந்தவனுக்குக் குழப்பமாகி விட்டது. "என் கண்ணுக்கு ஆடு போலத்தான் தெரிகிறது. ஆனால் மற்றவர்கள் கண்களுக்கு வேறு விதமாகத் தெரிகிறதே. ஒரு வேளை இது பிசாசாக இருக்குமோ" என பயந்து தோளில் இருந்த ஆட்டைத் தூக்கி எறிந்து விட்டு ஓட்டம் பிடித்தான்.

மூவரும் வந்து அதை எடுத்துச் சென்றனர்.

மூன்றுபேர் சேர்ந்தால் ஒரு புத்தி சாலியையும் முட்டாளாக்கி விடுகிறார்கள்.

## விபரீத விசுவாசம்!

மன்னன் ஒருவன் ஒரு குரங்கை வளர்த்தான். அது மன்னனிடம் மிக விசுவாசமாக இருந்தது. மன்னன் சொன்னதைத் தட்டாமல் செய்தது.

ஒரு நாள் மன்னன் தோட்டத்திற்கு உலாவப் போன போது குரங்கும் உடன் சென்றது. தோட்டத்தில், மன்னன் ஒரு நல்ல பாம்பை மிதித்து விட்டான். அது கடிக்க வந்தது. அதைக் கண்ட குரங்கு, சட்டென அதன் கழுத்தைப் பிடித்து நெரித்துக் கொன்று விட்டது.

இதனால் அந்தக் குரங்கின் மீது மன்னனுக்கு மதிப்பு அதிகமாகி விட்டது.





உடனே குரங்கை மெய்க்காவலனாக நியமித்து, அதற்கு வாள் ஏந்த பயிற்சி அளித்தான். அதன் கையில் ஒரு வாளையும் கொடுத்தான்.

ஒரு நாள் மன்னன் அந்தப் புரத்தில் ராணியுடன் பேசிக் கொண்டிருந்தான். அப்போது தோட்டத்தில் இருந்து ஒரு வண்டு பறந்து வந்து அரசனின் தலையில் உட்கார்ந்தது. மன்னன் விரட்ட விரட்ட அது மீண்டும் மீண்டும் மன்னன் மீது உட்கார்ந்தது.

வாசலில் இதைப் பார்த்துக் கொண்டிருந்த குரங்கு, விரைந்து உள்ளே வந்தது. கையிலிருந்த வாளை வீசி வண்டைக் கொல்ல நினைத்தது. ஆனால் வண்டு தப்பிவிட, வாள் மன்னனின் தலையைத் தாக்கி விட்டது.

எதை எப்படி நடத்துவது என்று

அறியாத மன்னனுக்கு மரணமே பரிசானது.

## மர சாட்சி!

ஸ்தல யாத்திரை புறப்பட்ட ஒரு முதியவர் தனது நண்பரிடம், தமது சேமிப்பான நூறு பொற்காசுகளைக் கொண்டுவந்து, "இதைப் பத்திரமாக வைத்துக் கொள்ளும்; நான் யாத்திரை போய் விட்டு வந்து பெற்றுக் கொள்கிறேன்" என்று கொடுத்தார்.

சொன்னது போல், யாத்திரை சென்று திரும்பிய அவர் நேரே நண்பரிடம் போய் கொடுத்த காசைக் கேட்டார்.

ஆனால் நண்பனோ, "என்ன காசா? யாரிடம் கொடுத்தீர்கள். யாத்திரை சென்ற இடத்தில் பித்துப் பிடித்து விட்டதா?" என்று கபடமாகக் கேட்டான்.

முதியவர் எவ்வளவோ கெஞ்சியும் அவரது காசைத் திரும்பப் பெற முடியவில்லை. அவர் நீதிபதியிடம் முறையிட்டார்.

நீதிபதி விசாரித்தார். அவன் காசு வாங்கவே இல்லை என்று சாதித்தான்.

நீதிபதி, முதியவரிடம் "இவரிடம் நீங்கள் பொற்காசு கொடுத்ததற்குச் சாட்சி உண்டா?" என்றார்.

"அய்யா, ஒரு மரத்தடியில் வைத்துக் கொடுத்தேன். அந்த மரம் தான் சாட்சி" என்றார் முதியவர்.

"அப்படியானால் போய் மரத்தை அழைத்து வாருங்கள்" என்றார் நீதிபதி.

முதியவரும் ஏதோ நினைப்பில் மரத்தை அழைக்கப் புறப்பட்டார்.

ஆனால் நெடுநேரமாகியும் சென்றவரைக் காணவில்லை. நீதிபதி, "எங்கே முதியவரை இன்னும் காணவில்லை, வழியில் தூங்கி விட்டாரோ?"என்றார்.

மரமாவது, சாட்சிக்கு வருவதாவது என்று மகிழ்ச்சியில் இருந்த மோசடிப் பேர்வழியின் காதில் அது விழுந்தது. உடனே, "இந்நேரம் அவர் பாதி தூரம் கூடப்

போயிருக்க முடியாதே, எப்படித் திரும்ப முடியும்" என்றான்.

நீதிபதி, "அது எப்படி உனக்குத் தெரியும்? மரம் எவ்வளவு தொலைவில் இருக்கிறது என்பது நீ அந்த மரத்தினடியில் வைத்து பணம் வாங்கியதால் தானே தெரிந்தது? உண்மையை ஒப்புக்கொள். இல்லை எனில் கடும் தண்டனையைப் பெற நேரிடும்" என்றார். அவன் உண்மையை ஒப்புக் கொண்டு, காசைத் திருப்பிக் கொடுத்தான். முதியவர் மரத்தடி வரை போய் திரும்பி வந்தார். 'நான் எவ்வளவோ கேட்டும் மரம் சாட்சி சொல்ல வரவில்லை' என்று வருத்தப்பட்டார்.

நீதிபதி, "பெரியவரே, மரம் வந்து சாட்சி சொல்லிவிட்டுப் போய்விட்டது. பிடியுங்கள் உங்கள் காசை" எனக் கொடுத்தார்.

## வாக்கு சாதுர்யம்

ஒரு பெரிய ஜோதிடர், பேரரசர் அக்பர் அவைக்கு வந்தார். அவரை வரவேற்று உபசரித்த அக்பர், ஒரு ஜாதகத்தை அவரிடம் காட்டிப் பலன் கேட்டார்.

ஜாதகத்தை ஆராய்ந்த ஜோதிடர், "மன்னா, இந்த ஜாதகக்காரர் தமது உறவினர்கள் நண்பர்கள் எல்லோரும் இறந்த பின்பு, கடைசியாக இறப்பார் என அவரது ஆயுள் ஸ்தானம் கூறுகிறது" என்றார்.

அது அக்பருடைய ஜாதகம் தான். இந்தப் பலனைக் கேட்டதும் அக்பருக்குக் கோபம். "நண்பர்களும், உறவினர்களும் இறப்பதைப் பார்ப்பது எவ்வளவு கஷ்டம்? என் ஜாதகத்துக்குத் துர்ப்பலன் சொன்ன இந்த ஜோதிடருக்கு இருபத்து நான்கு கசையடி கொடுத்து அனுப்புங்கள்" என்று உத்திரவிட்டார்.

அவையில் இருந்த பீர்பால், "மன்னா, அந்த ஜோதிடரின் தண்டனையை ஒரு நாள் தள்ளிப் போட வேண்டும்" என்று

கேட்டுக் கொண்டார். அதன்படி தள்ளிப் போடப்பட்டது.

"இன்று இல்லாவிட்டாலும் நாளை அடி வாங்கித் தானே ஆக வேண்டும்" என்று வருத்தப்பட்ட ஜோசியரைத் தனியே அழைத்துப் போன பீர்பால், "ஜோதிடரே, நீங்கள் ஜோதிட சாஸ்திரத்தில் வல்லவர்தான். ஆனால் வாக்கில் கவனம் வேண்டாமா? நான் சொல்கிறபடி செய்யுங்கள். தண்டனையில் இருந்து தப்பி விடலாம்" என்றார்.

மறுநாள் பீர்பாலின் யோசனைப் படி அதே ஜோதிடர் தாடி, மீசையுடன் மாறு வேடத்தில் அரண்மனைக்கு வந்து அக்பரைச் சந்தித்தார்.

உடனிருந்த பீர்பால், "இவரை எனக்கு முன்பே தெரியுமே, நல்ல ஜோதிடராச்சே" என்றார்.

மன்னர் இப்போதும் தமது ஜாதகத்தை



ஜோதிடரிடம் கொடுத்தார்.

அதைப் பார்த்த ஜோதிடர் பீர்பால் சொல்லித்தந்தபடி, "அடடா, இது ஒரு பிரமாதமான ஜாதகம் ஆயிற்றே. இந்த ஜாதகக்காரர், நோய் நொடியின்றி நீண்ட காலம் வாழ்வார். தேக ஆரோக்கியம் சிறப்பாக இருக்கும். இவருடைய நண்பர்கள், உறவினர்களை விட நெடு நாள் வாழ்வார்" என்று முன்பு சொன்னதையே வேறு மாதிரி சொன்னார்.

அதைக் கேட்டு மகிழ்ந்த அக்பர், "ஜோதிடரே, உங்களுக்கு என்ன பரிசு வேண்டும்?" என்று கேட்டார்.

"நேற்று ஒரு ஜோதிடருக்குத் தண்டனை தந்தீர்களே, அதை நீக்க வேண்டும். எனக்கு ஏதாவது பொருள் தர விரும்பினால், அதை அவருக்கே தர வேண்டும். ஏனெனில் அவர் தான் என் குரு" என்றார் ஜோதிடர்.

அக்பர் உடனே நடந்ததை ஊகித்து விட்டார். தம்மை ஒரு அநீதி இழைப்பதி லிருந்து காத்த பீர்பாலுக்கும் சேர்த்து பரிசு வழங்கினார்.

ஜோதிடமும் உண்மையாகச் சொன்னால் போதாது; அதை நயம்படவும் உரைக்க வேண்டும் என்று புரிந்து கொண்டார்.

## புகழ் மோகம்

கோடியக்காடு எனும் காட்டில் வசித்து வந்த நரிகளுக்கு முயல், காட்டுக் கோழி போன்ற சிறு பிராணிகளைச் சாப்பிடுவதில் சலிப்பு ஏற்பட்டது. அதோடு அவை ஒரு நாளைக்குத்தான் உணவாவதால், தினம் வேட்டைக்குக் கிளம்ப வேண்டியுள்ளதே என்று அலுத்துக் கொண்டன.

அதற்காக நரிகள் கூடி திட்டம் போட்டன. "எப்படியாவது ஒரு யானை யைக் கொன்றால், நான்கு மாதங்களுக்குப் போதுமானதாக இருக்கும். உட்கார்ந்த இடத்திலேயே தின்று பொழுதைக் கழிக்க

லாம்" என்று தமக்குள் பேசிக் கொண்டன.

அப்போது ஒரு இளைய நரி, "யானை போன்ற பெரிய விலங்கைக் கொல்வது சாத்தியமா?" என்று கேட்டது.

"யானையைக் கொல்வது என்பதெல்லாம் பகல் கனவுதான்" என்றது மற்றொரு சிறு நரி.

ஒரு கிழட்டு நரி எழுந்து, "புத்தி பலத்தால் யானை போன்ற விலங்கையும் கொல்ல முடியும். நமக்கு உடல் சிறியது என்பதால் யாரும் பயப்படத் தேவையில்லை. புத்தியை நம்புங்கள்" என்றது.

"அப்படியா? முடியுமா?" என்றது சிறு நரி. 'செய்து காட்டுகிறேன்' என்று புறப்பட்ட கிழட்டு நரி, ஒரு யானை முன் போய் நின்று விழுந்து வணங்கியது. "அய்யா, தாங்கள் அருள் கூர்ந்து, உங்கள் கடைக் கண் பார்வையை என் மீது வைக்க வேண்டும்" என்றது.



நரியை ஏறெடுத்துப் பார்த்த யானை "என்ன விஷயம் சொல்?" என்றது.

"அய்யா, நீங்கள் வாழும் இக்காட்டில் தான் எங்கள் நரி இனமும் வாழ்கிறது காட்டில் வாழும் பிராணிகள் எல்லாம்

ஒன்று சேர்ந்து ஒரு முடிவெடுத்துள்ளன. காட்டுக்கு அரசன் தேவை. அப்பொறுப்பை நீங்கள் தான் ஏற்க வேண்டும்'' என்றது கிழ நரி.

யானை யோசிப்பது போல் பாவனை செய்தது. அதைக் கண்ட நரி, "இதில் யோசிக்க என்ன இருக்கிறது? எல்லா விலங்குகளாலும் ஏகோபித்த நிலையில் தேர்வு செய்யப்பட்ட நீங்கள், நல்ல நேரம் கடப்பதற்கு முன் வந்து பதவி ஏற்பது தான் சரி'' என்றது.

நரியின் சொல் கேட்ட யானையும், 'சரி வா போகலாம்' என்று நரியைத் தொடர்ந்து சென்றது.

வழியில் ஒரு குழி நிறையச் சேறு இருந்தது. நரி வேண்டுமென்றே அதைத் தாண்டி ஓடியது. பதவி மோகத்தில் இருந்த யானை, சேற்றில் சிக்கிக் கொண்டது. யானை கத்தியது. "என்னைக் காப்பாற்று'' என்றது.

நரி, "முடிந்தால் என் வாலைப் பிடித்துக் கொண்டு எழுந்திருங்கள்'' என்று கிண்டலாய்ச் சொன்னது.

யானை பரிதாபமாகப் பிளிறியது.

நரி ஓடிப்போய் தன் கூட்டத்தாருடன் வந்து, "நமக்கு உணவாகப் போகும் யானையைப் பாருங்கள். கொழுத்துப் போய் கிடக்கிறது அல்லவா? நாலு மாதம் என்ன, நாம் ஆறு மாதங்கூட விருந்து உண்ணலாம்'' என்றது.

யானையைப் பார்த்த நரிகள் உல்லாசமாய் ஊளையிட்டு மகிழ்ந்தன.

*நீதி: 1.* அடுத்தவர் புகழும் போது அதை ஆராயாமல் கேட்டு மகிழ்பவன், கடைசியில் துன்பத்தில் போய் முட்டிக் கொள்வான்.

*நீதி: 2.* தந்திரமானவன் பலசாலியான எதிரியையும் வீழ்த்தி விடுகிறான்.

## செல்வத்தின் பெருமை

வேதவனம் என்ற ஊரில், பாழடைந்த

மடம் ஒன்று இருந்தது. அதன் திண்ணையில் சதம்ப வர்ணன் என்கிற சந்நியாசி வசித்து வந்தான்.

தினந்தோறும் பகல் நேரத்தில் தெருத்தெருவாகப் பிச்சை எடுப்பது அவன் வழக்கம். உணவாக இருப்பதைச் சாப்பிட்டுவிட்டு, அரிசி போன்றவற்றை ஒரு பானையில் போட்டு, உறியில் தொங்கப்போட்டு சேமிப்பான். ஒரு எலி தினமும் அவன் சேமிப்பைத் தின்று கொழுத்து வந்தது.

ஒரு நாள் சந்நியாசியின் நண்பன் கருந்தேகன், அவனைக் காண வந்தான். சந்நியாசியுடன் பேசிக் கொண்டிருந்தான். அப்போது சதம்ப வர்ணன் ஒரு கம்பால் தரையைத் தட்டிக் கொண்டே இருந்தான்.

அதைக் கவனித்த கருந்தேகன், "நான் பேசுவதைக் கவனிக்காமல் வேறு ஏதோ செய்து கொண்டிருக்கிறாயே



சரியா? உன்னைத் தேடி வந்து பேசுபவர்களிடம் இப்படியா நடந்து கொள்வது?'' என்றான்.

சதம்ப வர்ணன், "நண்பனே, கோபிக்காதே, நீ சொல்வதை கவனமாகக் கேட்டுக் கொண்டுதானிக்கிறேன். அசந்த நேரத்தில் ஒரு எலி, நான் பிச்சை வாங்கி வைத்திருக்கும் பொருளைத் தின்று விடுகிறது. அதனால் கம்பால் தட்டி ஓசை எழுப்பிக் கொண்டிருக்கிறேன்" என்றான்.

"கொஞ்சம் தட்டுவதை நிறுத்து, நானும் அந்த எலியைப் பார்க்கிறேன்" என்றான் கருந்தேகன். தட்டுவதை நிறுத்தினான் சதம்ப வர்ணன். எலி ஓடி வந்து உறியின் கீழே நின்று தாவிக் குதித்தது.

கருந்தேகன் "இந்தச் சுண்டெலி இவ்வளவு தூரம் தாவிக் குதிக்க ஏதோ ஒரு காரணம் இருக்க வேண்டும். இல்லையெனில் நீ உயரத்தில் தொங்கவிட்டிருக்கும் உறியை அதனால் எட்டிப் பிடித்து விட முடியுமா?'' என்றான்.

'நீ என்ன சொல்கிறாய்?'' என்றான் சதம்ப வர்ணன். சிறிது யோசித்து விட்டு கருந்தேகன், "இந்த உலகில் பணக்காரன் எங்கும் எப்பொழுதும் ஆதிக்கம் செலுத்துகிறான். பணம் தரும் துணிச்சலும் தைரியமும் வேறு எதுவும் தருவதில்லை. எனவே இந்த எலியிடம் ஏராளமான செல்வம் இருக்க வேண்டும்" என்றான். "அப்படியா?" என்ற சதம்ப வர்ணன், உடனே ஒரு கடப்பாரையைக் கொண்டு வந்து எலியின் வளையைத் தோண்டினான். அதில் எலி சேகரித்து வைத்திருந்ததை இருவரும் எடுத்துப் பங்கிட்டுக் கொண்டனர்.

அதோடு மட்டுமல்ல, செல்வத்தை இழந்த எலியால் முன்போல் உற்சாகமாக நடமாட முடியவில்லை. தாவிக் குதித்து உறியில் ஏறவும் முடியாமல் சோர்ந்து போனது.

நீதி: 1. செல்வமே முட்டாளைக் கூட

புத்திசாலியைப்போல் நடக்க வைக்கிறது.

நீதி: 2. செல்வம் உள்ளவன் எதையும் செய்யத் துணிந்து விடுகிறான். செல்வமற்ற ஏழை பலமிருந்தும் எதிலும் தயக்கம் காட்டுகிறான்.



## முட்டாளின் கல்வி

காட்டில் வாழ்ந்த ஒரு ரிஷியிடம் பாடம் கற்கப் போன இளைஞன் ஒருவன் ஊருக்குத் திரும்பி வந்தான்.

அவன் கற்ற கல்வியால், ஊருக்கு நன்மைகள் நடக்கும் என்று எதிர்பார்த்த மக்கள், அன்புடன் வரவேற்றனர்.

அந்த கர்வம் பிடித்த இளைஞன், "நான் கற்காத கலைகள் இல்லை. இறந்தவர்களை உயிருடன் எழுப்பும் சஞ்சீவி மந்திரம் கூட அறிவேன்" என்று பீற்றிக் கொண்டான்.

"அதெல்லாம் முடிகிற காரியமா?" என்றார் ஒரு முதியவர்.



'நிச்சயமாக" என்றான் இளைஞன்.

இருந்தாலும் அவன் பதிலில் அந்த முதியவருக்கு நம்பிக்கை ஏற்படவில்லை.

"சரி சரி, அதெல்லாம் எதுக்குப்பா, நமக்கு விதி வந்தால் சாக வேண்டியது தானே. உன் கல்வியால் வேறு ஏதாவது பலன் உண்டா?" என்றார் அவர்.

அவர் இப்படிச் சொல்லியதால் இளைஞனுக்கு கோபம் ஏற்பட்டது. உடனே அவன், "எங்கே, இறந்து போன ஒரு ஜீவனைக் கொண்டு வாருங்கள். உயிரூட்டிக் காட்டுகிறேன். பிறகுதான் மறுவேலை" என்றான்.

அப்போது ஊருக்கு வெளியே ஒரு புலி இறந்து கிடந்தது.

ஊருக்குள் புகுந்து அட்டகாசம் செய்த அந்தப் புலியை, மக்கள் ஒன்று கூடி, அரும்பாடுபட்டு கொன்றிருந்தனர்.

அதனைக் கண்ட இளைஞன் சந்தோஷ மிகுதியில் குதித்தான். "இதோ பாருங்கள், இறந்த புலியை உயிருடன் எழுப்பிக் காட்டுகிறேன்" என்று கூறிவிட்டு மந்திரத்தை

ஜபிக்க ஆரம்பித்து விட்டான்.

முடிவில் புலி உயிருடன் எழுந்து நின்று கர்ஜித்து, மக்கள் மீது பாய, எல்லோரும் ஓட்டம் பிடித்தனர்.

புலி அந்த இளைஞன் மீதே பாய்ந்து அவனைக் கொன்றுவிட்டு, காட்டிற்குள் ஓடியது.

பிறகு வந்து பார்த்த மக்கள், "அடடா, ஒரு நல்ல கல்வியாளனை இழந்து விட்டோமே" என்று வருத்தப்பட்டனர்.

முதியவர், "இதில் வருத்தப்பட ஒன்றுமில்லை. இவன் பெற்ற கல்வியால் ஊருக்கு நன்மையைவிட கெடுதலே அதிகம்" என்றார்.

நீதி: நல்லதற்குப் பயன்படாத கல்வியால் தீமையே அதிகம்.

## விரல்களின் விவாதம்

ஒரு குத்துச் சண்டை வீரன் ஓய்வு எடுக்க, தனது தோட்டத்தில் கயிற்றுக் கட்டிலை எடுத்துப் போட்டுப் படுத்தான். காற்று சிலுசிலுவென வீச, கண்ணயர்ந்து தூங்கிவிட்டான்.

அவன் தூங்கிய பிற்பாடு ஆரம்பித்தது அந்தச் சர்ச்சை.

அவனின் கை விரல்கள் ஒன்றுடன் ஒன்று பேச ஆரம்பித்தன. அவற்றின் பேச்சு, 'நான் பெரியவனா? நீ பெரியவனா?' என்று பெரும் வாக்குவாதத்தில் போய்க் கூச்சலாகி விட்டது.

பெருவிரல் "நான் இல்லாவிட்டால் ஒரு காரியமும் செய்ய முடியாது. நீங்க நாலு பேரும் ஒரு பக்கம், நான் தனி ஆளா, ஒரு பக்கம் நின்றால்தான் எதுவும் செய்ய முடியும். துரோணாச்சாரியும் ஏகலைவன் கிட்ட காணிக்கை கேட்டது என்னைத்தான். அதிலிருந்து புரியலையா உங்களுக்கு என் பெருமை? நான் தான் உங்களில் பெரியவன்" என்றது.



ஆட்காட்டி விரல் அடுத்து ஆரம்பித்தது தன் புராணத்தை, "மனிதர்கள் தேடுகிற பொருளை இதோ... அதோ... எனச் சுட்டிக் காட்டி அடையாளம் சொல்கிறவன் உங்களில் நான்தான். எனவே நானே பெரியவன்" என்று முழங்கியது.

நடுவிரலும், "அட போங்கப்பா, நாமெல்லாம் வரிசையில் நின்று பார்ப்போம், தெரிந்து விடும். நானே உயரமானவன், உங்களில் பெரியவன்" என்று அதட்டலாகக் கூறியது.

இவற்றை எல்லாம் கேட்டு நக்கலாகச் சிரித்த மோதிர விரல், "சும்மா வாய் சவடால் விடாதீங்க, உலகத்தில் விலை மதிப்புமிக்கது தங்கம், வைரம் தான். அந்தத் தங்க மோதிரத்தை மனிதன் என்னை நம்பித்தான் கொடுத்து வைக்கிறான்"

என்றது.

சும்மா இருக்குமா சுட்டு விரல்? அதுவும் வாய் திறந்தது, "நிறுத்துங்க உங்க வாதங்களை. மனிதன் தன்னை விடப் பெரிதாக நினைப்பது தெய்வத்தைத் தான். அந்தத் தெய்வத்தைக் கை கூப்பி வணங்கும் போது முன்னால் நிற்பவன் யார்? நான்தான். என் பின்னால்தான் நீங்கள் எல்லாம். தெரிஞ்சுக்குங்க."

விரல்கள் சண்டை போட்டுக் கொண்டிருக்கும் போது, இந்த வீரனிடம் போட்டியிட்டுத் தோற்ற ஒரு வீரன், தோட்டத்தில் புகுந்து தாக்க வந்தான்.

அருகே ஆள் வரும் அரவம் கேட்டுத் தூங்கிக் கொண்டிருந்தவன் எழுந்து, எதிரியின் முகத்தில் ஒரு குத்து விட்டான். எதிரி ஓடியதும் திரும்பவும் படுத்துக் கொண்டான்.

சட்டென ஒன்றுபட்ட விரல்களுக்கு விழிப்புணர்வு வந்துவிட்டது. "அட, அஞ்சு பேரும் ஒன்று சேர்ந்ததால்தான் எதிரியை வீழ்த்த முடிந்தது. இல்லாவிட்டால் என்னவாகி இருப்போம்" என எண்ணின.

நீதி: ஒற்றுமையே பலம்.

## ஒரு விரல்

அந்தக் கிராமத்துக்கு ஒரு சாமியார் விஜயம் செய்திருந்தார். கிராமச் சாவடியின் மரத்தடியில் உட்கார்ந்து இருந்த அவரின் தோற்றமே பலரையும் கவர்வதாக இருந்தது.

அருகில் சென்று விசாரித்தவர்களிடம் அனுகூலமாக நடந்து கொண்ட சாமியார், அணுகியவர்களின் கஷ்டம் விலக யோசனையும் கூறி வந்தார்.

சாமியாரின் ஆசியால் நன்மைகள் நடக்கிறது என்கிற தகவல் கிராமத்தில் பரவியது. அதனை அடுத்து அவர் முன் நாள்தோறும் கூடிய கூட்டத்தை அளவிட முடியாது.

கிராமத்தில் படித்துப் பட்டம் பெற்ற இரு இளைஞர்கள் நட்புறவுடன் பழகி வந்தனர். அவர்கள் படித்தவர்கள் என்பதால் கிராமத்தில் கூடுதல் மதிப்பும் பெற்றிருந்தனர்.

அவர்கள் இருவரும் வேலைக்கு விண்ணப்பித்திருந்தனர். நேர்முகத் தேர்வுக்கும் சென்று வந்தனர்.

ஆனால் வேலை கிடைக்குமா? என்பதில் இருவருக்கும் ஐயமிருந்தது.

எனவே இருவரும் சேர்ந்து சாமியாரிடம் போனார்கள்.

சாமியார் விவரத்தைக் கேட்டு விட்டு ஒரு விரலை மட்டும் உயர்த்திக் காட்டினார். சாமியாரின் சூசகமான பதிலின் பொருள், இருவரில் ஒருவருக்கே வேலை கிடைக்கும், என்பதாகப் புரிந்து கொண்ட அவர்கள் கோபமாகத் திரும்பினர். அவர்களை எதிர்கொண்ட கிராமத்துப் பெரியவர் ஒருவர், "என்னப்பா, எங்கே போயிட்டு வர்றீங்க?" என்றார்.

அவர்கள் நடந்ததைச் சொன்னார்கள்.

அதைக் கேட்டு வாய்விட்டுச் சிரித்த அவர், "இது தெரியலையா? இருவருக்குமே வேலை கிடைத்து விட்டால் அவர் சொன்னதன் பொருள் ஒருவருக்கும் கிடைக்காமல் போகாது என்பதாகவும், இருவருக்குமே கிடைக்காமல் போய்விட்டால், ஒருவருக்குமே கிடைக்காது என்பதாகவும் ஒருவருக்கு கிடைத்தால் நேரடியாக அதே பொருளாகவும் அமையும். மூன்று பதில்களைக் கொண்ட தந்திரமான பதில் அது. ஆகவே சாமியார் சொன்னதை நம்பி கவலைப்படாமல் உங்கள் வேலையைப் பாருங்கள். படித்த உங்களுக்கு இப்படி எல்லாம் மூட நம்பிக்கை கூடாது" என்றார்.

ஒரு விரல் காட்டியதற்கு மூன்று அர்த்தங்களைப் புரிந்து கொண்ட இளைஞர்கள் சாமியாரின் தந்திரத்தை அறிந்து திருந்தினர்.

நீதி: 1. மறை பொருளை நம்பி மனந்தளரக் கூடாது.

நீதி: 2. மூட நம்பிக்கைகளில் மூழ்கி அறிவை இழக்கக் கூடாது.

## கெட்ட நட்பு



கடைக்குப் போய் திரும்பிக் கொண்டிருந்த ஆமை, வழியில் ஒரு தேளைச் சந்தித்தது. "நாம் இருவரும் சிநேகமாக இருக்கலாமே" என்றது தேள்.

"கொடுக்கில் விஷம் வைத்திருக்கும் உன்னுடன் எப்படிச் சிநேகம் கொள்வது?" என்றது ஆமை.

"நான் எப்போதும் உனக்கு எந்தக் கெடுதலும் செய்ய மாட்டேன்" என்று உறுதியளித்தது தேள்.

"அப்படியானால் சரி" எனச் சம்மதித்தது ஆமை. இரண்டும் நட்புடன் இருந்தன.

ஒரு நாள், ஆமைக்கு தூரத்தில் இருக்கும் உறவினரைப் பார்க்க ஆசை உண்டாயிற்று.

அது தேளிடம் சொல்லிக் கொண்டு புறப்பட்டது. உடனே தேள் "என்னைத் தனியே விட்டுப் போகிறேன் என்கிறாயே, எனக்கு எப்படிப் பொழுது போகும்? நானும்

உன்னுடன் வருகிறேன்" என்று புறப்பட்டது.

இரண்டும் பேசிக் கொண்டே நடந்தன. வழியில் ஒரு நதி குறுக்கிட்டது. அதைக் கண்டது தேள், "அய்யோ, நான் எப்படி ஆற்றைக் கடப்பேன். எனக்கு நீந்தவும் தெரியாதே" என்று அலறியது.

"நண்பா வருந்தாதே, என் முதுகில் ஏறிக் கொள். சுமந்து சென்று அக்கரையில் விடுகிறேன்" என்றது ஆமை.

தேள் ஏறிக் கொள்ள, ஆமை ஆற்றில் இறங்கி நீந்தியது. நடுவழியில் தேள், ஆமையை நறுக்கென்று கொட்டிவிட்டது.

துடிதுடித்த ஆமை, தேளைப் பார்த்து, "ஏன் இப்படிச் செய்தாய்?" என்றது கண்ணீரோடு.

"என்ன செய்வது, அது என் சுபாவம். நான் சும்மா இருந்தாலும் என் கொடுக்கு சும்மா இருக்காது. எதையும் கொட்டுவது அதன் பிறவிக் குணம்" என்றது தேள்.

துஷ்ட சிநேகம் என்றைக்கும் ஆபத்துதான் என்பதை உணர்ந்த ஆமை, "அப்படியா? கொட்டுவது உன் சுபாவம், ஆனால் அடிக்கடி நீரில் மூழ்கி விடுவது என் சுபாவம்" என்றவாறே ஆற்றில் மூழ்கி மறைந்தது.

பாவம், தேள் நீரில் தத்தளித்து மூச்சுத் திணறி இறந்து போனது.

நீதி: கெட்ட நண்பர்கள் ஒரு நாளும் நன்மை செய்வதில்லை.

## நரியின் கதி

தமிழகத்தின் தென் கோடியில் உள்ளது வேம்பதேவன் காடு. அதில் வைரவன் எனும் வேடன் இருந்தான்.

ஒரு நாள் காட்டின் மையப் பகுதி வரை சென்று நல்ல கொழுத்த மானை வேட்டையாடி, தோளில் போட்டுக் கொண்டு வரும்போது, வழியில் முரட்டுக்

காட்டுப் பன்றி ஒன்றைக் கண்டான்.

உடனே மானை இறக்கிக் கீழே வைத்து விட்டு, காட்டுப் பன்றியை அம்பினால் அடித்தான்.

வலியால் துடித்த பன்றி வேடன் மேல் பாய்ந்து இடி போல் தாக்கியது. வேடன் வேர் அறுந்த மரம் போல் சாய்ந்தான்.

அச்சமயம் அவ் வழியே ஓடிய பாம்பு ஒன்றும் வேடன் விழுந்த வேகத்தில் அடியில் சிக்கி நசுங்கிச் செத்தது.



சிறிது நேரங் கழித்து அந்த இடத்திற்குப் பசியோடு வந்த ஒரு நரி, மானும் வேடனும் பன்றியும் பாம்பும் இறந்து கிடப்பதைக் கண்டு துள்ளிக் குதித்தது. "ஆகா! நல்ல விருந்து கிடைத்திருக்கிறது'' என்று மகிழ்வடைந்தது.

எதிர்பாராத துன்பம் வருவது போலவே எதிர்பாராத இன்பம் வந்து சேர்வதும் உண்டு தான். "நல்லது, இந்தப் பிராணி

களின் இறைச்சியைத் தின்று மூன்று மாத காலத்தை இன்பமாகக் கழிக்கலாம்" என நினைத்து நரி.

'மனிதனின் இறைச்சி ஒரு மாதத்திற்குப் போதும், மானும் பன்றியும் இரண்டு மாதத்திற்குப் போதும், பாம்பு ஒரு நாளைக்குப் போதும். இன்றைக்கு வில்லின் நாணைச் சுவைக்கலாம்' என்று கணக்குப் போட்டது.

அதன்படி, நரி வில்லின் நாணின் ஒரு முனையைக் கடித்தது. அது சட்டென அறுந்தது. இழுத்துக் கட்டப்பட்டிருந்த நாண் அறுந்ததில் பட்டென விடுபட்ட வில் நரியின் மார்பைக் கிழித்தது. நரியும் அதே இடத்தில் உயிரை விட்டது.

கிடைத்த உணவை உறவினர்கள், நண்பர்களை அழைத்து, கூடி உண்டு மகிழ்ந்திருக்கலாம். ஆனால் நாளைக்கு என்று கணக்குப் போட்ட நரி, விதி போட்ட கணக்குக்குத் தப்பாமல் இன்று உயிரை விட்டது.

நீதி: சுகம் அனுபவிக்காமல் செல்வத்தைச் சேமித்து வைக்கும் கருமி, பிறர் பொருட்டுச் சுமை தூக்கி வருந்தும், சுமை தாங்கி போலாவான்.

## தங்கச் சிறகு

ஒரு வாத்துக்குத் தனது முற்பிறவி நினைவுகள் வந்தன. அது ஒரு மனிதனாகவும் தனது மனைவியையும் இரண்டு பெண் குழந்தைகளையும் விட்டுவிட்டு, விபத்தில் இறந்தது போலவும் உணர்ந்தது..

இந்த நினைவுகள் அந்த வாத்துக்கு வரவே, அது தனது முதற் பிறவியின் மனைவி, மக்களைத் தேடிச் சென்று கண்டு பிடித்து விட்டது.

அவர்கள் வறுமையில் சங்கடப் பட்டுக் கொண்டிருந்தது கண்டு வருந்தியது. இறைவனை வழிபட்டு தனது சிறகுகளில்

தினம் ஒன்று தங்கமாக வேண்டும் என்று கேட்டுக் கொண்டது.

அதன்படி இறைவனும் அதற்கு வரம் தந்தான்.

உடனே அந்த வாத்தின் சிறகு ஒன்று தங்கமானது. அதனை எடுத்துப் போய் தன் முற்பிறவி மனைவியிடம் கொடுத்தது. அவர்களுக்கு வாத்தின் செய்கை ஆச்சரியமளித்தது.



அவர்கள் வாத்திடம் விசாரித்தனர். வாத்தும் தனது முற்பிறவி வரலாற்றைச் சொல்லி, 'உங்களுக்கு உதவ வந்திருக்கிறேன்' என்று சொல்லிவிட்டு, தனது இருப்பிடத்திற்குத் திரும்பி விட்டது. அவர்கள் மகிழ்ச்சி அடைந்து, அந்த தங்கச் சிறகை விற்று, பணம் பெற்று நலமாக வாழ்ந்தார்கள்.

வாத்தும் நித்தம் ஒரு தங்கச் சிறகைக் கொண்டு வந்து கொடுத்தது.

ஒருநாள் இந்தக் கதையை கேட்ட பக்கத்து வீட்டுப் பெண்மணி, "இந்த வாத்து, நித்தம் வரும் என்பது என்ன நிச்சயம்? ஆகவே அந்த வாத்தின் எல்லாச் சிறகு

களையும் பிய்த்து வைத்துக் கொள்ளுங்கள்" என்று யோசனை கூறினாள்.

'அது சரிதான்' என்று நம்பிய வாத்தின் முற்பிறவி மனைவி, மறுநாள் அந்த வாத்து வந்ததும் அதனைப் பிடித்து, எல்லாச் சிறகுகளையும் வெட்டி எடுத்துக் கொண்டாள்.

அதனால் அந்த வாத்து பறக்க முடியாமல், இரை தேடிப் போக முடியாமல் உயிரை விட்டது.

அதோடு வாத்தில் இருந்து வெட்டப்பட்டச் சிறகுகள் தங்கமாக மாறாமல் வெள்ளையாக இருந்தன.

அதனைக் கண்டு, 'தினம் கிடைத்து வந்த உதவியை பேராசையால் இழந்தோமே' என வருந்தினார்கள் வாத்தின் முற்பிறவி குடும்பத்தார்.

நீதி: எப்போதும் உதவி செய்பவர்களை மதித்து நடக்க வேண்டும். இல்லையேல் நன்மைகளை இழக்க வேண்டியதுதான்.

## தவத்திரு ஓநாய்!

ஒரு கபட நெஞ்சுள்ள ஓநாய், உழைக்காமல் சாப்பிட ஒரு தந்திரம் செய்தது.

எலிகள் நிறைய வாழும் பகுதிக்கு வந்த ஓநாய், எலிகளின் வளைகளுக்கு எதிரே ஒற்றைக்காலில் நின்று கொண்டு, காற்றை மூக்கால் உறிஞ்சியபடி சூரியனைப் பார்த்து தவம் செய்வது போல் காட்சியளித்தது.

இரை தேடுவதற்காக வளையை விட்டு வெளியே வந்த எலிகள், ஓநாய் ஒற்றைக் காலில் நிற்பதைக் கண்டு அதிசயித்து அதன் அருகில் வந்தன. என்றாலும் பயத்தில் கொஞ்சம் விலகியே நின்றன.

அதைக் கண்ட ஓநாய், "குழந்தைகளே, ஏன் அஞ்சுகிறீர்கள். நான் மற்ற ஓநாய்கள் போன்றவன் அல்ல. நான் துறவு மேற்கொண்டு விட்டேன்" என்றது.

ஒரு வயதான எலி, "அதுசரி, இப்போது நீங்கள் என்ன செய்கிறீர்கள்?" என்றது.

அதற்கு ஓநாய், "நான் சூரியனை நோக்கி தவம் செய்து கொண்டிருக்கிறேன்" என்றது.

"ஏன் ஒற்றைக் காலில் நிற்க வேண்டும்?" என்றது எலி.

"நான் தவ வலிமை மிக்கவன். நான்கு கால்களாலும் நின்றால் இந்த பூமி தாங்காது. வானத்தில் இருந்து பாதாளத்தில் விழுந்து விடும்" என்றது ஓநாய்.



"அப்படியானால் எப்படி இரை தேடப் போவீர்கள்?" என்றது ஒரு குட்டி எலி.

"இரையை நான் தேடுவதாவது? நான் காற்றையே புசித்து வாழ்கிறவன்" என்றது ஓநாய்.

"ஆகா, நீங்கள் எவ்வளவு பெரிய ஞானி" என்று புகழ்ந்த எலிகள், அன்று முதல் இரை தேடப் போகும் போதும், திரும்பும் போதும் அதன் முன் நின்று வழிபட்டு விட்டுச் சென்றன.



ஆனால், அந்த ஓநாய் அதன் முன் தனியாக வந்து நின்று வணங்கும் எலியை, யாரும் பார்க்காத போது, 'லபக்'என்று பிடித்துத் தின்று வந்தது.

இப்படியாக அது எலிகளை உண்டு உல்லாசமாக வாழ்ந்தது.

எலிகளின் எண்ணிக்கை வெகுவாகக் குறையவே, அவை இனி தனியாக எங்கும் செல்வதில்லை என முடிவு எடுத்தன. இதனால் ஓநாயின்

பாடு திண்டாட்டமாகி விட்டது. ஒரு நாள் பசி பொறுக்காத ஓநாய் ஜோடியாக வந்த இரு எலிகளை ஒரே சமயத்தில் பிடித்தது. ஆனால் ஒரு எலி எப்படியோ தப்பி ஓடி விட்டது.

அது, தன் கூட்டத்தாரிடம் போய் சொல்ல, எலிகள் ரகசியமாக ஓநாயின் நடவடிக்கைகளைக் கண்காணித்து உண்மையை அறிந்து கொண்டன.

உடனே எல்லா எலிகளும் ஒன்று கூடி, கபட வேடம் போட்ட ஓநாய் மீது விழுந்து தாக்கின. பல எலிகள் ஒரே சமயத்தில் தாக்கியதால் தாக்குப் பிடிக்க முடியாத ஓநாய் உடல் எங்கும் ரத்தம் சொட்டச் சொட்ட தப்பி ஓடியது.

நீதி: பல நாள் திருடன் ஒரு நாள் அகப்படுவான்.

## நம்பிக்கை

நாரதருக்குக் கொஞ்சம் தலைக்கனம் அதிகம் உண்டானது, எல்லோரையும் விட மகாவிஷ்ணுவிடம் தமக்குத்தான் அதிகப் பிரியம் என்பதாக. சோதனை பண்ணுவது தானே பரந்தாமனின் நோக்கம்?

மண்டைவலி, வேதனை என்று துடிப்பதாக ஒரு பாவனை, என்னென்னவோ மூலிகைகள், ஏதும் பலன்தரவில்லை. "பரம பக்தனின் பாத தூளி கொஞ்சம் கிடைத்தால் போதும். குணமாகிவிடும்'' என்று சொல்லிக் கொண்டே திருமகளைப் பார்த்துப் புன்னகைத்தார் பகவான்.

நாரதர் உடனே ஓடினார். யார் யாரை எல்லாமோ சந்தித்துப் 'பரம பக்தன்' யார் என்று தேடியலைந்தார். யாரும் சரியாய்க் கிடைக்கவில்லை. கவலையோடு யமுனை நதிக் கரையில் போய் அமர்ந்து கொண்டார் நாரதர். கோபிகைகள் நிறையப் பேர் ஆற்றங்கரை மணலில் ஆடிப்பாடிக் கொண்டிருந்தார்கள். ஒருத்தி நாரதரிடம் வந்து "என்ன செய்தி? ஏன் இப்படிச்

சோர்ந்து போய் அமர்ந்திருக்கிறீர்கள்?" என்று கேட்டாள். நாரதர் உடனே, பரந்தாமனின் தலைவலிக் கதையையும் அதற்கு அவர் கேட்ட வினோத மருந்தையும் பற்றிச் சிரத்தையில்லாமலே சொன்னார். உடனே அந்தப் பெண் துள்ளிக் குதித்துத் தன் தோழிகளை அழைத்தாள்.

"இவ்வளவுதானே! நாங்கள் எல்லாம் அந்தக் கண்ணனின் பரம பக்தைகள் இல்லையோ. இந்தாருங்கள், கொண்டு போய்க் கொடுங்கள்" என்று சொல்லிக் கொண்டே, ஆற்று மணலில் குதித்து ஆடி அதில் கொஞ்சம் கூடையில் எடுத்து நாரதரிடம் தந்தார்கள். அவர்களின் கபடமற்ற பக்தி நாரதரின் கண்களைத் திறந்தது. தாமும் பரந்தாமனின் பக்தன்தானே என்கிற உணர்வும் வந்தது.

## குதிரைக்குத் தீனி

ஒரு மத போதகர் அந்த அரங்கத்துக்கு



உரையாற்ற வந்தார். அரங்கில் ஒருவன் மட்டுமே அமர்ந்திருந்தான் முதல் வரிசையில்!

தம்மால் உரையாற்ற முடியுமா என்று போதகர் சற்று யோசித்தார். அந்த ஒற்றை ஆளிடமே கேட்டார். 'நீ மட்டும்தானே வந்திருக்கிறாய், நீயே சொல், நான் உரையாற்றவா, வேண்டாமா?". அந்த ஆள் சொன்னான், "ஐயா! நான் மிகவும் சாமானியமான ஆள். தாங்கள் சொல்லக் கூடிய பல

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05*
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 * Registered as a Newspaper in Srilanka.
Supplement to the Kalki issue Dated 18.5.2003

விஷயங்கள் எனக்குப் புரியாது. இருந்தாலும் பேசுங்கள். நான் குதிரைக் கொட்டடிக்குத் தீவனம் கொண்டு போகிறபோது, எல்லாக் குதிரைகளும் வெளியே போய்விட்டிருக்கும். ஒன்று அங்கே இருந்தாலும் அதற்கான தீவனத்தைப் போடாமல் வர மாட்டேன்."

உடனே அந்த போதகர் கேட்கிறவன் ஒருவன் தானே என்று அலட்சியப்படுத்தாமல், விரிவாக ஒரு மணி நேரம் போல் உரையாற்றினார். பேச்சை முடித்ததும் "நண்பா! எப்படியிருந்தது என் பேச்சு?" என்று கேட்டார்.



"நான்தான் முன்னமேயே சொன்னேனே ஐயா. நான் ரொம்பச் சாதாரணமானவன். ஆனாலும் குதிரைக் கொட்டடிக்குத் தீவனம் போடுகிறபோது, கொண்டு போனது அவ்வளவையும் போட்டுவிட மாட்டேன். ஒரு குதிரைக்கு எவ்வளவு வேண்டுமோ அதை மட்டும்தான் போடுவேன்" என்று சொன்னான் அந்த 'ரசிகன்'!

தொகுப்பு: **ரா. சுந்தரமூர்த்தி,**
**சுப்ர.பாலன்**

